ஸ்ரீ:

சாஸனத்

# தமிழ்க்கவி சரிதம்



சென்னை யூனிவர்ஸிடி 'தமிழ் - லெக்ஸிகன்' ஆபீஸ்
தலைமைப் பண்டிதர்
இராமநாதபுரம்
மு. இராகவையங்கார்
எழுதியது.



1937.



விலை ரூபா 1-4-0.

# உரிமையுரை.



பேரைப் படைத்துப் பெருவேந்த ராற்பெற்ற
சீரைப் படைத்துச் சிறியே னையும்படைத்த
ஏரைப் படைத்தகவி எந்தைக்கிந் நூலுரிமை
நேரப் படைத்தேனெண் ணீரே படைத்தேனே.



ஸ்ரீ:

# நூன் முகம்.

---

சென்னைச் சருவகலாசங்கத்தாரது நியமனத்தின்மேல் 'இலக்கிய சாஸன வழக்காறுகள்' என்ற பொருட்கூறுபற்றி 1929ஆ பிப்ரவரியீ யான்புரிந்த உபந்யாசக் கட்டுரைகளை அறிஞர் பலரும் அறிந்திருத்தல்கூடும். அவை—அரசர், தலைவர், புலவர், வழக்குக்கள் என்ற நான்குபிரிவினவாய், முற்காலம் இடைக்காலம் பிற்காலம் என்ற முறையில் வைத்து, இலக்கியங்களும் சாஸனங்களும் ஒன்றுக்கொன்று உதவும் நெறியை விளக்குவனவாகும். அக்கட்டுரைகளை அக்காலத்து நேரிற்கேட்ட தமிழன்பர்பலரும் அதன்வெளியீட்டினை விரும்பி, அதுபற்றி என்னை அடிக்கடி உசாவிவந்தனர். அவற்றை முழுதும் அச்சிட்டு வெளிப்படுத்தற்குச் சமயமும் சௌகரியமும் இதுவரை எனக்கு அமையாதுபோயினும் அவ்வன்பரின் விருப்பிற்கிணங்கி அவற்றுள் ஒருபகுதியை இப்போது வெளியிட முன்வந்தேன். இப்பகுதி, சிலாலிகிதங்கள்மூலம் தெரியவரும் புலவர் வரலாறுகள் பலவற்றையுந் திரட்டி விளக்குவதாகும்.

சாஸனத்துறையாளரால் இதுவரை வெளிவந்துள்ள நூற்றொகுதிகளையும் அவரது ஆட்டையறிக்கைகளையும் பெரும்பான்மை துணைக்கொண்டே இந்நூல் வரையப்பட்டது. இதனுள் அமைந்த புலவர்பெருமக்களின் தொகை எண்பதுக்கு மேலாகும். இத்தொகையினருள், வெளிவந்த நூல்களாலும் கன்னபரம்பரையாலும் அறியப்பட்டவர் சிலரும், இதுவரை அறியப்படாத புலவர் பெருமக்கள் பலரும் அடங்கியுள்ளார். அறியப்பட்டோரின் வரலாறு

கள் அவ்வவர் நூலின் பதிப்புக்களினும் தனிப்பதிப்புக்களி னும் அறிஞர்களால் முன்னரே வெளிவந்துள்ளன. அவற்றை யெல்லாம் விரிவஞ்சி இந்நூலுட் கூறுது, சாஸனக் கூற் றுக்கு உபகாரமான செய்திகளே எடுத்துக்காட்டப்பட்டன. இதுவரை அறியப்படாத புலவர்களைப்பற்றிச் சிலாலிகிதங் கள்மூலம் தெரியவந்தவற்றைச் செவ்வனம் ஆராய்ந்துள் ளேன். இப்புலவர்களிலே சிலர் சைவ வைணவ சைனப் பெரியோர்கள். வேறுசிலர் அரசருந் தலைவரும். ஒருசிலர் உரையாளர். மற்றுஞ்சிலர் வெவ்வேறு வருணத்தவரும் சம யத்தவருமான நன்மக்கள். இவர்களுள் சாஸனங்களால் நேரா கக் காலமறியப்பெற்றோர் பெரும்பாலார். ஊகத்தால் அஃதறி யப்பெற்றோரும் ஒருவகையினும் அஃதறியப்படாதோரும் சிறுபாலார். தனிச்செய்யுட்களைப் பாடியவர்களே இப்புலவர் களுள் மிகப்பலராயினும், நூல்களியற்றிய பெருமக்களும் அநேகர் என்பது அறியத்தக்கது. அந்நூல்களில் ஒன்றுமே இப்போது நமக்குக் கிடைத்திலது. அந்நூல்களும் தனிக்கவி களும் அரசர்கள் தலைவர்களைப் பற்றியே பெரும்பான்மை அமைந்தவை. அவ்வரசருந் தலைவரும் புலவர்பாடும் புகழ் பெற்று விளங்குவதிற் பெருநோக்கங் கொண்டிருந்தோர் என் பது, பட்டங்களாலும் பரிசுகளாலும் இப்புலவர்களை அன் னோர் சிறப்பித்துள்ள செய்திகளால் தெரியலாம். இங்ஙனம் சிறப்புற்ற பெருமக்களையெல்லாம், சாஸனங்களிற் கண்ட காலக்குறிப்புக்களையும் பிறவற்றையுங் கொண்டு, நூற்றாண்டு முறையில் வரிசைப்படுத்தி யுள்ளேன். இம்முறைவைப்பு இந்நூன் முகப்பில் தந்துள்ள "உள்ளுறைவிவர" த்தால் நன்கு விளங்கும். இப்புலவர்களுள் ஒருசிலர்க்குச் சாஸ னங்கள் நேரே கிடைத்தில. எனினும், அவர்கள் காலத்து அரசர் தலைவர்களைப்பற்றி அமைந்தகருவிகளைத் துணைக்

கொண்டு அன்னோர்காலமுதலியன சுருங்கத் தரப்பட்டன. சோழர் முதலிய பேரரசர்களும் பிறதலைவர்களும் தமிழறிவு படைத்தும் தமிழ்வாணர்களை ஆதரித்தும் போந்தவராதலின், அன்னோர்காலத்துத் தமிழினிலை இத்தகையதென்பதையும் உரியவிடங்களிற் குறிப்பிடலானேன். அவர்களுள் விஜயநகர வேந்தர்கள் கன்னடநாட்டவராயினும் அவரும் அவர்கீழ்த் தலைவர்களும் தமிழ்வளர்ச்சியினும் நோக்கங்கொண்டிருந்தவர்கள் என்பது, இந்நூலின் பிற்பகுதியால் தெரியலாம். அரசர் முதலியவர்மேற் புலவர்கள் இயற்றிய நூல்கள் நமக்குக் கிடைத்திலவேனும் அன்னார்பாடிய தனிக்கவிகள் பலவற்றைச் சாஸனவழியாற் பெற இடமுண்டு. அவற்றுள் வெளிவந்த மூலசாஸனங்களாற் றெரியவந்தவற்றை வேண்டியவளவில் ஆங்காங்குத் தந்துளேன். வெளிவாராத சாஸனங்களில் உள்ளனவாக அத்துறையாளரின் அறிக்கைகளிற் குறிப்பிடப்பெற்ற செய்யுட்கள் சிலவுள. அவற்றைச் சாஸனவிலாகாத் தலைவரின் உதவிபெற்று இப்பதிப்பினுட் சேர்க்கவிரும்பினும், அவகாசநேராமையால் இப்போது அதனை அமைக்கக்கூடவில்லை.

எட்டாண்டுகட்குமுன் யான் புரிந்த உபந்நியாசங்களில் அமைந்த புலவர்வரலாறுகள், அப்போது வெளிவந்த சாஸனத் தொகுதிகளையும் அறிக்கைகளையும் ஆதாரமாகக்கொண்டே ஆராய்ந்தெழுதியவை. அதன்பின்னர்ப் பலவருஷத் தறிக்கைகளும் நூற்பதிப்பும் அத்துறையாளரால் வெளியிடப்பட்டுள்ளன. அவையாவும் ஆராய்ந்து, புதியவாகத்தெரிந்த புலவர்செய்திகளையும் இந்நூலுட் சேர்த்துளேன். இப்புலவர்களிலே, சேக்கிழார் சேனாவரையர் முதலியோரைப் பற்றிய எனது புதிய கருத்துக்கள் நல்லறிஞரது கவனத்துக்கு உரியனவாகும். மூலசாஸனங்களின் உதவியின்றி அறிக்கைச்

செய்திகளைக் கொண்டே எழுதப்பட்ட புலவர்வரலாறுகள் இதனுட் பலவுண்டு. மூலத்தையும் துணைக்கொண்டு எழுது மிடத்துப் பின்னும் புதியசெய்திகள் பலவிளங்கவும் குறைகள்சில நீங்கவும் கூடும். காலக்கிரமத்தில் அதுவும் கைகூடுமென்றே நம்புகிறேன். இந்நூலிறுதியிற் பொருட்குறிப்புக்குப்பின்பு அமைத்துள்ள அநுபந்தக்குறிப்புக்கள் நூலுடன் சேர்த்துப் படித்தற்குரியன.

இங்ஙனமாக இந்நூல் அமையப்பெற்றதேனும், தமிழ்க் கவிஞர்களைப்பற்றிய சாஸனச்செய்திகள் யாவும் இதனுள் அடங்கிவிட்டன என்று சொல்ல இயலாது. விரிந்த இத்தமிழகத்தில் வெளிவாராது கிடக்கும் சிலாதாமிர சாஸனங்கள் எத்தனையோ உள்ளன. அவையெல்லாம் தேடிவெளியிடப் படும்போது அரியவும்பெரியவுமான செய்திகள் பல வெளியாகக் கூடியன. கிடைத்த கருவிகளைக் கொண்டு எழுதிய இத் தமிழ்க்கவிசரிதத்தால் புதிய புலவர் வரலாறுகள் இத் துணையளவு விளங்குமாயின், மேலுங்கிடைக்கும் சாஸனங்களால் அவை பெரிதும் விளங்கி இன்பமளிக்கத் தடையென்னை? எனவே, இதுபோலும் நூல்கள் காலந்தோறும் புதியதோற்றங் கொண்டு தமிழணங்குக்கு அணியாகத் தக்கன என்க. எனது சாஸனக்கட்டுரைகளிலே எஞ்சிய அரசர், தலைவர், வழக்குக்களைப் பற்றியவற்றையும் வெளியிடும் விருப்பம் பெரிதுமுடையேன். இந்நூற்பதிப்பில் தமிழ்மக்கள் காட்டும் அபிமானத்தைத் துணைக்கொண்டே இனி அவை வெளிவரவேண்டியனவாம். திருவருள் கைகூட்டுக.

இங்ஙனம்,

திருவல்லிக்கேணி
1—9—'37.

மு. இராகவையங்கார்,
தலைமைப்பண்டிதர்,
யூனிவர்ஸிடி-தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ்.

# உள்ளுறை விவரம்.



குறிப்பு:—* இக்குறி இதுவரை அறியப்படாதபுலவர்களையும், † இக்குறி இதுவரை அறியப்படாத நூல்களையும் பாடல்களையுங் காட்டுவன. நூ—நூற்றாண்டு.

| எண் | புலவர் | காலம் | நூலும் பாடிய விஷயமும் | பக்க வெண் |
|---|---|---|---|---|
| 21 | வீரசோழனும் தமிழ்ப்புலவர்களும் | கி. பி. 1063-70 | | 49 |
| 22 | * பூங்கோயில்நம்பி | ,, | † வீரணுக்கவிஜயம் | 51 |
| 23 | முதற்குலோத்துங்க சோழனும் தமிழ்ப்புலவர்களும் | 11, 12-ம் நூ. | | 53 |
| 24 | சயங்கொண்டார்பாடிய தலைவர்கள் | ஷை | கருணாகரத் தொண்டைமான்முதலியோர் | 54 |
| 25 | * மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பலமுடையான் | 11-ம் நூ. கி. பி. 1083 | † பையூருடையான் வேதவனமுடையான் மேற்பாடல்கள் | 58 |
| 26 | * கவிகுமுதசந்திர பண்டிதன் திருநாராயணபட்டன் | ஷை — 1097 | † குலோத்துங்க சோழசரிதை | 59 |
| 27 | * வீரைத்தலைவன் பரசமயகோளரிமாமுனி | ஷை — 1111-1119 | † அஷ்டாதசபுராணம், கன்னிவன புராணம், பூம்புலியூர்நாடகம் | 61 |
| 28 | நெற்குன்றங்கிழார் களப்பாளராசர் | 11, 12-ம் நூ. | புகலூரந்தாதி | 63 |
| 29 | அனபாயன் குலோத்துங்கசோழனுந் தமிழ்ப்புலவர்களும் | கி. பி. 1133-1146 | | 66 |
| 30 | கவிச்சக்கரவர்த்தி கூத்தரும் அவர் பேரனர் *ஒவாதகூத்தரும் | 12, 13-ம் நூ. | | 67 |

| எண் | புலவர் | காலம் | நூலும் பாடிய விஷயமும் | பக்க வெண் |
|---|---|---|---|---|
| 45 | சேனாவரையர் | ஷை-கி. பி. 1280 | சேனாவரையம் | 108 |
| 46 | பரிமேலழகியார் | ஷை-கி. பி. 1272 | திருக்குறள் பரிபாடலுரைகள் | 114 |
| 47 | * தாயினல்லபெருமாள் முனையதரையன் | ஷை-கி. பி. 1283 | † பாண்டிய சேனாபதியின் போர் | 118 |
| 48 | பெரும்பற்றப்புலியூர்நம்பி | ஷை-கி. பி. 1303 | திருவாலவா யுடையார் திருவிளையாடல் | 120 |
| 49 | இரட்டையர் (காலம்) | 14-நூ. 1331-1383 | ஏகாம்பரநாதருலா முதலியன | 121 |
| 50 | அருணகிரிநாதர் | 15-ம் நூ. | திருப்புகழ் | 123 |
| 51 | * அரிகேசரி பராக்கிரமபாண்டியன் | ஷை-கி.பி. 1422-1462 | † தென்காசிச் சாஸனப் பாடல்கள் | 131 |
| 52 | * அகிலகலாவல்லவன் சேரமான் பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன் | ஷை-கி. பி. 1448 | † பாகுடக்கவி | 136 |
| 53 | காளமேகப்புலவர் (காலம்) | ஷை-கி.பி. 1450-1480 | திருமலைராயன்மேல் | 140 |
| 54 | * மணவைக்கூத்தன் | ஷை-கி. பி. 1498 | | 142 |
| 55 | அரிதாசர் | 16-நூ. கி பி. 1523 | இருசமயவிளக்கம் | 143 |
| 56 | * பாண்டிகவிராசர் | ஷை-கி. பி. 1533 | † வீரமாலை | 152 |
| 57 | * உத்தண்டவேலாயுதகவி | ஷை-கி. பி. 1536 | † திருவதிகைக்கலம்பகம் | 154 |
| 58 | வாமனமுனிவர் I | 14-ம் நூ. | மேருமந்தரபுராணம் | 155 |
| | ஷை II | 16-நூ.—கி. பி. 1518 | நீலகேசியுரை | 157 |

## இக் கவிசரிதத்தில்

# எடுத்தாண்ட நூல்கள்.



அகநானூறு
அரிசமயதிவாகரம் (பத்திரிகை)
ஆழ்வார்கள் காலநிலை
இரகுவமிசம்
இருசமயவிளக்கம்
இறையனார் களவியலுரை
கம்பராமாயணம்
கலிங்கத்துப்பரணி
கலிங்கத்துப்பரணியாராய்ச்சி
கலைமகள் (பத்திரிகை)
களவழிநாற்பது
குலோத்துங்கசோழனுலா
குலோத்துங்கசோழன்கோவை
கொங்குமலர் (பத்திரிகை)
கோயிற்புராணம்
சடகோபரந்தாதி
சிருங்காரப்பிரகாசம் (வடநூல்)
சிலப்பதிகாரம்
சீவகசிந்தாமணி
செங்குந்தர் பிரபந்தத்திரட்டு
செந்தமிழ் (பத்திரிகை)
சேக்கிழார் புராணம்
சேனாவரையம்
தக்கயாகப்பரணியுரை
தமிழ்நாவலர்சரிதை
தனிப்பாடற்றிரட்டு
திருக்குற்றாலக்குறவஞ்சி
திருக்குற்றாலத்தலபுராணம்
திருக்குறள்
திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழ்
திருப்பதிகம் (பௌத்தநூல்)
திருப்புகலூரந்தாதி
திருப்புகழ்
திருமுருகாற்றுப்படை
திருமுறைகண்டபுராணம்
திருவாசகம்
திருவாரூர்க்கோவை
திருவாய்மொழி
திருவிருத்தம்
திவ்யப்பிரபந்தம்
தென்றிருப்பேரைத் திருப்பணி மாலை
தேவாரம்
தொண்டைமண்டலசதகம்
தொல்காப்பியம்
தொல்காப்பியப் பொருளதிகாரவாராய்ச்சி
நன்னூல்
நாலடியார்
நீடூர்ப்புராணம்
பத்துப்பாட்டு
பதினொராநூற்றாண்டுத் தமிழ்ப்புலவர் வரலாறு
பரிமேலழகருரை
பன்னிருபாட்டியல்
புதுக்கோட்டைச்சீமைச் சாஸனத்தொகுதி
புறநானூறு
புறப்பொருள்வெண்பாமாலை
பெரியபுராணம்
பெருந்தொகை

மதுரைக்காஞ்சி
மதுரைத்திருப்பணிமாலை
மயிலைநாதருரை (நன்னூல்)
மேருமந்தரபுராணம்
யாப்பருங்கலக்காரிகை
வில்லிபுத்தூரர்பாரதம்
வீரசோழியம்
வைஜயந்திநிகண்டு
ஸ்ரீராமாநுஜார்யதிவ்யசரிதை
Dr. S. K. Ayyangar's Commemoration Volume
Epigraphica Karnatica
Epigraphica Indica
History of Nayaks of Madura
History of Sri Vaishnavas
Historical Sketches of Ancient Deccan
Indian Antiquary
Inscriptions of Madras Presideucy
Inscriptions of the Pudukkottai State.
Madras Epigraphical Reports
Mysore and Coorg from the Inscriptions
Journal of the Indian Association
Journal of Indian History
Journal of Oriental Research of the University of Madras
The Pandyan Kingdom
South Indian Inscriptions
Sketches of Ceylon History
Tirupparuttikunram and its Temples.
Travancore Archaeological Series

---

ஸ்ரீ:

# சாஸனத் தமிழ்க்கவி சரிதம்.

## முன்னுரை.

தமிழ்நாட்டின் பழைய வழக்கவொழுக்கங்களை அறிதற்குத் தமிழ்நூல்கள் எவ்வளவு உதவுகின்றனவோ அவ்வளவாக நாட்டில் அங்கங்கே காணப்படும் சிலாதாமிர சாஸனங்களும் உதவுவனவாகும். முற்காலத்துவாழ்ந்த அரசர் புலவர் முதலிய பெருமக்கள்வரலாறுகளும், சொல்வழக்குப் பொருள்வழக்கு முதலியனவும் சாஸனவாயிலாக அறியக் கிடப்பவை அளவற்றன. அதனால், நூலாராய்ச்சிக்கும் சரித்திரவாராய்ச்சிக்கும் இச்சாஸனவறிவு பெரிதும் வேண்டப்படுவ தொன்றும். அன்றியும், கல்லெழுத்துக்களிற் கண்ட செய்திகள் முன்புநடந்த நிகழ்ச்சிகளாகவே பெரும்பாலும் அமைந்தவையாதலின் அவற்றை நாம் மதித்துக் கொள்வதற்கு அதிக இடமுண்டு. அதனால், பழைய வழக்கு வரலாறுகளைத் தெரியும் விருப்புடன் அச்சாஸனங்களை ஆராயநேர்ந்தபோது அவ்வக்காலத்தே யான் குறித்துவந்த தமிழ்ச் செய்திகள் அநேகமுள. அவற்றை, நம் சர்வகலா சங்கத்தார் நியமனத்தின்மேல், "இலக்கிய சாஸன வழக்காறுகள்" என்ற பொருட்கூறுபற்றி எட்டாண்டுகட்குமுன் யான் நிகழ்த்திய உபந்யாசங்களிலே விரித்துக் கூறியுள்ளேன். அவற்றுள் நூல்வழியாக இதுவரை தெரியவாராத புலவர்களைப் பற்றியும், தெரிந்த புலவர்களின் காலமுதலி

யனபற்றியும் கண்ட புதியசெய்திகள் பல. இப்புலவர்களுள் ஒருசிலர் அரசர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இங்ஙனமாகச் சாஸனவழியால் அறிந்த சான்றோர்வரலாறு பலவும் அருமையும் பெருமையும் உடையவாதலின், அப்பெருமக்களின் செய்திகளைத் தமிழ்மக்கள் அறியவிரும்பி ஈண்டுத் தொகுத்துக்கூற விரும்புகின்றேன். அத்தகைய புலவர்களை (1) சங்ககாலத்தவர், (2) இடைக்காலத்தவர், (3) பிற்காலத்தவர் என மூவகையினராகப் பாகுபடுத்திக் கொள்ளலாகும்.

# I சங்ககாலத்துப் புலவர்கள்



## 1 அகத்தியனாரும் பாண்டியனும்.



சங்கப்புலவர் எனப்படுவோர், இற்றைக்கு 1500-ஆண்டுகட்கு முற்பட்டவர்களும், தலை யிடை கடை என்ற முச்சங்கத்தும் விளங்கியவர்களுமான சான்றோர்கள் ஆவர். இக்காலங்கட்கு உரியனவும் இன்னோரைப் பற்றியனவுமான கல்லெழுத்துக்கள் யாண்டும் அகப்பட்டில என்பது யாவரும் அறிவர். ஆயினும் பிற்காலத்தமைந்த சாஸனங்களால் சங்கப் புலவர்களைப்பற்றிய செய்திகள்சில நமக்குத் தெரியவருகின்றன. முதலில், தலைச்சங்கப் புலவரென்றும் தமிழ்முனி என்றும் போற்றப்படும் அகத்தியனாரை நோக்குவோம். 10-ம் நூற்றாண்டில் இராஜசிம்மன் என்ற பாண்டியன்காலத்து அமைந்த சின்னமனூர்ச் செப்பிதழ்களில்—

"அகஸ்த்ய சிஷ்யஃ" [1]

"பொருவருஞ்சீ ரகத்தியனைப் புரோகிதனாகப்பெற்றது" [2]

1. S. I. I. Vol, iii, p. 451; சுலோகம், 3, 6.
2. Ibid. p. 454. l. 102-3.

என்று கூறப்பட்டுளது. இவ்வாறே வீரபாண்டியன் என்பானது மெய்க்கீர்த்தியும்—

"திடவாசகக் குறுமுனிபாற் செந்தமிழ்நூல் தெரிந்தருளி"

என்று கூறும்[1]. இவ்வரலாற்றையே—

"அரைதரு மேகலை யன்னமன் னையன் றகத்தியன்வாய்
உரைதரு தீந்தமிழ் கேட்டோ னுசிதன்"

எனப் பாண்டிக்கோவை பாடிய பழம்புலவருங் கூறுதல் அறியத்தகும்.[2] அகஸ்தியசிஷ்யன் பாண்டியன் என்பதனை மகாகவி காளிதாசரும் குறிப்பிடுவர்.[3] இவற்றால், அகத்தியனார்க்கும் பாண்டியர்க்குமுள்ள தொடர்புபற்றி முன்னூல்கள் கூறுஞ் செய்தியைச் சாஸனங்களும் ஆதரித்தல் காண்க. சங்கமிரீஇய பாண்டியர்களின் புலமைச்சிறப்பை—

"உளமிக்க மதியதனால் ஒண்டமிழும் வடமொழியும்
பழுதறத்தா னாராய்ந்து பண்டிதரின் மேந்தோன்றியும்"
"தென்வரைமிசைக் கும்போத்பவனது தீந்தமிழிற் செவி [கழுவியும்"
"தென்றமிழின் கரைகண்டும்"

என அச்செப்பேட்டின் முற்பகுதி[4] எடுத்துக் கூறும்: இது,

"தென்னவற் பெயரிய துன்னருந் துப்பின்
தொன்முது கடவுட் பின்னர் மேய...பொருந"

(மதுரைக்காஞ்சி, 40-2)

என்ற மாங்குடி மருதனார் வாக்குடன் ஒப்பிடற்பாலது.[5]

---

1. T. A. S. Vol. ii, p. 19.
2. இறையனார்களவியலுரை. சூத். 10, 89ம் மேற்கோட்பாடல்.
3. இரகுவமிசம், ஸர்க்கம்-6, 6.
4. S. I. I. Vol. iii, p. 454, l. 90, 94-5.; p. 463. l. 6-7.
5. 'இதனால் அகத்தியனுடன் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புக் கூறினார்' என்ற நச்சினார்க்கினியருரை காண்க.

## 2 பாரதம்* மொழிபெயர்த்த பாண்டியன்.



மேற்குறித்த சின்னமனூர்த் தாமிரசாஸனத்தே, பாண்டியனொருவன் மகாபாரதத்தைத் தமிழில் மொழிபெயர்த்துதவியவன் என்று கூறப்படுகின்றான்.

"மஹாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம்வைத்தும்"

என்பது அச்சாஸனத்தொடர்.[1] இங்ஙனம் பாண்டியன் தமிழ்ப்படுத்தியதாகக் கூறப்படும் பாரதம், 9-ம் நூற்றாண்டில் தெள்ளாறெறிந்த மூன்றாம் நந்திவன்மன் என்ற பல்லவ வேந்தன்காலத்து இயற்றப்பட்டதும், சங்ககாலத்துக்கு ஏற்காததுமான பாரதவெண்பாவின் வேறானதொன்று என்பது ஒருதலை. இத்தகைய பழைய பாரதத்தை இயற்றியவனாகவோ, பெருந்தேவனாரைக் கொண்டு இயற்றுவித்தவனாகவோ இருந்து அந்நூலைப் பாண்டியன் வெளிப்படுத்தியவனாதல் வேண்டும். தொல்காப்பியவுரையுள் நச்சினார்க்கினியர் மேற்கோள்காட்டும் பாரதப்பாட்டுக்கள் சங்ககாலத்துக்குரிய வாக்கும் போக்கும் உடையவாய்த் திகழ்கின்றன. அத்தகைய நூலோ அதனினும் பழைமையானதொன்றோ சாஸனங்குறித்த பாரதம் என்பது தெளிவுபடவில்லை. எதுவாயினும், பாண்டியனால் மகாபாரதம் தமிழ்மொழிபெயர்ப்புப்பெற்றது என்ற அரியசெய்தி, சாஸனவாயிலாகவே முதன்முதலாக நாம் தெரியக்கூடியதா யிருத்தல் குறிப்பிடத் தக்கது.

---

1. S. I. I. Vol. iii, p. 454, l. 102-3.

## 3 கபிலர்.



இங்ஙனமே, கடைச்சங்கத்தில் விளங்கிய கபிலர் என்ற புலவர் பெருமானைப்பற்றிச் சாஸனமூலம் அறியக்கிடக்கும் அரியசெய்தியும் உண்டு. வேள் பாரியின் ஆருயிர்த் தோழரான இப்பெரியார், அவ்வள்ளல் இறந்தபின் அவன் மகளிரை அழைத்துச்சென்று இருங்கோவேள், விச்சிக்கோன் என்ற கோக்குமரர்களை மணம்புரிந்து கொள்ளுமாறு வேண்ட, அவர்களிருவரும் மறுத்தனராக, பின் இவர் அம்மகளிரைப் பார்ப்பார்ப்படுத்துச் சென்றனர் என்று புறநானூறும் (200-2, 239), திருக்கோவலூர் மலையமானுக்குப் பாரி மகள் மணம்புரியப் பெற்றனள் என்று தமிழ்நாவலர்சரிதையும் கூறுகின்றன. இவ்வாறு, முன்னோர் கூறிய வரலாற்றின் உண்மையை 11-ஆம் நூற்றாண்டுச் சாஸனமொன்று ஆதரித்துநிற்றல் அறியத்தகும். முதல் இராஜராஜசோழன் காலத்ததும், திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலுள் அமைந்ததுமான அச்சாஸனத்தின் பகுதி வருமாறு:—

"மொய்வைத் தியலு முத்தமிழ்க் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
அலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல
மினல்புகும் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர்
பேரெட் டான வீரட் டானம்
அனைத்தினு மநாதி யானது" 1

இவ்வடிகளினின்று, பாரிமகளிருள் ஒருத்தியை மலையமானுக்கு மணம்புரிவித்தபின், கபிலர் தீப்பாய்ந்து உயிர்நீத்த

---

1. I. S. I. I. Vol. Vii, No. 863.

னர் என்பது தெரியலாம். அங்ஙனம் உயிர் நீத்த தலம் நடுநாட்டுத் திருக்கோவலூரே என்றும் அவ்வாறு உயிர் துறத்தற்கு அப்புலவர் தீவளர்த்த பாறை, பெண்ணையாற் றங்கரையிற் கபிலக்கல் என்று பெயர்பெற்ற துறையென் றும் 11-ம் நூற்றுண்டுக்குமுன் தமிழ்நாட்டுவழக்கு இருந்த தென்பது அறியப்படும். இதனால், பாரிமகளிரைக் கபிலர் 'பார்ப்பார்ப்படுத்துச்' சென்றனர் என்ற புறநானூற்றுக் குறிப்பிற்கு, அம்மகளிரை அவர் பார்ப்பாரிடம் அடைக்கலப் படுத்திச் சென்றார் என்பதே பொருளென்பது தெளிவாகின் றது. வடக்கிருந்தனர் கபிலர் என்பது, 'பசைந்தாரிற் றீர்த லிற் றீப்புகுதல் நன்று' என்றபடி, பாரிபிரிவுக் காற்றாது—

"இடையில் காட்சி நின்னோடு
உடனுறை வாக்குக உயர்ந்த பாலே"

என்று கூறித் தீப்பாய்ந்து அவர் உயிர்துறந்த செய்தியைக் குறிப்பதாம். இதனால், ஊர்க்கு வடதிசையில் ஆற்றிடைக் குறைபோன்ற ஒதுக்கிடங்களில் இருந்து பட்டினிநோன் பால் உடலையொறுத்து உயிர்விடுதல்போலவே, தீப்பாய்ந்து உயிர்நீத்தலும் வடக்கிருத்தலாகிய பிராயோபவேச முறைக ளில் ஒன்று என்பது அறியப்படுகின்றது.

இனி, கபிலர், பாண்டிநாட்டில் திருவாதவூரிற் பிறந்த வர் என்பது—

"நீதியார் மதூக நீழல் 'நெட்டிலை யிருப்பை' என்றோர்
காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்
சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துலங்கக் காட்டும்
வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்"

என்ற பெரும்பற்றப்புலியூர்நம்பி வாக்கால் தெரியலாம்.[1] இத் திருவாதவூர் பறம்புநாட்டதாகும்.

1. திருவாலவாயுடையார் திருவிளையாடல், ஞானோப. 4.

"தென்பறம்பநாட்டுத் திருவாதவூரில்
திருவாதவூர்ப் பெருமான்"

என்பது சாஸனத்தொடர்.[1] தென்பறம்புநாடு, வடபறம்பு நாடு என்பன பறம்புநாட்டின் இருபிரிவுகளாம்.[2] இந்நாட்டில் பாரீசுரம் என்ற ஊரொன்று கொடுங்குன்றமாகிய பறமலைப் (பிரான்மலைப்) பக்கத்துள்ளமையுங் கல்லெழுத்தால் அறியப்படுகின்றது.[3] பாரீசுரம் என்பது பாரியால் வழிபடப்பெற்ற சிவபிரான் கோயில்கொண்ட தலம் என்ற பொருளது. இவற்றால், கபிலர், பாரிவேளின் ஆட்சிக் குட்பட்ட பறம்புநாட்டவர் என்பது விளங்கும். எனவே, உணர்ச்சியொற்றுமையோடு தேயவொற்றுமையாலும் அவ்வள்ளலின் பெருநட்புக் குரிமைபூண்டு விளங்கியவர் கபிலர் என்பது பெறப்படுகின்றது.

---

## 4 சங்கப்புலவரின் வமிசத்தவர்.

சங்கம் வீற்றிருந்த சான்றோரின் வழியினர்சிலர் பிற்காலத்தும் பிரபலராயிருந்தவர் என்பது சாஸனவாயிலாக அறியப்படுகின்றது. இராமநாதபுரம்ஜில்லா சாத்தூர்த் தாலுகா எருக்கங்குடியில் உள்ள குன்றில், 9-ம் நூற்றாண்டில் ஆண்ட ஸ்ரீமாறன்ஸ்ரீவல்லபன் என்ற பாண்டியன்காலத்துச் சாஸனமொன்று அகவலில் அமைந்துளது. அதனில், அவ்வேந்தனது தலைமையதிகாரியான இருப்பைக்குடிகிழவன்

1. S. I. I. Vol. Viii, p. 222.

2. தென்பறப்புநாடு வடபறப்புநாடு என வழங்கும். (M. E. R. No. 17 of 1931-32; Ibid. No. 100 of 1916).

3. S. I. I. Vol. Viii, p. 227.

எட்டிசாத்தன் என்ற தலைவனொருவன், தென்பாண்டிநாட்டில் ஏரி குளம் கால் கல்லணை முதலியனகட்டி நாட்டை வளம் படச்செய்த அருஞ்செயல்களும் பிற அறச்செயல்களும் புகழ்ந்து கூறப்பட்டுள்ளன.[1] அவனது பெருமைகளுள்ளே ஈண்டுக் குறிப்பிடத் தக்கது, அச்சாத்தன் 'தமிழ்கெழு கூடற் சங்கப்பலகையில்' ஏறிவீற்றிருந்த பெரும்புலவ ரொருவரது வழித்தோன்றலானவன் என்பதேயாம். வணிகர்க் குரிய எட்டி என்ற சிறப்புப்பெயரும் சாத்தன் என்ற இயற் பெயரும் இத்தலைவன் தரித்திருத்தலினின்று, இவன் முன்னோராகக் கூறப்படும் சங்கப்புலவர் கூலவாணிகன் சாத்தனாரோ என்று கருத இடமுண்டு. இவ்வாறே, செங்கற் பட்டு ஜில்லா திருக்கச்சூர்ச் சிவாலயத்துக்கண்ட சாஸன மொன்று, பொய்யாமொழி மங்கலம் என்ற ஊர், சாத்தனார் வமிசத்து உதித்த பெருநம்பி என்ற முத்தமிழாசிரியர்க்கு உரியதென்று கூறுகின்றது.[2] விசேடணமின்றிச் சாத்தனார் என்ற பெயரால் முத்தமிழாசிரியரின் முன்னோராகக் கூறத் தக்கவர், மணிமேகலை இயற்றிய சங்கப்புலவரே எனலாம். "அவனுழையிருந்த தண்டமிழ்ச்சாத்தன்" "தண்டமிழாசான் சாத்தனிஃ துரைக்கும்" என்றார் இளங்கோவடிகளும்.[3] எனவே, சங்கத்துச் சான்றோரான நல்லிசைப்புலவ ரொருவரின்வமிசம் பிற்காலத்தினும் அறிவுந் திருவும் பெருகி விளங்கிய தென்பது, சாஸனவாயிலாக வெளியாதல் அறிந்து மகிழத்தக்கது.

---

1. M. E. R. No. 334 of 1929-30.

2. இதன்விரிவை இந்நூலுள் 'முத்தமிழாசிரியர் பெருநம்பி' என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

3. சிலப். பாயி. 10; 25-66.

# II இடைக்காலத்துப் புலவர்கள்



## 5 திருமாலடியாரான ஆழ்வார்கள்.



இனி, சங்கத்துக்குப் பிற்காலத்தே வாழ்ந்த சான்றோர்களை நோக்குவோம். ஐந்தாநூற்றாண்டுக்குப் பின்னும் பதின்மூன்றுநூற்றாண்டுக்கு முன்னும் வாழ்ந்த தமிழ்க்கவிகளை இடைக்காலத்துப் புலவர்கள் என்று நாம் ஒருபடியாகக் கொள்ளலாம். இவர்களுள் முற்பட்டவர்கள், தெய்வக்கவிகளான திருமாலடியார்களும் சிவனடியார்களுமாவர். இன்னோர் காலத்து விளங்கிய அரசர்முதலியோர் சாஸனங்கள் உளவாயினும், அவையொன்றிலேனும் இப்பெரியார்களைப்பற்றிய குறிப்பெதுவுமே நமக்குக் கிடைத்திலது. எனினும், இவ்வடியார்கள் தோன்றிச் சில நூற்றாண்டுகட்குப் பின்பமைந்த சிலாலிகிதங்களினின்று வெளிப்படையாகவும் குறிப்பாகவும் இவர்கள் செய்திகள் தெரியவருகின்றன. முதலில் திருமாலடியார்களை எடுத்துக்கொள்வோம்.

திருமால்சமயத்துப் பெரியோர்களான ஆழ்வார்கள் பதின்மருள், திருமங்கைமன்னனும் பெரியாழ்வாருமே தங்காலத்து அரசர்களைத் தம்பாடல்களிற் சிறப்பித்துக் கூறுவோராவர். இவர்களுள், திருமங்கையாழ்வார் அட்டபுயகர பரமேச்சுரவிண்ணகரப் பதிகங்களிலே, 8-ம் நூற்றாண்டினனான இரண்டாம் நந்திவர்மபல்லவனையும், திருநாங்கூர்ப் பதிகங்களில் 7-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆண்ட பல்லவ பரமேசுவரன், சாளுக்கிய விக்கிரமாதித்தனைப் போரில் முறியடித்த வெற்றித்திறத்தையும் குறிப்பிடுகின்றார். இவ்வாறே கோநெடுமாறன் என்ற பாண்டியனைப் பெரியாழ்வார் கூறுவர்

இப்பாண்டியனை 8 - ம் நூற்றாண்டினனும், 'பரமவைஷ்ணவன்' எனப்பட்ட பராந்தகன் - நெடுஞ்சடையன் தந்தையுமாகிய மாறவர்மன் என்று கருதப் பெரிதும் பொருத்தமுண்டு. இவ்வரசர்களின் சாஸனங்கள்மூலம், இவ்வடியார்களுடையவும் பிற ஆழ்வார்களுடையவுமான காலங்கள் நன்குவிளங்குஞ் செய்தியை "ஆழ்வார்கள்காலநிலை" என்றநூலில் விரிவாகக் கூறியுள்ளேன்.

இனி, ஒடுங்கிக்கிடந்த சோழவமிசத்தை 9-ம் நூற்றாண்டில் உத்தரிப்பித்த விஜயாலயசோழனுடைய மகன் இராஜகேசரி ஆதித்தசோழனது மூன்றாம் ஆட்சியாண்டில் நம்மாழ்வாரது பிரபாவம் நாட்டிற் பெருகியிருந்ததென்பது, சடகோபன் என்ற அப்பெரியார் திருப்பெயர் மக்கட்கு இட்டுவழங்கப்பட்டிருத்தலால்[1] உணரப்படும். இவ்வாறே, அவ் வாதித்தசோழன்மகன் முதற்பராந்தகன்காலத்துத் திருச்சானூர்ச் (கி.பி.910) சாஸனத்தே, அவனது தலைமை அதிகாரிகள் "பூதூருடையான், நம்மாழ்வாரடிகள்"[2] என்றும், மற்றோரதிகாரி தொண்டரடிப்பொடி[3] என்றும் பெயர்கள் தரித்துள்ளார். இவற்றால், ஆழ்வார்கள் வைபவம், 9, 10-ஆம் நூற்றாண்டுகளில் ஸ்ரீமந்நாதமுனிகள் என்ற ஆசாரியத்தலைவரால் நாடெங்கும் பிரசித்தியடைந்தது என்று குருபரம்பரைகளால் தெரியவருஞ்செய்தி சாஸனவாதாரவு் பெறுவதோடு, நம்மாழ்வார் என்ற திருநாமம் சடகோபர்க்கு அந்நாதமுனிகள் காலத்தேயே பெருவழக்காயிருந்ததென்பதும் பெறப்படுகின்றது. பத்தாநூற்றாண்டுக்குப் பிற்பட்ட சோழர்முதலிய அரசர்காலங்களில் ஆழ்வார்களைப் பற்றியும் அவர்கள் அருளிச்செயல்களைப்பற்றியும் அமைந்த

1. திருக்கண்ணபுரசாஸனம் (History of Sri Vaisnavas, p. 21.)
2. M. E. R. No. 259 of 1904. 3. Ibid. No. 207 of 1907.

சாஸனங்கள் பல. தஞ்சையிற் பெரியகோயிலை எடுப்பித்துப் பிரசித்திபெற்ற முதல் இராஜராஜன் காலத்தமைந்த சாஸனங்களிலே, நமமாழ்வார்க்குக் கோயில் [1] அமைந்திருந்தமையும், திருவாய்மொழித் தேவர்,[2] சீகுருகூர்[3] என்ற தொடர்களால் ஆழ்வார் அருளிச்செயலும் அவரது அவதார ஸ்தலமும் குறிக்கப்பட்டிருத்தலும் காணலாம். இங்ஙனமே அவ்விராஜராஜன் மகன் முதலாம் இராஜேந்திரசோழன் காலத்தே உத்தரமேரூர் [4], எண்ணாயிரம் [5] என்ற ஊர்களிலும், இராஜகேசரி முதல்இராஜாதிராஜன் காலத்தே திரிபுவனி [6] என்றஊரிலும் அமைந்த சிலையெழுத்துக்களினின்று, கோயில்களில் திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்தற்கு இறையிலி உதவப்பட்ட செய்திகள் தெரிகின்றன. இனி,

"திருவத்தியூராழ்வாரைப் பாடியருளின ஸ்ரீபூதத்தாழ்வாரும் பொய்கையாழ்வாரும் பிறந்த திருக்கேட்டைநாள்" [7]

என விக்கிரமசோழன் காலத்துச் சாஸனமொன்று கூறுதலால், முதலாழ்வார்களின் அருமைபெருமைகளும்,

1. M. E. R. No. 423 of 1908.
2. S. I. I. Vol. iii, p. 4. 3. Ibid. ii, p. 269.
4. M. E. R. Nos. 176, 194 of 1923.
5. Ibid. No. 333 of 1917
6. Ibid. No. 176 of 1919
7. S. I. I. Vol. iii, p. 187—இவ்வாழ்வார் இருவருடையுஅவதார நக்ஷத்திரங்களும் கேட்டை என்பது அக்காலவழக்குப்போலும். ஆனால், பொய்கையார்க்குத் திருவோணமும் பூதத்தார்க்கு அவிட்டமும் திருநக்ஷத்ரங்களாகக் குருபரம்பரைகளில் வழங்குகின்றன. இதனால், திருவாட்டைநாள் என்பது திருக்கேட்டைநாள் எனச் சாஸனம்வரைந்தோரால் தவறி எழுதப்பட்டதோ என்று கருதவும் இடந்தருகின்றது.

அச்சோழன் தந்தையான முதற்குலோத்துங்கனது 15-ம் ஆண்டுச் சாஸனத்து—

"இக்கோயிலீலே ஆழ்வானுக்குத் திருவாய்மொழி திருப்பள்ளியெழுச்சி விண்ணப்பஞ் செய்வோமாக" [1]

என வருதலால், நம்மாழ்வார் தொண்டரடிப்பொடிகளின் அருளிச்செயல்களும்,

"தீர்த்தம் பிரஸாதித்தருளின அன்றிராத் திருப்புன்னைக்கீழ் (ஸ்ரீரங்கநாதர்) எழுந்தருளியிருந்து 'தேட்டருந்திறல்' கேட்டருளும் போது" [2]

எனவரும் அக்குலோத்துங்கனது 18-ம் ஆண்டுச் சாஸனத் தொடரால், குலசேகரப்பெருமாளது திருமொழியும்,

"இத்திருவோலக்கத்தில் திருநெடுந்தாண்டகம் விண்ணப்பஞ் செய்வார்க்கு ஒருகாசு இடுவதாகவும்" [3]

எனவரும் சோழகேரளனது சாஸனத்தால் திருமங்கை மன்னன் அருளிச்செயலும் ஸ்ரீராமாநுஜர்காலத்தும் அவர்க்கு முன்பும் பெருவழக்குப் பெற்றிருந்தமை நன்குவிளங்குகின்றது. இங்ஙனமே ஆழ்வார்களையும் அவர்கள் திவ்யப் பிரபந்தங்களையும்பற்றிப் பிற்காலத்து அரசர்சாஸனங்களிற் காணும் குறிப்புக்கள் பலவாம்.

---

1. S. I. I. Vol. iv, p. 146.

2. Ibid. Vol. iii, p. 150.—இவ்வாறே, திருப்புன்னைக்கீழ் "ஒருதீர்த்தத்தினன்று இராத் திருமாலைபாடிச்சமைந்து"எனத் திருவாய்மொழியீட்டில் (6 - 9 - 3) வரும் பந்தி ஒப்பிடத்தக்கது.

3. Ibid. Vol. Vii, p. 59.

## 6 சிவனடியாரான நாயன்மார்கள்.



சிவனடியார்களான நாயன்மார் அறுபத்துமூவருள் தேவாரவாசிரியர்களான மூவருமே இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுள், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரால் திருத்திப் பணிகொள்ளப்பெற்ற பாண்டியன் 'நெல்வேலிவென்ற நின்றசீர் நெடுமாறன்' என்பது பிரசித்தமாம். இவ்வேந்தன் 7-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் என்பதும், நெல்வேலிப்போரில் இவன் செருவென்றதும் வேள்விகுடி சின்னமனூர்ச் சாஸனங்களால் விளங்குவன. இனி, சம்பந்தமூர்த்திகள் காலத்தவரான சிறுத்தொண்டர், "வாதாபித் தொன்னகரந் துகளாக்கி"ய பல்லவனது படைத்தலைவர் என்பது சேக்கிழார் வாக்கால் அறியப்பட்டது. இப்பல்லவனை, முதல் நரசிம்மவர்மனென்று கருதுவதினும் பரமேசுவரவர்மன் என்றுகொள்வதே பொருத்தம். இப்பரமேசுவரனும் 7-ம் நூற்றாண்டின் பிற்பகுதில் வாதாபியை அழித்தவனென்றே தெரிகின்றான். இவன் பாட்டன், குணபரன் எனப்பட்ட மகேந்திரவர்மன் ஆவன். இவன் சைனசமயத்தினின்று சைவமதத்தைத் தழுவியவன் என்பது திருச்சிராப்பள்ளிச் சாஸனத்தால் தெரியவருகின்றது. இக்குணபரனே திருநாவுக்கரசர்காலத்துப் பல்லவன் என்பது, சேக்கிழார் வாக்கினின்று அறியப்படும். ஆகவே, அப்பர்சுவாமிகளால் திருத்திபடிமைகொள்ளப்பட்டவனுகச் சேக்கிழார் கூறிய பல்லவன், சம்பந்தமூர்த்திகள்வாழ்ந்த 7-ம் நூற்றாண்டின்முற்பகுதியில் ஆட்சிபுரிந்த மகேந்திரனே என்பது பெறப்படும். சுந்தரமூர்த்திகள்காலத்து அரசன் "காடவர்கோன் கழற்சிங்கன்' என்பான். இவன் இராஜசிம்மன் எனப்பட்ட இரண்டாம் நரசிம்மவர்மன்என்ற பல்லவனுவன்.

இவையாவும் யான் வெளியிட்ட 'ஆழ்வார்கள் காலநிலை' என்ற நூலாலும், 'திருமங்கையார் சம்பந்தர்களின் சமகால நிலை'[1] என்ற என் கட்டுரையாலும் பிறர் எழுத்துக்களாலும் நன்குவிளங்குவன்.

இனி, இச் சிவனடியார்களைக் குறித்த சிலாலிகிதங்களும் எண்ணிறந்தன. இவர்களுட் சிறப்புடைய நால்வரைப்பற்றி யமைந்த கல்லெழுத்துக்கள், ஆழ்வார்களுடையன போல, அவர்கள்தோன்றிய சில நூற்றாண்டுகட்குப் பின்பே அமைந்தனவாம். 11-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சிபுரிந்த முதல் இராஜராஜசோழன்காலத்தினின்றே தேவாரவாசிரியர்களான மூவர் செய்திகள் சாஸனங்களிற் பயில்வனவாயின. அம் மூவரோதிய பதிகங்கள் கோயில்களில் விண்ணப்பஞ் செய்தற்கு நிவந்தங்கள் அமைக்கப்பட்டதையும், அவர்கள் திருவுருவங்கள் பிரதிஷ்டைபெற்றதையும் அவ்விராஜராஜன் அவன்மகன் இராஜேந்திரன்முதலிய சோழர் சாஸனங்களிற் காணலாம். இவருள், சம்பந்தமூர்த்திகளை—திருஞானசம்பந்தனடிகள், திருஞானம்பெற்றபிள்ளையார் என்றும், அப்பரை—திருநாவுடையபிள்ளை, திருநாவுக்கரசுதேவர், திருநாவுக்கரையன் என்றும், சுந்தரமூர்த்திகளை—பிள்ளைநம்பி ஆரூரனார், தடுத்தாட்கொண்டதேவர் என்றும் பிறவாறும் முற்காலத்துமக்கள் வழங்கினர் என்பது அவ்வோர் சாஸனவாயிலாக அறியக்கிடக்கின்றது. இம் மூவரடியார்களும் சிவதலங்கட்குச்சென்று பாடியபதிகங்களாக இப்போது வழங்குவனவற்றைத் தேவாரப் பதிப்புக்களால் யாவரும் அறிவர்.

---

1. "The contemporaneity of Saints Tirumangaiyar and Gnanasambanda" (Dr. S. K. Aiyangar's commemoration volume, pp. 176—183.)

இப்பதிகங்கள் பலவும் அவ்வக்கோயில்களிலே அவை பாடிய நாயன்மார் காலங்களையடுத்து ஓதப்பட்டு வந்தனவென்றே தெரிகின்றது. முதலிராஜராஜசோழனே திருமுறைகண்டவன் என்று பெரும்பாலும் கருதப்படுபவனாயினும், அவற்கு முற்பட்ட சோழராட்சிகளில் பழைய தலங்களிலெல்லாம் திருப்பதிகங்கள் ஓதும் வழக்கிருந்த தென்பது சாஸனங்களால் நன்கறியப்படுவதாம். 8-ம் நூற்றாண்டினனான பல்லவ மல்லன் காலத்தே திருவல்லத்தும்,[1] 10-ம் நூற்றாண்டினனான முதல் இராஜகேசரிகாலத்தே பழுவூரிலும்,[2] 11-ம் நூற்றாண்டினனான இரண்டாம்பரகேசரி காலத்தே திருவாவடுதுறையிலும்[3] ஓதப்பட்டு வந்தனவாகச் சாஸனங்கள் கூறும் திருப்பதியங்கள், அம் மூவரோதிய திருப்பதிகங்களாக இக்காலத்து வழங்குவனவற்றின் வேறல்லவென்றே கருதற்குரியன. அதனால், தேவாரம் பாடிய மூவரின் வரலாறுகளும் பதிகங்களும் நாட்டிற் சிறுகவழங்கப்பட்டு வந்தவற்றை அவ்விராஜராஜசோழன் பெருகச் செய்தவன் என்பது தகுமேயன்றி அச்சோழற்கு முன்பு அவைமுழுதும் வழக்கற்றிருந்தன எனல் ஏற்புடையதன்று. மேற்குறித்த தலங்களேயன்றி வேறுசிலவும் அம் மூவர் திருப்பதியங்களை அவ்விராஜராஜற்கு முன்பு பெற்றிருந்தன என்பது பெரிய புராணத்தாலும் சாஸனங்களாலுந் தெரிகின்றது. அவை— திருத்தவத்துறை, திருவாலந்துறை, திருச்செந்துறை முதலியனவாம். இவற்றுள், திருத்தவத்துறை என்பது இப்போது லால்குடி எனவழங்கும் ஊராகும். சம்பந்தமூர்த்திகள் இவ்வூர்ச் சிவபிரானுக்குத் திருப்பதிகமாலை புனைந்தார்

1. S. I. I. Vol. iii, pp. 92-4.
2. M. E. R. No. 349 of 1918.
3. Ibid. No. 139 of 1925.

என்று சேக்கிழார் தெளிவாகக் கூறுகின்றார்.[1] இவ்வாறே, காவிரித் தென்கரையில் உள்ள திருவாலந்துறை, செந்துறை களை அம்மூர்த்திகள் வணங்கிச் சென்றனர் என்று அவர் குறிப்பிடுவர்.[2] இக்கூற்றுக்கட் கேற்பத் திருத்தவத்துறை திருவாலந்துறைச் சிவாலயங்களில் உள்ளனவும் முதலிராஜ ராஜனுக்கு முற்பட்ட சோழர்கள் காலத்தவுமான சாஸனங் கள்,[3] அவ்வூர்க் கோயில்களில் திருப்பதியங்கள் விண்ணப்பஞ் செய்யப்பட்டுவந்த செய்தி கூறுகின்றன. இவற்றுள், திருத் தவத்துறையில் திருப்பதியமோத நியமிக்கப்பெற்றவர், பிரா மணர்கள் என்று அச்சாஸனங் கூறுதல் குறிப்பிடத்தக்கது. இதனால், அப்பதியம் சம்பந்தமூர்த்திகள் பாடியதென்று கரு தவும்படும். இனி, திருவாலந்துறை என்பது காவிரியின் வட கரையில் உள்ள அன்பிலாலந்துறையின் வேறானதும் அந்துவ நல்லூர்என்ற மறுபெயருடையதுமான தலமும், திருச்செந் துறைஎன்பது அதன்கீழ்பால் அடுத்துள்ள தலமுமாகும். இவ் வாறு திருத்தவத்துறை திருவாலந்துறைகட்கு அமைந்த திருப்பதிகங்கள், பிற்காலத்து வழக்குவீழ்ந்தனவும் சம்பந்த மூர்த்திகள் பாடியனவுமான திருப்பதிகங்களைச் சார்ந்தன வாதல் வேண்டும்.[4] அம்மூர்த்திகள் சோணாட்டுத் திருவிடை வாய்க்குத் திருப்பதிகமொன்று[5] பாடியுள்ளார் என்பது, அவ் வூர்ச் சிவாலயத்துக் கண்ட அப்பதிகமமைந்த சாஸனத்தால்

1. பெரியபுராணம், திருஞானசம். 347. 2. ஷை, 342.

3. M.E.R.Nos.99, 104 of 1928-1929; S.I.I. iii, p. 139.

4. "திருத்தவத்துறை", "தேவாரம்பெற்ற தலங்களும் சிலா சாஸனவழக்கும்" என்ற கட்டுரைகளில், இச்செய்திகள் எல்லாவற் றையும் விரிய விளக்கியுள்ளேன் (கலைமகள், பகுதிகள்-61, 65).

5. இத்தலம், தஞ்சைஜில்லா நன்னிலந் தாலுகாவைச்சார்ந் தது. இங்கு அமைந்த பதிகச்சாஸனம் 12-ம் நூற்றாண்டுக்கு உரிய தென்பர் (M. E. R. 1913, p. 147).

தெளிவாகின்றது. அப்புதிய பதிகப்பாடல்கள் தேவாரப் பதிப்பொன்றிலும் வெளிவந்துளது. உமாபதி சிவாசாரியர் கூறியவாறு,[1] சம்பந்தர் திருப்பதிகங்கள் 384-ல், இப்போது வழங்குவன 383-பதிகங்களேயாம். விடுபட்டஒன்று இன்ன தலத்துக்கு உரியதென்பது தெரியவில்லை. மேற்கூறிய திருவிடைவாய்ப் பதிகமே அவ்விடுபட்ட எண்ணுக்குரிய தென்பர் ஒருசாரார். ஆயின், அத்தலத்துக்குச் சம்பந்தமூர்த்திகள் திருப்பதிகம்பாடிய செய்தியைச் சேக்கிழார் குறிப்பிடாது, "தவத்துறைவானவர்தாள் இன்றமிழ்மாலைகொண்டேத்தி" என்றிவ்வாறு அவர் திருத்தவத்துறை முதலியவற்றுக்கே குறித்திருத்தல் நோக்கத்தக்கது.

---

## 7 பெரும்பிடுகு முத்தரையனைப் பாடிய புலவர்கள் நால்வர்.

திருச்சிராப்பள்ளியை அடுத்த செந்தலை எனவழங்கும் சந்திரலேகைச் சதுர்வேதமங்கலம் என்ற ஊரில் உள்ள சிவன் கோயிற் சாஸனங்கள்,[2] செந்தமிழில் வெளிவந்துள்ளன. தஞ்சாவூர் திருச்சிராப்பள்ளிப் பகுதிகளைப் பல்லவர்கீழ்ச் சாமந்தர்களாய் ஆண்டுவந்த முத்தரையர் என்ற அரசருள், 'பெரும்பிடுகு முத்தரையன் சுவரன்மாறன்' என்ற வேந்தனது வெற்றித்திறங்களைப்பற்றிப் புலவர்கள் பாடிய பாடல்கள் பல சிதைந்து இச்சாஸனங்களிற் காணப்படுகின்றன. முத்தரையர்வமிசம், நாலடியாரிற் சைனமுனிவராலும்புகழப்

1. திருமுறைகண்ட புராணம், 25.
2. செந்தமிழ், தொகுதி-6, பக். 6—12.

பட்ட பெருமையுடையது[1] என்பது பலரும் அறிவா. இச் சாஸனங் கூறும் முத்தரையனை 8-ம் நூற்றாண்டினன் என்று கருதுவர் சரித்திரவறிஞர்.

"பெரும்பிடுகு முத்தரையனாயின சுவரன்மாறன்; அவன் எடுப்பித்த பிடாரிகோயில்; அவன் எறிந்த ஊர்களும் அவன்பேர்களும் அவனைப்பாடினார் பேர்களும் இத்தூண்கள்மேல் எழுதிய இவை"

என்று தொடங்கி, பாடியபுலவர் நால்வர்பெயர்களுடன் அவர்பாடல்களை இச்சாஸனங்கள் கூறுகின்றன. அவருள்,

(1) "பாச்சில்வேள் நம்பன் பாடின"

இப்புலவர் மழநாட்டுத் திருப்பாச்சில் (ஆச்சிராமம்) என்ற ஊரினர் என்பதும், வேளிர் குலத்தவர் என்பதும் இவர்தம் பெயரால் அறியப்படும். இவர்பாடிய வெண்பாக்கள் வருமாறு:—

"வெங்கட் பொருக[யல்]சேர் வெல்கொடியோன் வாண்மாறன்
செங்கட் கரும்பகடு சென்றுழக்க—வங்குலந்தார்
தேரழுந்தி மாவழுந்தச் செங்குருதி மண்பரந்த
ஊரழுந்தி யூரென்னு மூர்.

"[ ... ... ... ] கப்ப வோடிக்
கழுகு கொழுங்குடர் கவ்வி—விழிகட்பேய்
புண்ணனைந்து கையூம்பப் போர்மணலூர் வென்றதே
மண்ணனைந்த சீர்மாறன் வாள்.

"[ ... ... ] வாளமருள் வாகைப்பூக்
குஞ்சி கமழ்கண்ணிக் கோமாறன்—றஞ்சைக்கோன்
கோளாளி மொய்ம்பிற் கொடும்பாளூர் காய்ந்தெறிந்தான்
தோளா லுலகளிக்குந் தோள்.

1. "பெருமுத்தரையர்" என்ப (நாலடி. 200, 286).

"[ ... ... ] ர்க்கே யல்லையாய்க் காலந்தான்
முல்லைக்கே முற்படுமோ வென்றென் று—வல்லக்கோன்
காரைவாய்ப் போர்வென்ற வேன்மாறன் கைபோலும்
காரைவாய்க் கேளேனே கண்டு.

"[ ... ... ] லா தெய்த்தனவா லெங்கும்
வருபுனல்சூழ் வல்லக்கோ மாறன்—செருவில்
மறங்கூர்வாய்ப் பட்டா ருடல்குடைந்து மாந்திப்
புறங்கூர்வாய்க் கொண்டெழுந்த புள்"

இவற்றால் அழுந்தியூர், மணலூர், கொடும்பாளூர், காரை என்ற போர்க்களங்களில் மாறன் என்ற மறுபெயர் பெற்ற இம்முத்தரையன் பெருவெற்றிபெற்றவன் என்பதும், வல்லம் தஞ்சை என்பன இவனுக்குச் சிறந்த ஆட்சியிடங்களாய் அமைந்தவை என்பதும் விளங்குவன.

## (2) "ஆசாரியர் அநிருத்தர் பாடியது."

இவர் பெயரினின்று, முத்தரையற்கு ஆசிரியராக வேனும், சைனமுனிவருள் ஒருவராகவேனும் விளங்கியவர் இவர் என்று தெரியலாம். இவ்வாசிரியர்பாடிய கட்டளைக் கலித்துறை சிதைந்து காணப்படுகின்றது. அது வருமாறு:—

"... ... ... ... ...
...போ லரசு பிறவா பிறநெடு மேருநெற்றிப்
பொன்போல் பசுங்கதி ராயிரம் [வீசும்] பொற் றேர்ப்பருதிக்
கென்போ தரவிடு மோவிணைச் சோதி யிருவிசும்பே"

## (3) "கோட்டாற்று இளம்பெருமானார்"

இப்புலவரது ஊரான கோட்டாறு என்பது, திருவாங்கூர்ச் சீமையைச் சார்ந்த நாகர்கோயிலின் பழம்பெயராகும். இவர்பெயரினின்று 'கோட்டாற்றுப் பெருமானார்' என வேறு புலவரொருவர் இவர்க்குத் தமையனாராக இருந்த

வர் என்பது தெரியலாம். இவரது பாடலொன்றும் சிதைந்து காணப்படுவது வருமாறு:—

"சேட்டிணர் பூந்தண் பொழிற்செம்பொன் மாரிக் கடியரணம்
மூட்டின சீற்றமுன் சென்றது பின்பு பகட்டினத்தோர்
கெ...[மர்]மாறன்க[டி]......க்க"

(4) "கிழார்க்கூற்றத்துப் பவதாயமங்கலத்து அமருணிலை ஆயின குவாவங்காஞ்சன்."

கிழார்க்கூற்றம் என்பது சோணாட்டுப் பிரிவுகளுள் ஒன்று. பாபநாசந் தாலுகா மிலட்டூர் இக்கூற்றத்தைச் சார்ந்ததாம்.[1] அமருணிலை என்ற சிறப்புப்பெயரால் படைத்தலைவரானவர் இப்புலவர் என்று தோற்றுகின்றார். 'அமரூன்றி முத்தரையன்'[2] என இதுபோலுஞ் சிறப்புப்பெயர் பிறர்க்கு வழங்குதலும் ஒப்பிடத்தக்கது. இவர்பாடல்கள் வருமாறு:--

"ஏறி விசும்பு மிருநிலமாய்த் தென்பவால்
மாறன் செருவேன் மறங்கனன்று—சீறக்
கொடிமாடத் தண்கொடும்பைக் கூடாத மன்னர்
நெடிமா மதிலிடிந்த நீறு.

"செருவ(ல ரா?)னதனுற் சிந்தியார் போலும்
மருவல(ராய்) வாண்மாறன் சீறக்—கருவிளை
கண்டோற்ற வண்டரவங் கார்தோற்றுங் காந்தளூர்
மண்டோற்ற வேந்தர் மனம்.

"எண்கி னிருங்கிளையு மேறற் கரியவே
வண்கைச் செருமாறன் வாள்காய்த்தி—விண்படர்சேய்
வானுடு தாமூர்ந்த மாநாடக் கண்ணனூர்க்
கோனுடர் புக்கொளித்த குன்று.

1. I. M. P. Tj. Nos. 1006-7.
2. Ibid. Pd. 247.

"மலர்ந்ததார் வாண்மாறன் மன்னனண்ணல் வாயிற்
கலந்தநாட் காணலாங் காண்க—உலந்தவர்தம்
என்பருந்து சூற்பே யிருந்துறங்க வீழ்குடர்
...ருந்து சிந்தப் பகடு"

"தன்முத லாயமும் பூவையுந் தன்கைக் கிளியு முன்விட்
டென்முத லன்புமென் னுகச்செய் தாளியக் கத்தைவிண்டார்
வன்முத லச்...க் கருங்கைப் பகடுய்த்த மாறன்றெவ்விற்
கண்முத லாங்கடத் தேதிலன் பின்சென்ற காரிகையே"

"... ... பாண்மகனே பண்டெல்லாம்
யாமறிது மெங்கையர்க்கே சொல்லுநீ—மாமறங்கைத்
தென்னுடர் காதலியர் தீநாட வாய்சிவந்த
மின்னுடு வேன்மாறன் மெய்"

இப்புலவர் வாக்கினின்று, கொடும்பை(கொடும்பாளூர்), கண்ணனூர், அண்ணல்வாயில் முதலிய களங்களிற் போர் வென்றவன் இம்முத்தரையன் என்பது விளங்கும்.

---

## 8 ஏனாதி சாத்தஞ்சாத்தன்.

இப்போது கிடைத்துள்ள தமிழ்மூவேந்தர் சாஸனங் களிலே பழைமையானதென்று கொள்ளத்தக்கவேள்விகுடிச் செப்பிதழ்களின் தமிழ்ப்பகுதியைப் பாடிய முன்னோர், இவ் வேனாதியாவர். உத்தேசம் கி. பி. 767-ல் பட்டம் பெற்ற வனும், ஆனைமலை சீவரமங்கலமுதலிய சாஸனங்களுக்கு உரியவனுமான பராந்தகன்-நெடுஞ்சடையன் என்ற பாண்டி யன், தன் முன்னோனை பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யால் கொற்கைகிழான் காமக்காணி[1] நற்கொற்றன்என்ற அக்

1. 'காமக்கணி' என்று சங்ககாலத்துப் புலவர்சிலர்க்கு வழங் கும் சிறப்புப்பெயருடன் இஃது ஒப்பிடத்தக்கது. காமக்காணி-கிராம வுரிமை. காமம், கிராமம் என்பதன் திரிபாகத் தெரிகின்றது. 'காமக் கிழவு' எனவும் வழங்குப (S.I.I. Vol. Vii, p. 342).

தணனுக்குத் தானஞ் செய்யப்பெற்று, பின்பு களப்பிரர்[1] என்ற வேற்றரசராட்சியில் அரசாங்கத்துடன் சேர்க்கப்பட்ட வேள்விகுடி என்ற ஊரை, ஆதித்தானம்பெற்றவன் வழியினனை காமக்காணி நற்சிங்கன் என்பானது வேண்டுகோட்படி அவனுக்குள்ள உரிமைகளைக்கொண்டு மறுமுறை தானசாஸனஞ் செய்ததைக் குறிப்பதே இவ்வேள்விகுடிச்செப்பேடுகளாகும். இச்சாஸனத்தால் முதுகுடுமிமுதலாக வரும் பாண்டிய வமிசத்து அரசர்களும், அவர்தம் அருஞ்செயல் பெருங்குணங்களும், சாஸனஞ்செய்த பாண்டியனது வீரம் நியாயம் தியாக முதலியனவும் நன்குவிளங்குவன. இதன் தமிழ்ப்பகுதியில்—

> "கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
> பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பாண்டியாதிராச
> நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் [ஞல்
> பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
> சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாது
> கொற்கைகிழான் நற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
> கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
> வேள்விச்சாலை முன்புநின்று வேள்விகுடியென் றப்பதியை
> சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
> நீரோடட்டிக் கொடுத்தமையால்"

என்று இப்புலவர் பாடுகின்றார். இதனால், பல்யாகசாலை என்று தான்பெற்ற சிறப்புப்பெயர்க்கேற்ப, அந்தணாளரைக் கொண்டு வேண்டியனவுதவி யாகங்கள் பலவற்றை நடத்தி வைத்தவன் அம்முதுகுடுமி என்பது பெறப்படும். இவ்வேந்தன் சங்ககாலத்துப் பாண்டியர்க்கும் முன்னோனாய் விளங்கிய

1. களப்பிரரின் மரபுபற்றி எட்டாண்டுகட்குமுன் யானெழுதிய கட்டுரைகாண்க. (Journal of Indian History, Vol·Viii, pp. 74-80)

வன் என்பது, புறநானூற்றுள் (6) இவனைப்பற்றியமைந்த பாடலை முற்படவைத்து முன்னோர் தொகுத்துள்ளமை யாலும், மதுரைக்காஞ்சியில்—

"பல்சாலை முதுகுடுமியின்
நல்வேள்வித் துறைபோகிய
* * * *
நிலந்தரு திருவி னெடியோன்" (759-63)

எனக் கூறப்படுதலாலும் அறியப்படும். இத்தகைய பாண்டியர்முன்னோனது தானபத்திரத்தைப் புதுப்பித்துதவிய அவன்வழியரசனது தமிழ்ப்பிரசஸ்தியைப் பாடிய பெருமை இச்சாத்தஞ்சாத்தற்கு உரியதாகும். சாத்தஞ் சாத்தன் என்பது சாத்தனுக்கு மகன் சாத்தன் என்றவாறு. ஏனாதி என்பது ஸேனாதி என்பதன் திரிபாய்ப் படைத்தலைவன் என்னும் பொருளது. இவ்வேனாதி என்னும் அடைமொழி தந்தையும் மகனும் ஆகிய சாத்தரிருவர்க்குஞ் சேரக்கூடியதாதலால், அவருள் ஒருவர் பாண்டியன் சேனைபதியாயிருந்தவர் என்று கொள்ளப்படும். இத்தமிழ்ப் பிரசஸ்தியினின்று, இதுபாடிய சாத்தனார், தமிழ்ப்புலமையொடு வடமொழியறிவும் சிறக்கப்படைத்தவர் என்பது புலனும். இச்செப்பேடுகளின் இறுதியில்—

"இப்பிரசஸ்தி பாடிய ஏனாதி சாத்தஞ்சாத்தற்கு மூன்றுகூற்றுருமாய்த் தங்களோடொத்த நான்குபடாரங் கொடுத்தார்"

என்று எழுதப்பட்டிருத்தலின், தாம் பாடிய புகழ்ச்சிப் பாடற்குத் தக்க பரிசாக அவ்வேள்விகுடியிற் பிறரோடொத்த கூறு நிலம்பெற்றுார் இவர் என்று தெரியலாம். இத்தகைய பரிசு, வடமொழிப் பிரசஸ்திப்பகுதியைப் பாடியவராகத் தெரியும் "ஸர்வகிருது சோமயாஜி" என்பாரும் பெற்றதாகக் கூறுமை குறிப்பிடத்தக்கது. இத்தமிழ்ப்பாடலில்

வடபதங்களையும் தொடர்களையும் மிகுதியாகவே இச்சாத்தஞ்சாத்தன் வழங்குகின்றார். இவரைப்போலவே, சின்னமனூர்ச் செப்பேடுகளிற் கண்ட தமிழ்ப்பகுதியைப் பாடிய புலவரும் வழங்குவர். இதனால், அக்காலத்தே மணிப்பிரவாள நடை வழக்குமிகுதிபெற்று அரசாங்கத்தும் பயின்றுவரலாயிற்று என்பது பெறப்படுகின்றது. இங்ஙனம், புறநானூறு முதலிய சங்கச்செய்யுட்கள் கூறும் பாண்டியமுன்னோனொருவன் செய்தியைக் குறிப்பிட்டும், அப்பழைய நூல்வரலாறுகளின் உண்மைநிலையை உணர்த்தியும் போந்த இச்சாத்தஞ்சாத்தனார் பெரிதும் போற்றற்குரியோர் ஆவர்.

## 9 தெள்ளாறெறிந்த நந்திவன்மனும் அவனைப்பாடிய புலவர்களும்.

ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பல்லவவேந்தர் பெரும்பாலாரும் வடமொழியிற் பேரபிமானமும் அதன்கண் தக்கபயிற்சியும் வாய்ந்திருந்தவர் என்பது அவர்தம் சாஸனங்களால் விளக்கமாகின்றது. ஆனால், மூன்றும் நந்திவன்மன் (கி. பி. 830-854) என்பான் தமிழறிவும் அதன்பால் ஆதரவும் படைத்திருந்தவன் என்று தெரிகின்றான். இந் நந்தியைத் "தெள்ளாறெறிந்து வென்றுகொண்ட நந்திபோத்தரையன்" என்று சாஸனங்கள்[1] கூறும். இவனது தெள்ளாற்று வெற்றியையே—

"தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானே
டியார்வேந்த ரேற்பா ரெதிர்"

எனவும், "பல்லவர் கோமான் பண்டிதராலயனை" எனவும் வரும் பாரதவெண்பா முதற்செய்யுளும் அதன் உரை

1. M.E.R. No. 120 of 1928-9.

நடைப் பகுதியும் புகழுகின்றன. நந்திக்கலம்பகம் என்ற பழைய பிரபந்த மொன்று இம்மூன்ரு நந்தியின்மேற் பாடப்பட்டதாம். அதனிலும் இவனது தெள்ளாற்றுவெற்றி சிறப்பிக்கப்பட்டுளது. இவற்ருல், பாரத வெண்பா, நந்திக்கலம்பகம் என்ற இருநூல்களின் ஆசிரியர்களையும் பெரிதும் அபிமானித்து ஆதரித்தவன் இந்நந்தியென்று தெரிகின்றது. அவ்விருநூல்களும் ஒரு புலவராற் பாடப்பெற்றன வாயினும் ஆகலாம். இவற்றுள் முன்னதான தமிழ்ப்பாரதம் பெருந்தேவஞர் பாடிய சங்கநூலின் வேருனது என்பதை மேலே குறிப்பிட்டேன். எனவே, மூன்ருநந்திவன்மன்காலத்தே பாரத வெண்பா நந்திக்கலம்பகவாசிரியர்கள் வாழ்ந்தவர்களென்பது விளங்கும்.

---

## 10 பெருமானடிகள்.



மேற்கூறிய நந்திவன்மனுடைய பேரன், 9-ம் நூற்ருண்டிறுதியில் ஆட்சிபுரிந்த அபராஜிதவர்மன் என்பவன். இவன் காலத்தே, நம்பி அப்பி[1] என்பார் திருத்தணிகை வீரட்டானேசுவரர் கோயிற்குத் திருப்பணிகள்பலவும் புரிந்த பெரியார் என்பது அக்கோயிலுள் வரையப்பட்ட கல்லெழுத்துக்களால் தெரியவருகின்றது. அவற்றுள் அடியிற்கண்ட சாஸனம் நோக்கத்தக்கது:—

''ஸ்வஸ்ஶ்ரீ:

திருந்து திருத்தணியற் செஞ்சடையீ சற்குக்
கருங்கல்லாற் கற்றளியா நிற்க—விரும்பியே

---

1. 'காசியபன் அப்பி வெண்காடன்' (M. E. R. No. 114 of 1925) என்பதனுல், அப்பி என்பது பார்ப்பனர்க்குள் முற்காலத்து வழங்கிய இயற்பெயராதல் காண்க.

நற்கலைக ளெல்லாம் நவின்றசீர் நம்பியப்பி
பொற்பமையச் செய்தான் புரிந்து
இது பெருமானடிகள் தாம்பாடி அருளித்து"[1]

குறிப்புடனமைந்த இச்செய்யுட்சாஸனத்தால், மேற் கூறிய நம்பியப்பியைப் ',பெருமானடிகள்'' புகழ்ந்துபாடிய வெண்பா இஃது என்பது தெரியலாம். பெருமானடிகள் என்பது திருமால் சிவபிரான் முதலிய கடவுளர்க்கன்றி அரச ர்க்கும் முன்னோர் வழங்கிவந்த சிறப்புப்பெயராகும். இதனை,

"இங்கே பெருமானடிகள் இராஜதேஜஸ் வாராசிற்க" (S. I. I. iv, 4) எனப் பல்லவனையும்,

"பெருமானடிகள்மேல் பல்லவரையர் படைவந்து" (Ep. Ind, Vol. xxii, p. 113) எனக் கங்கவரசனையும்,

"வீரசோழப் பெருமானடிகள்" (I. M. P. N.A. 120) எனச் சோழனையும்,

"பெருமானடிகள் உள்ளன்புமிக்குள இரணகீர்த்தி (S. I. I. Vol. iv, p. 219) எனப் பாண்டியனையும்

சாஸனங்கள் கூறுமாற்றா னுணர்க. எனவே, மேற்கூறிய வெண்பாப் பாடியவர், நம்பியப்பிகாலத்தவரான அரசரே என்பது தெளிவாம். இவ்வரசர் 9-ம் நூற்றாண்டிறுதியில் ஆட்சிபுரிந்த அபராஜிதன் என்ற பல்லவர் என்பது, அந்நம்பி யின் வேறுசாஸனங்கள் திருத்தணிகைக்கோயிலில் உள்ள வற்றினின்று அறியப்படுகின்றது. இவற்றால் பல்லவ அபராஜி தவர்மன் தமிழ்ப்புலமைவாய்ந்த அரசனென்பதும், அவனாற் பாடப்பெற்றிருத்தலாலும் "நற்கலைக ளெல்லாம் நவின்றசீர் நம்பி" என்பதனாலும் அவ்வப்பியும் புலமைமிக்க பெரியா ரென்பதும் பெறப்படுகின்றன.

1. The Journal of the S. I. Association, 1910, p. 183 n.

## 11 பள்ளிதரையன்.



மதுரை ஜில்லா, மேலூர்த் தாலுகா, கருங்காலக்குடிக் குன்றிலுள்ள குகையொன்றில் பள்ளிதரையன் என்ற பெரியாரொருவரைப் பற்றியமைந்த பாடலொன்று வட்டெழுத்தில் வரையப்பட்டுள்ளதாம். இவர் பாண்டியன்கீழ் அதிகாரிகளுள் ஒருவராய், அவன்பொருட்டுப் பல அரிய பெரிய செயல்களைப் புரிந்தவர் என்றும், அழகிய விமானமொன்று கட்டிமுடித்தவர் என்றும், தமிழ்க்கடலைப்பருகிய அகத்தியனார் விளங்கும் திருப்பொதியிலில் யாகங்கள் பலவுஞ்செய்வித்தவரென்றும், புலமையாளரென்றும், பெருந்துறவால் முனிவராக வாழ்ந்தவரென்றும் அப்பாடலால் தெரியவருகின்றன என்பர்.[1] இப்பெரியார் இருந்தகாலம் 8-அல்லது 9-ஆம் நூற்றாண்டாக வேண்டும் என்று அச்சாஸன எழுத்தமைதி கொண்டு கருதப்படுகின்றது. இத்தகையாரைப் பற்றி இலக்கியவழியால் ஒன்றுந் தெரியக்கூடவில்லை. பள்ளிதரையன் என்பது பல்லவதரையன் என்பதன் திரிபாகக் கருத இடமுண்டு. அவிநய நூலுக்கு உரையிட்டவரும் தண்டலங்கிழவருமாகிய "எண்டிசைநிறைபுக ழிராசபவித்திரப்பல்லவதரையன்" என்பாரைப் போல,[2] இப்பள்ளிதரையரும் நல்லிசைப் புலமைவாய்ந்த பெரியாரென்று இப்பாட்டால் அறியப்படும். மலைக்குகைகள்பல சைனப்பெரியார் இருந்துநோற்குந் தவப்பாழிகளாகவே மிகுதியும் காணப்படுகின்றன. இக்குகைச் சாஸனத்தால், வைதிகசமயத்துப் பெரியாரும் இத்தகைய குகைகளைத் தம் ஏகாந்தஸ்தலமாகக்கொண்டு தவம்புரிந்து வந்தனர் என்று விளங்குகின்றது.

---

1. M. E. R. No. 563 of 1911; p. 50.
2. நன்னூல், 359, மயிலைநாதருரை.

## 12 தென்னவன் தமிழவேள்.



மதுரைக்கு 4-மைலில் உள்ள நாகமலைச்சார்பில், கீழ்மாத்தூர் என்ற ஊரொன்று உண்டு. இதன்கணுள்ள சிவாலய கருப்பக்கிருகத்தின் குமுதப்படையில், அரைகுறையான வட்டெழுத்துச் சாஸனமொன்று செய்யுளுருவில் அமைந்துளதாம்.[1] இதனில் தென்னவன் தமிழவேள் என்பார் இச்சிவன்கோயிலைக் கட்டியவர் என்று தெரிகின்றார். இச்சாஸனப்பாட்டில்—

"மெய்ம்மையுணர்ந்தவன்" என்றும்,

"தரிசனங்க ளாறுந் தமிழ்கள் மூன்றும்
வடநூல் வகையும்
நீதி நூலும் மேதகு புராணமும்
ப்பாதஞ் சலமுதற் பனுவற் பயன்களும்"

உணர்ந்தவரென்றும் பெரியாரொருவர் புகழப்படுகின்றார். இப்புகழ்ச்சியுரைகள் மேற்கூறிய தமிழவேளுக்கு உரியன போலும்.[2] இவரது புலமைபற்றியே தமிழவேள் என்று சிறப்பிக்கப்பட்டனர் எனலாம்.[3] இவர் வேளிர்மரபினர் என்பதும், 10-ம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவர்என்பதும் பெயர் வழக்காலும் வட்டெழுத்தமைதியாலும் தெரிகின்றன. மேற்குறித்த தொடர்களினின்று, இச்சாஸனங் கூறும் பெரியார்

1. M.E.R. No. 626 of 1926.

2. சாஸனப்புகழ்கள், தமிழவேளல்லாத பிறர்க்குரியன என்று சாஸனபரிசோதகர் கருதுவர். இஃது உண்மையாயின், தமிழ்ப்புலமை வாய்ந்தவர் வேறுபெரியாரெனல் வேண்டும். சாஸனப்பாடல் கொண்டு இஃது ஆய்ந்தறியத்தக்கது.

3. தமிழவேள், தமிழதரையர் என்ற சிறப்புப்பெற்றோர் புலமைவாய்ந்த தலைவர்களாகவே தோற்றுகின்றனர்.

வடமொழி தென்மொழிகளிற் பெரும்புலமையும், சாஸ்திரப் பேரறிவும், தத்துவஞானமும்பெற்று ஞானியாக வாழ்ந்தவர் என்ற செய்தி நன்கறியப்படும்.

---

## 13 தம்பிரான்றோழர் மானக்கஞ்சாறர்.



தென்னார்க்காடு ஜில்லாவில், திருமுட்டம் எனவும் ஸ்ரீமுஷ்ணம் எனவும்வழங்கும் தலமானது, திருமால்கோயிலாற் பிரசித்தியுடையதாயினும் முற்காலத்தே சிவன்கோயிலானும் சிறப்புவாய்ந்திருந்ததாகும். முதலாங் குலோத்துங்க சோழனது ஆட்சியில், இவ்வூர்த் திருமால்தலம் ஆதிவராகநல்லூர் என்றும், சிவதலம் முடிகொண்டசோழநல்லூர் என்றும் வழங்கப்பட்டு வந்தன.[1] இவற்றுட் பின்னதிற் கோயில் கொண்ட 'திருமுட்டமுடைய மகாதேவர்' நித்தியேசுவரர் என இக்காலத்தாரால் வழங்கப்பெறுவர். இச் சிவாலயத்தின் கோபுரத்தே படிவமொன்று வகுக்கப்பட்டு அதன் மேல், "இஃது இவ்வாலயத்துக்குத் திருப்பதியம் விண்ணப்பஞ்செய்து விடைபெற்ற தம்பிரான்றோழன் மானக்கஞ்சாறனது உருவம்" என்ற பொருளிற் குறிப்பு வரையப்பட்டுள்ளதாம்.[2] இஃது ஆராய்ச்சிக்குரியதோர் அரிய செய்தியாகும். இதனால், இப்படிவமுடைய மானக்கஞ்சாறர் தம்பிரான்றோழர் என்ற சிறப்புப்பெயரும் உடையவரென்றும், சிவ

---

1. M. E. R. No. 233 of 1916.

2. "Above the image—states that the image represents Tambiran-rolan-Manakkancharan, who recited the *tiruppathiyam* of this temple and took leave ( i. e, died )" (M. E. R. No. 255 of 1916 (c); p. 150)

னடிமைத்திறமும் தமிழ்ப்புலமையும் கொண்டு விளங்கிய பெரியார் என்றுந் தெரிதலோடு, மானக்கஞ்சாறர் என்பதனால் இவர் கஞ்சாறு நகரினர்[1] என்பதும், திருப்பதியம் விண்ணப்பித்து விடைபெற்றவர் எனப்படுதலால், திருமுட்டமுடைய சிவபிரான்மேல் பதியம்பாடிய சிலகாலத்தில் இவர் சிவகதி அடையலாயினர் என்பதும் பெறப்படுகின்றன. இம் மானக்கஞ்சாறர் பாடிய பாடல்கள் இன்னவென்பது தெரியக்கூடவில்லை. எனினும், இவரது திருப்பதியம் முட்டத்துச் சிவபிரான் திருமுன்பே நெடுங்காலம் ஓதப்பட்டுவந்ததாக வேண்டும். இங்ஙனம் அப்பிரானிடம் பத்தித்திறம் மிக்கவராய்ப் பதிகஞ்சூடிச் சிறப்பித்த இப்பெரியாரது ஞாபகம் என்றும் நிலைத்திருக்குமாறு, இவர்படிவத்தைக் குறிப்புடன் அவ்வாலயகோபுரத்தே முன்னையோர் வகுத்திருத்தல் அறிந்து போற்றத்தக்கது. 'தம்பிரான்றோழன்' என்ற சிறப்புப்பெயர் சுந்தரமூர்த்திநாயனார்க்கு உரியதென்பது[2] பலரும் அறிவர். அப்பெயரை இவ்வடியாருந் தரித்திருத்தலின் இவர் அந்நாயனார்தொடர்புடையவரோ என்றும், அதனால் திருத்தொண்டத்தொகையிற் சிறப்பிக்கப்பட்ட 'மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ்சாறர்' தாமோ இவர் என்றும் அறிஞர் ஐயுறுதல்கூடியதாம்.[3] ஆயின் தம்பிரான்றோழரென்ற

---

1. இது கஞ்சாநகர் என இக்காலத்து வழங்கும். இந்நகர், திருவிந்தளூர் நாட்டைச் சார்ந்ததென்றும் (M. E. R. No. 255 of 1916 c) 'மானக்கஞ்சாறு' என்பதும் இதன் பழம்பெயரென்றும் (Ibid. No. 576 of 1919) அறியப்படுகின்றன.

2. பெரியபு. தடுத்தாட். 171.

3. சுந்தரமூர்த்திகள் காலத்தவரும் அவர்க்கு அன்பருமான ஏயர்கோன் கலிக்காமநாயனார்க்கு மகட்கொடுத்த மாமனார் மானக்கஞ்சாறர் என்பது பெரியபுராணத்தால் அறிந்தது. எனவே, மருகரைப்போலவே அவர்தம் மாமனும் அம் மூர்த்திகளிடம் பிரதிபத்தி

பெயர் அம்மானக்கஞ்சாறர்க்கு உண்டு என்றேனும் திருமுட்டத்துக்குத் திருப்பதியம் பாடியவர் அவர் என்றேனும் சேக்கிழார் அந்நாயனார்புராணத்துக் குறிப்பிடாமையால் அங்ஙனம் ஒருதலையாகச் சொல்வதற்கில்லை. இந்நிலையில், நாயன்மாருள் ஒருவரான மானக்கஞ்சாறர் மரபிற் றோன்றியவர் இப்பெரியாரென்றேனும், அந்நாயனார் பெயரைத்தரித்த பிற்காலத் தடியார் இவரென்றேனும் இப்போது கொள்ளல் தகும். சிவாலயம் திருமால்கோயில்கட்கு நாயன்மார்கள் ஆழ்வார்களேயன்றி ஏனைப் புலமைவாய்ந்த அடியார்களும் திருப்பதியம் பாடுதலும் அவை அத்தலத்தாரால் பத்தி சிரத்தைகளுடன் ஓதப்பட்டுவருதலும் நெடுங்காலவழக்கங்கள் என்பது, இம்மானக்கஞ்சாறர் சாஸனத்தாலும் பிறவற்றாலும்[1] அறியப்படுகின்றது.

---

யுடையவராதல் கூடியதென்றும், அதனால், தம்பிரான் றோழர் என்பது 'சுந்தரமூர்த்திகட்குரியவர் (=அன்பர்)' என்றபொருளில் வழங்கியதென்றுங் கொள்ளுமிடத்து, இச்சாஸனப்பெரியாரை நாயனாருளொருவராகக் கருத இடமுண்டு. இவ்வாறன்றி, தம்பிரான் றோழன் என்பது கடவுட்குஅன்பன், அரசற்கு அன்பன் என்ற பொருள்களிலும் வழங்குதலின், அவற்றுள் ஒன்று இத்தொடர்ப்பொருள் எனினும் அமையும். 'புலியூர்கிழவன் தம்பிரான்றோழன்' (S. I. I. Vii, p. 322), 'தம்பிரான் றோழன் கலியன் சேந்தன்' (M. E. R. No. 273 of 1927-8) என்ற தொடர்கள், அரசற்கன்பன் என்ற பொருளவாதல் காண்க. இவ்வாறே சேரமான் றோழன் (Ibid. 87 of 1927), பெருமாள் தோழன்' (Ibid. 440 of 1928-9) எனவும் வழங்குவர்.

1. இந்நூலுட் ''பிடவூர்வேளார் தந்தை'' என்ற பெரியார் வரலாறு காண்க.

## 14 மதுரையாசிரியன் இளங்கௌதமன்.



புதுக்கோட்டைச் சீமையில், சிற்றண்ணல்வாயில் (சித்தண்ணவாசல்) என்ற ஊரில் மலைக்குகையாகவுள்ள ஜிநாலயத்தே—

"திருந்திய பெரும்புகழ்த் தெய்வ தெரிசனத்
தருந்தவ முனிவனை [யா]ரருட் செல்வனை
[யுளங்கொள்] சீலமை இளங்கௌதமனெனும்
வளங்கெழு திருநகர் மதுரையாசிரியன் [அவ்வி]
பார்முழு தாண்ட பஞ்சவர் குலமுதல்
ஆர்கெழு வைவே லவனிப சேகரன்
சீர்கெழு செங்கோற் சிரீவல் லுவனுக்கு
...யாண்டு...

என, அகவலடிகள்கொண்டு தொடங்கும் சாஸனமொன்று வரையப்பட்டுள்ளது.[1] இதனுள், இளங்கௌதமன் என்பார் பாண்டியன் சிரீவல்லுவன்காலத்தில் அக்குகையில் அமைந்த ஜிநாலயத்தின் முன்மண்டபங் கட்டித் திருப்பணிசெய்த செய்தி கூறப்படுவதாம். இதனால், அவனிபசேகரன் என்ற சிறப்புப்பெயர்கொண்ட அப்பாண்டியன் ஆட்சியில், மதுரையாசிரியர் இளங்கௌதமன்* என்ற புலவரொருவர் சைன சமயத்தவராய் விளங்கியவர் என்பது தெரியலாம். சிரீவல்லுவன் என்பது ஸ்ரீவல்லபன் என்பதன் திரிபாம்.[2] இப்பெயர் கொண்டவன் 9-ம் நூற்றுண்டின் இடையில் ஆண்டவனும்,

1. M.E.R. No. 368 of 1904.

2. சிரீவல்லுவனென்பது, முதல் இராஜேந்திர சோழன் காலத்துப் பாண்டியன் (ஸ்ரீவல்லபன்) ஒருவனுக்கும் இவ்வாறே திரிந்துவழங்கும் (M.E.R. No. 47 of 1904-5).

கி. பி. 862-ல் பட்டம்பெற்ற இரண்டாம் வரகுணன் தந்தையுமான ஸ்ரீமாறன்ஸ்ரீவல்லபன் ஆகத் தெரிகின்றான். இவனுக்கு வழங்கும் அவனிபசேகரன் என்ற சிறப்புப்பெயரால் அவனிபசேகரமங்கலம் என்ற ஊரொன்று, இவன் மகனாகிய மேற்கூறிய வரகுணனது திருச்செந்தூர்ச் சாஸனத்துப் பயிலுதலின்,[1] அச்சிறப்புப்பெயர் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கே உரியதாகவேண்டும் என்பது பெறப்படுகின்றது. இப்பாண்டியன்பெயரால் 'அவனிபசேகரன் கோளகை' என்ற நாணயமொன்றும் வழங்கியதாம்.[2] இவ்வேந்தன் காலத்தவரான இளங்கௌதமனை 'மதுரையாசிரியன்' என்று சாஸனங் கூறுதலின், இவர் சங்கமிருந்த மதுரைமாநகரில் தங்காலத்துப் பிரபலராயிருந்த தமிழ்ப்புலவர் என்பதும், இவர்தமையனோ தந்தையோ மதுரையாசிரியர் கௌதமன் என்ற பெயர்பெற்றிருந்தவராதல்வேண்டும் என்பதும் தெரியலாம். 'மதுரையாசிரியன்' என்பதனையடுத்து 'அவ்வி' என்ற சொல் சாஸனத்துக் காணப்படுகின்றது. இஃது, அவரது இயற்பெயரைக் குறிப்பதுபோலும். இவற்றால், ஒன்பதாம் நூற்றாண்டில் விளங்கிய சைனத் தமிழாசிரியருள் இவ் விளங்கௌதமனும் ஒருவர் என்பது தெளிவாகும்.

---

1. M.E.R. No. 155 of 1903; Ibid. 1929-30 p. 74.
2. Ind. Ant. Vol. xxi, p. 323.

## 15 வேம்பையர்கோன் நாராயணன்.



திருச்சிராப்பள்ளிக் குன்றின்மேல், பல்லவர்காலத்து அமைந்த குடைவரைமதில்களில் பாயிரமுட்பட 104-பாடல்களாலாகிய அந்தாதிநூலொன்று [1] பொறிக்கப்பட்டுள்ளது. இதன் எழுத்தமைதிகொண்டு உத்தேசம் 9-அல்லது 10-ம் நூற்றூண்டில் இந்நூல் வரையப்பட்டதாதல் வேண்டும் என்று சாஸனவறிஞர் கருதுவர். இவ்வந்தாதி பாடியவர் மணியன்மகன் நாராயணன் என்பார். இவர்—மதுரை, மணலூர், வேம்பை, சேய்ஞலூர், குண்டூர் என்ற ஊர்களில் தலைமை பெற்றிருந்தவர் என்று தெரிகின்றூர். இவற்றை—

"மற்பந்த மார்வன் மணியன் மகன்மதில் வேம்பையர்கோன்
நற்பந்த மார்தமிழ் நாரா யணனஞ் சிராமலைமேற்
கற்பந்த னீழலில் வைத்த கலித்துறை நூறுங்கற்பார்
பொற்பந்த நீழ லரன்றிருப் பாதம் பொருந்துவரே

"மாட மதுரை மணலூர் மதில்வேம்பை
கோடமர் சேய்ஞலூர் குண்டூரிக்—நீடிய
நற்பதிக்கோ ஞரா யணனஞ் சிராமலைமேற்
கற்பதித்தான் சொன்ன கவி"

என்றுள்ள அந்நூலின் இறுதிப்பாடல்களால் உணர்க. இவ்வந்தாதிக் கலித்துறைகள், பொன்வண்ணத்தந்தாதி முதலியனபோல, துதிகளாகவும் அகத்துறைப்பொருளுடையனவாகவும் உள்ளன. இதன் ஆசிரியர், தமிழ்ப் பெரும்புலமையும் சிவஞானமும் வாய்ந்தவர் என்பதும், மதுரை முதலிய நகரங்களிற் பெருமைபடைத்து விளங்கிய வணிகர்குலத்த

1. S.I.I. Vol. iv, No. 167

வர் என்பதும் [1] தெரிகின்றன. இவ்வந்தாதிப் பாடல்கள் பல சிதைந்து காணப்படுவனவாம். தேவாரம்பாடிய மூவர்களைப் பற்றியேனும் திருவாதவூரடிகளையேனும் இதனாசிரியர் தம் பாடலொன்றினும் குறித்திலாமையால், அவர்தம் திருப்பதிகங்களும் வரலாறுகளும் தமிழ்நாட்டிற் பரவுதற்குமுன்--அஃதாவது 10-ம் நூற்றாண்டுக்குமுன்—இவர் வாழ்ந்தவர் என்றே சொல்லலாம். இந்நூலின் ஆதியும் அந்தமுமாகிய கலித்துறைகளைக் கீழே காண்க.

(1) "உலக மடந்தை நுதலுறத் தைப்பதி யந்நுதற்குத்
திலகம் பரம னமருஞ் சிராமலை யம்மலைவாய்
அலகி னிறைந்த கதிர்மணிப் பாய[ன்மேல் வந்துநந்தி?]
[விலகும]ப் பொன்னி பரன்கழுத் திற்கொண்ட வேள்வடமே"

(102) "அரியன சால வெளியகண் டீரரு வித்திரள்கள்
பரியன நேர்மணி சிந்துஞ் சிராமலைப் பால்வணனைக்
கரியன செய்யன நுண்புகர்ப் பைங்கட் கடாக்களிற்றின்
உரியனை நாழிகை யோதவல் லார்க்கிவ் வுலகத்துளே"

---

## 16 திருவிசைப்பாப் பாடிய சிவனடியார்கள்.



### சேந்தனார் - திருமாளிகைத் தேவர்

திருவிசைப்பா என்ற பிரபந்தத்தொகுதியை அருளிய பெரியார்களைப்பற்றிச் சாஸனமூலம் அறியக்கிடக்கும் செய்திகள் சில உள. இதன் ஆசிரியர்களுள் திருமாளிகைத்தேவர், சேந்தனார் என்ற இருவரைக் குறித்த சங்கையொன்று சில ஆண்டுகட்குமுன் எழுவதாயிற்று. முதல் இராஜராஜன்

1. "தேறுசொல் லாந்தமிழ்த் தென்வேம் பையரண்ணல் சேந்துவனை, நாறுமல் லாகத்து நாராயணன்" என்ற பாடற்பகுதியுள் வணிகர்மாலை இவர்க்குக் கூறப்பட்டுள்ளமை காண்க.

ஆட்சிக்காலத்தே திருவீழிமிழலைக் கோயிற்குத் திருநந்தா விளக்கொன்று, சிவஞானியும் திருமாளிகைத்தேவர் என்று வழங்கப் பெற்றவருமான ஐயந்தன் என்ற பெரியாரால் அமைக்கப்பட்டதென்று, அக்கோயிலிற்கண்ட சாஸனங்கள் கூறுகின்றன.[1] இவற்றால், 10,11-ம் நூற்றாண்டுகளில், ஐயந்தன் என்ற இயற்பெயரும் திருமாளிகைத்தேவர் என்ற சிறப்புப்பெயரும் வாய்ந்த சிவனடியாரொருவர் வாழ்ந்த செய்தி தெரியலாகும். ஐயந்தன் என்பது தமிழிற் சேந்தன் என்று திரிதல் மரபு. சேந்தனாரும் திருமாளிகைத்தேவரும் வேறுவேறானவர் என்பதே நெடுங்கால வழக்காகவுள்ளதாயினும், திருவிசைப்பாப் பிரபந்தங்கள் பெரும்பாலவுந்தோன்றிய முதல் இராஜராஜசோழன் காலத்தையொட்டி இத் திருவீழிமிழலைச் சாஸனங்கள் அமைந்துள்ளமையாலும், அவற்றிற்கண்ட பெரியார் சிவஞானி எனப் படுதலாலும், சாஸனமுள்ள அவ்வீழிமிழலைக்குச் சேந்தனார்பதிகமும் அமைந்திருத்தலாலும் அவ்விருவரும் ஒருவர்போலும் என்றசங்கை ஆராய்ச்சியாளர்க்குத் தோன்றுதல் இயல்பேயாம். இதற்கேற்ப, திருமாளிகைத்தேவர் பாடியவாகக் கூறப்படும் திருவிசைப்பாப் பதிகங்கள்நான்கனுள் ஒன்றிலேனும் அப்பெரியார்பெயர் திருக்கடைக்காப்பினுள் அமையாது, அந்நான்குடன் சேந்தனாரது மூன்றுஞ்சேர்ந்த ஏழுபதிகங்களிலே ஏழாம்பதிகத்திறுதியிற்றான் சேந்தன் என்ற முத்திரை இடப்பட்டுள்ளது. இதுவும், மேற்கூறிய ஐயத்தை வலியுறுத்துவதொன்றாம்.

## கண்டராதித்தர்

இப்பெயர் பெற்றார் சோழவேந்தர் என்பது அவரது திருக்கடைக்காப்புச் செய்யுளால் அறியப்படும். இவர், 10-ம்

1. செந்தமிழ், 3-ம் தொகுதி, 359-60-பக்கங்களில், ஸ்ரீ T. A. கோபிநாதராயர் அவர்கள் எழுதிய கட்டுரைகாண்க.

நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த முதற்பராந்தகசோழன் திருமகனார் என்று கொள்வதே பொருந்தும். சேந்தன் திருமாளிகைத் தேவரைச் 'சிவஞானி' என்று சாஸனங் கூறியவாறே, 'சிவஞான கண்டராதித்தர்' என்று சாஸனமொன்று [1] இவரையும் விசேடிக்கின்றது. இவரது கோப்பெருந்தேவியும் உத்தமசோழன் தாயுமான 'செம்பியன்மாதேவி' என்பார் புரிந்த எண்ணிறந்த சிவாலயத் திருப்பணிகளையும் பிற அறச்செயல்களையும் அவருருவை முதலிராஜராஜன் பிரதிஷ்டித்து வணங்கியிருத்தலையும் நோக்குமிடத்து அவ்வம்மையின் சிவதொண்டுச்சிறப்பு நன்கு விளங்கும்.[2] இதுபற்றியே 'மாதேவடிகள்' என்ற சிறப்புப்பெயராலும் அவர் வழங்கப்படுவர். அப்பெருந்தேவி, தம் நாயகரான கண்டராதித்தருடன் சிவபிரானை வழிபடுதலைக் குறிக்கும் பாவனையாகப் பிம்பங்கள் வகுக்கப்பட்டுள்ளன.[3]

## வேணாட்டடிகள்

இனி மேற்கூறிய கண்டராதித்தர்போலவே, வேணாட்டடிகள் என்பாரும் அரசராவர். தென் திருவாங்கூர்ச் சீமைக்கு வேணாடு என்பது பழம்பெயரென்பதும், 12-ம் நூற்றாண்டுச் சாஸனங்களில் அச்சீமையாண்ட அரசர் சிலர் 'வேணாட்டடிகள்'[4] என்று வழங்கப்பெற்றிருத்தலும் சாஸனங்கள்மூலம் அறியப்படுவன. இவ் வேணாட்டரசர் 16-ஆம் நூற்றாண்டினும் தமிழ்ப்புலமை வாய்ந்திருந்தவர் எனத் தெரிதலால்,[5] சில நூற்றாண்டுகட்கு முன்வரை தமிழ்

1. Ep. Car. ix, p. 99. 2. M.E.R. 1925, pp. 104-5.
3. S. I. I. Vol. iii, No. 146; M. E. R. No. 450 of 1908.
4. T.A.S. Vol. iii, p. 28; iv, 67.
5. இந்நூலுள், "சேரமான் பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன்" என்ற தலைப்பின்கீழ் இதன்விவரங் காண்க.

காடாகவே அமைந்த அதன் பழையவேந்தர், அப்புலமை பெற்றிருந்தது வியப்புக் குரியதன்று.

## பூந்துருத்தி நம்பி காடநம்பி

இப்பெயர்கொண்ட பெரியாரும் திருவிசைப்பா வாசிரியருள் ஒருவர். முதல் இராஜராஜனது 35-ஆம் ஆட்சியாண்டில் அமைந்த சாஸனமொன்றால், நம்பி காடநம்பி என்பார் ஆத்திரேய கோத்திரத்தவராய் அவ்வரசன்காலத்து வாழ்ந்த அடியாரென்பது [1] அறியப்படுகின்றது. இங்ஙனம் பெயரும் பீடுங் காலமும் பெரிதும் ஒத்திருத்தலால் திருவிசைப்பாக் காடநம்பியும் சாஸனக்காடநம்பியும் ஒருவராகவே கருதப் பொருத்தம் உண்டு. நிற்க.

முதல் இராஜராஜசோழனால் தஞ்சைப் பெரியகோயிற் கைங்கரியங்கட்கு நியமிக்கப்பட்ட தளிச்சேரிப் பெண்டுகள் (தேவரடியார்) சிலர் தரித்திருந்த பெயர்களிலே—

'நீறணி பவளக்குன்றம்,' 'எடுத்தபாதம்', 'மழலைச்சிலம்பு''

என்ற நாமங்களையும் [2] காணலாம். இவற்றுள், 'நீறணி பவளக்குன்றம்' என்ற தொடர் திருமாளிகைத் தேவரது திருவிசைப்பா முதற்பதிகத்து ஆறும்பாட்டின் முற்சீர்களாயுள்ளமையும், ஏனைய எடுத்தபாதமும் மழலைச்சிலம்பும் திருவாலியமுதனார் இயற்றிய மூன்றும்பதிகத்து 5-ம் பாட்டில்

''வாமத் தொழிலா ரெடுத்தபாதம்
மழலைச்சிலம் பார்ப்ப''

என்ற மூன்றுமடியின் இடைச்சீர்களா யிருத்தலும் அறியத் தக்கன. இவற்றினின்று, தேவார திருவாசகங்களின் அருந்

1. M.E.R. No. 221 of 1894.
2. S.I.I. Vol. ii, No. 66.

தொடர்கள் மக்கள்பெயர்களாக முற்காலத்து வழங்கிய வாறே,[1] திருவிசைப்பா அருந்தொடர்களும் அதுதோன்றிய சிலகாலத்தே வழங்கிப் பிரபலம்பெற்றிருந்தன என்பது தெளிவாகின்றது.

---

## 17 அமிதசாகர முனிவர்.



முதலாம் இராஜராஜசோழன்காலத்தே சிவனடியார்களின் பெருமைகளும் பதிகங்களும் அறிந்து போற்றப்பட்டன வாயினும், தமிழ்வளர்ச்சிக்குரிய செயல்கள் விசேடமாக நடந்தேறியது என்று சாஸனவழியால் தெரியவில்லை. ஆயினும், இவன்காலத்துக்கு முன்னும் பின்னும் சைன பௌத்தப் பெரியார்கள்சிலர் வாழ்ந்து இலக்கணநூல்கள் சில இயற்றியுதவினர். அவற்றுள்—யாப்பருங்கலம், காரிகை என்ற செய்யுளிலக்கண நூலிரண்டும் சிறந்தவையாகும். இவ்விருநூல்களையும் இயற்றிய ஆசிரியர் அமிதசாகரர் என்ற சைனமுனிவர் என்பதும், இவர் குணசாகரர் என்ற பெரியாரின் மாணாக்கர் என்பதும் யாப்பருங்கலப் பாயிரத்தால் அறியப்படுவன.

இவ் வமிதசாகரரைப்பற்றிக் கூறும் இரண்டு செய்யுட் சாஸனங்கள் வெளியிடப்பட்டுள்ளன.[2] இவை, தஞ்சாவூர் ஜில்லா மாயூரத்தை அடுத்துள்ள நீடூர்ச் சிவாலயத்திருமதில்களிற் பொறிக்கப்பட்டவை. அவை வருமாறு:—

---

1. "இணையாரமார்பன்" (தேவா. திருப்பழனம், 7.) "நிரம்ப வழகியன்" (திருவாச. அன்னை. 3) என்பன முறையே சடையவள்ளல்தம்பிக்கும் (தமிழ்நா. சரிதை.) சேதுபுராண வாசிரியர்க்கும் வழங்கியமை காண்க. இவ்வாறே பலவுள.

2. Ep. Ind. Vol. xiii, pp. 64-69; M.E.R. No.534 of 1921.

[முதற்சாஸனம்]

ஆரிய வுலக மனைத்தையுங் குடைக்கீழ்
ஆக்கிய குலோத்துங்க சோழற்
காண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை
யம்பலத் தேவட கீழ்பாற்
போரியன் மதத்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புராணநூல் விரிக்கும்
புரிசைமா ளிகையும் வரிசையால் விளங்கப்
பொருப்பினுன் விருப்புறச் செய்தோன்
நேரியற் காண்டே ழைஞ்சுடன் மூன்றில்
நிகரிலாக் கற்றளி நீடூர்
நிலாவினுற் கமைத்த நிலாவினு னமுத
சாகர னெடு[ந்தமிழ்த்] தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் றெண்டை
காவலன் சிறுகுன்ற நாட்டுக்
கற்பக மிழலை நாட்டுவே ளாண்[மை
கொண்]டவன் கண்டன்மா தவனே.

[இரண்டாஞ்சாஸனம்]

எண்டிசை யுலகை யொருகுடை நிழற்கீ
ழிருத்திய குலோத்துங்க சோழற்
கியாண்டொரு மூப்பத் தெட்டினிற் சோணுட்
டிசைவள ரிந்தளூர் நாட்[டுள்]
உண்டைசீ டியசீ டுருமை யோடு
[மு]லாவிய [சிவ]பெரு மா[னு]க்
குவந்து[வெண் கயி]லை மலையெனச் சிலையா
லுத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமி ழமித சாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத் திருத்தி[ச்
சந்த]நூற் காரிகை யவனுற்

கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்
காவல னிலாவின னெவர்க்குங்
கருணையு [நிதியுங்] காட்டிய மிழலை
நாட்டுவேள் கண்டன்மா தவனே.

இப்பாடல்களுள் இருதலைப்பகரங்கட்கு [ ] உட்பட்ட எழுத்துக்கள் சிதைந்துள்ள சீரசைகள் இன்னவென்று ஊகித்து இடப்பட்டவை. குலோத்துங்க சோழனது 46, 38-ஆம் ஆட்சியாண்டுகளிற் பொறிக்கப்பட்ட இச்சாஸனங்களினின்று—காரிகைக் குளத்தூர் மன்னவன், மிழலைநாட்டு வேள், தொண்டை காவலன் என்று சிறப்பிக்கப் பட்ட கண்டன்மாதவன் என்ற சிற்றரசன், அமிதசாகரமுனிவரைக் கொண்டு காரிகை செய்வித்தவனுடைய வழித்தோன்றல் என்ற அரியசெய்தி வெளியாதல் காணலாம். இச்சாஸன எழுத்தமைதியாலும் அரசனது நீண்ட ஆட்சிவருஷங்களாலும் முதற்குலோத்துங்கனே இப்பாடல்களிற் கண்ட சோழன் என்பர். மிழலைநாட்டு வேள் எனப்படுதலாலும் சோணாட்டு நீடூர்க்கு இவன்புரிந்த அறச்செயல்களாலும் அந்நாடு ஊர்கட்கு உரியவனாகச் சங்கநூல்கள் கூறும் வேள்-எவ்வியின்[1] வழித்தோன்றலானவன் இக்கண்டன் மாதவன் என்றும், அவ் வெவ்வியின் மரபினராகிய இவன்முன்னோர்; செயங்கொண்ட சோழமண்டலமான தொண்டை மண்டலத்தே சோழவதிகாரிகளாய்க் குளத்தூரைத் தலைமையிடமாகக் கொண்டு பிற்காலத்து வாழ்ந்தவரென்றும் தெரியவருகின்றன. அம் முன்னோருள் ஒருவனை—

“ தண்டமி ழமித சாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத் திருத்திச்
[சந்த]நூற் காரிகை யவனாற் கண்டவன் ”

1. அகநானூறு-266; புறநானூறு - 24.

என்று இரண்டாஞ் சாஸனம் கூறுகின்றது. இதனால் அமிதசாகரரை வேண்டித் தன்னூர்க்கு அழைத்துவந்து அவரைக்கொண்டு காரிகைசெய்வித்தவன் மிழலைவேளிருள் ஒருவனென்பதும், 'அமிதசாகர னெடுந்தமிழ்த் தொகுத்த காரிகைக் குளத்தூர்' என முதற்சாஸனங் கூறுவதனால், அங்ஙனம் காரிகையை அம்முனிவர் இருந்துபாடிய தலமாதல்பற்றி அவ்வூர் அவ்வாறு விசேடிக்கப்பெற்று வழங்கலாயிற் றென்பதும் தெரியலாம். இவ்வழக்கு, பிற்பட்ட சோழர்கள் காலங்களிலும் பிரபலமா யிருந்ததாம்.[1] இக்குளத்தூரைச் சூழ்ந்த பிரதேசத்தைச் சிறுகுன்றநாடு என்று சாஸனங் கூறுகின்றது. இந்நாடு தொண்டை மண்டலத்துள்ள ஆமூர்க்கோட்டத்தைச் சார்ந்ததாகும்.[2] அம் மண்டலத்திற் 'காரிகைப் பேரூர் நாடு' என்பதொன்றும் முதல் இராஜேந்திரசோழன் காலத்து வழங்கியது.[3] இப் பேரூரும் காரிகைக் குளத்தூரையே குறிப்பது எனலாம். இங்ஙனம் ஊர்நாடுகளின் பெயர்வழக்கினின்று அவ்விராஜேந்திரன் காலத்துக்கு முன்பே காரிகைநூல் செய்யப்பட்டுப் பிரபலம் பெற்றிருந்தது என்பது தெளிவாம். அமிதசாகர முனி வரவழைக்கப்பட்ட பிரதேசத்தைத் 'தொண்டை மண்டலத்து' என்னாது 'சயங்கொண்ட சோழமண்டலத்து' என்று சாஸனங்கூறுதலின், அப்பெயர், அமிதசாகரர்கா

1. 'காரிகைக் குளத்தூர் கிழான் பெருமானம்பிப் பல்லவராயன்' என்பான், இராஜராஜன் (II) காலத்துத் தலைமைமந்திரி யானவன் (M. E. R. No. 433 of 1924). குலோத்துங்கன் (III) காலத்துங் 'காரிகைக் குளத்துழார்' என்ற அதிகாரி யொருவர் உளர் (S. I. I. Vol. v, p. 188).

2. 'ஆமூர்க்கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டுச் சிறுகுன்றம்' என்பது சாஸனம் (S. I. I. Vol. v, p. 178).

3. M.E.R. No. 140 of 1912.

லத்தே வழங்கியதென்பது பெறப்படுகின்றது. படவே, சயங்கொண்டசோழன் என்பான் முதலிராஜராஜனே யாதலால், அவன் பெயரால் தொண்டைமண்டலம் வழங்கப்பெற்ற காலத்துக்குமுன்பு காரிகை செய்யப்பட்டதன்று என்பதும் விளங்கும்.

முற்கூறியபடி, முதல் இராஜேந்திரசோழன் காலத்துக்கு முன்பு செய்யப்பட்டது என்று தெரிந்த காரிகைநூல், அவன் தந்தை முதலிராஜராஜன் ஆட்சியிற்றான் செய்யப்பட்டிருக்கவேண்டும் என்றுந் தோற்றுகின்றது. பாண்டிநாட்டுக் கழுகுமலையில் 10-ம் நூற்றாண்டின் முற்பகுதியில், இராஜசிம்மபாண்டியனை மாறஞ்சடையன் என்பானது 3-ம் ஆட்சி வருஷத்தமைந்த சாஸனங்களிரண்டால்[1] குணசாகரர் என்ற பிரபல ஜைனமதாசாரியர், தம் சித்தாந்தத்தைப் பரவச்செய்தற்காக அம்மதப்பிரவர்த்தகர் சிலரை நியமித்து அவர்க்கு ஆகாரதானமாகப் பூமியுதவியசெய்தி தெரியவருகின்றது. இக்குணசாகரர் சீடர்பலரை உடையவரென்று ஆங்குள்ள வேறு கல்லெழுத்துக்கள் குறிக்கின்றன.[2] முற்கூறிய சாஸனங்களிலே, வீரநாராயணன், உத்தமசீலன் என்ற பெயர்கள் பயில்வன. இவற்றுள் முன்னது முதற்பராந்தக சோழனுக்கும் (கி. பி. 907—953), இரண்டாவது அப்பராந்தகன் மகனுக்கும் உரிய பெயர்கள் என்பது பலரும் அறிவர். எனவே, பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், இச்சாஸனஞ்செய்த குணசாகரபட்டாரகர் வாழ்ந்தவர் என்பது தெளிவாம். ஆகவே, முற்குறித்தவாறு முதலிராஜேந்திரனுக்கு முற்பட்டவராகத் தெளியப்பட்ட அமிதசாகரரின் ஆசாரியரை அப் பட்டாரகராகவே காலம் மதம்

1. S. I. I. Vol. v, p. 134.
2. Ibid. Nos. 310, 334.

பெயர்முதலியன ஒற்றுமைப்படுதல்கொண்டு கருதல் தகும். 'அமிதசாகர முனியை ...தண்சிறுகுன்ற நாட்டகத் திருத்தி' என்ற சாஸனக்கூற்றால், அம்முனிவர் வேற்றுநாட்டினர் என்பது விளங்கும். அவரது நாடு, அவருடைய ஆசிரியர்க்குரிய பாண்டிமண்டலமே எனலாம். அவ் வபிமானப்பற்றிப்போலும், தொண்டைநாட்டிலிருந்து இயற்றிய காரிகை நூலை ஆண்டு அரங்கேற்றாது 'தேனார் கமழ்தொங்கல் மீனவன் கேட்ப'[1] அப்பாண்டியனது அவைமுன்பு இம்முனிவர் அரங்கேற்றிய தென்க. 'அளப்பருங் கடற்பெய ரருந்தவத் தோன்' என்று யாப்பருங்கலப் பாயிரங் கூறுதற்கேற்ப, அமிதசாகரமுனி என்று, மேற்காட்டிய 2-ம் பாடற்சாஸனங் கூறியதாயினும், அமுதசாகரமுனி என்றும் முதற்சாஸனம் வழங்குகின்றது. இதனால், அவ்விருவகைவழக்கும் அக்காலத்துண்டு என்பது தெரியலாம். எனினும், முற்கூறிய பெயரே ஏற்புடையதாம். இன்றும் பிரபலமாக வழங்கும் நூற்பெயரொன்றால் ஊரும் நாடும் இவ்வாறு விசேடிக்கப்பட்டு வழங்கிய அரியசெய்தி சாஸனங்கள் வழியாகவே நமக்கு முதன்முதலாகத் தெரியவருதல் குறிப்பிடற்பாலதன்றோ? மற்றும் இதன் விரிவெல்லாம், "அமிதசாகரர்" என்ற தலைப்பின்கீழ் யான் எழுதிப் போந்த கட்டுரையால்[2] அறிக.

---

1. யாப்பருங்கலக்காரிகை, அவையடக்கச் செய்யுள். இதனுள் 'மீனவன் கேட்ப' என்பதிலுள்ள வினையெச்சத்தை, 'அருந்தவன் சொன்ன கன்னித் தமிழ்' என்பதனுள் 'சொன்ன' என்ற வினையுடன் கூட்டியும் பொருள்கூறலாமாயினும், கேட்போர்,களம் என்ற பாயிரவிலக்கணம் அதனால் அமையாமையின் அஃது ஏற்புடைத்தன்றென்க.

2. செந்தமிழ், தொகுதி 24, பக். 161—70.

# 18 பிடவூர்வேளார் தந்தை.



தொண்டைநாட்டுத் திருமாற்பேர்[1] என்ற ஊரிலுள்ள திருமால்கோயிலில் அமைந்த சாஸனமொன்று, குளக்குடையான் அருணிலை ஸ்ரீகிருஷ்ணன் மூவேந்தப் பிடவூர்வேளார் என்ற தலைவரின் தந்தை தமிழ்ப்புலமையும் திருமாலடிமைத் திறமும் வாய்ந்தவர் என்பதைக் குறிப்பிடுகின்றது.[2] இச்சாஸனம் முதல்இராஜராஜசோழனது 10-ம் ஆட்சி யாண்டில் அமைந்ததாம். பிடவூர் என்பது சோணாட்டில் வேளிர்க்கு உரிய பழைமையான ஊர்களில் ஒன்றாகும்; 'இருங்கோ வேண்மா னருங்கடிப் பிடவூர்' என்ப. இவ்வேளிரையும்[3] பிறரையும் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளர் என்பர் நச்சினார்க்கினியர்.[4] பிற்காலத்தும் இன்னோர் மரபினர் சோணாட்டுத் தலைவர்களாய் வாழ்ந்தவரென்பது இச்சாஸனத்தாற் புலனாம். இவருளொருவரே, மேற்கூறிய பெரியார் ஆவர். அருணிலை ஸ்ரீகிருஷ்ணன் என்ற சோழவதிகாரியை மகனாராகவுடைய இவர், திருமாற்பேரிலே கோயில் கொண்ட கோவிந்தப்பாடியாழ்வார்க்குக் "கோலநற்குழல்" என்று தொடங்கும் திருப்பதியம் பாடியவர் என்றும், அப்பதிகத்தைக் கோயிலுள் நித்தமும் ஓதும்படி அவர்மகன் மூவேந்தப் பிடவூர்வேளார் நிவந்தஞ்செய்தனர் என்றும் இச்சாஸனந் தெரிவிக்கின்றது. இவ்வரிய செய்தியினின்று, ஆழ்வார்கள் நாயன்மார்களின் பாடல்கள்பெறாத கோயில்

1. திருமலாபுரம் என்பது இக்காலவழக்கு.
2. M. E. R. No. 333 of 1906.
3. 'வேந்துவினையியற்கை' என்ற பொருளதிகார (30-ம்) சூத்திர வுரை காண்க.
4. இவ்வேளிரை வேளார் என்பது சோழர்காலத்துவழக்கு.

கள், முதலிராசராசன்காலமுதலே புலமைவாய்ந்த பெரியோர்களாற் பதிகங்கள் பாடப்பெற்றுப் பின்னோராற் பேணியோதப்பட்டுவந்தமை வெளியாகும். முதல் இராஜேந்திரன் காலத்தும் பாடல்பெறாத திருமால்கோயிற்குப் புதிதாகப்பதிகம் ஓத நிபந்தஞ்செய்யப்பட்ட செய்தி தெரிகின்றது.[1] இவ்வாறே தேவாரப்பாடல்பெறாத தலங்கள்சில, முதல் இராஜராஜன் அவன்மகன்காலங்களிற் சிவனடியாரான பெரியார்களாற் பதிகங்கள் பெற்றுள்ளமை திருவிசைப்பாவாற் புலனாம். மேற்கூறிய மானக்கஞ்சாறரது திருப்பதிகம் திருமுட்டத்தில் ஓதப்பட்டமையும் இங்குக் குறிப்பிடத்தகும். மூவர்பாடல்பெற்ற சிவதலங்களில் முதலிராஜராஜன்காலத்துக்கு முன்பு ஓதப்பட்டு வந்தனவாகச் சாஸனங்களால் அறியப்படும் திருப்பதியங்கள்[2] பெரும்பாலவும், அம் மூவர் ஓதியனவாகவே கொள்ள இடமுண்டு என்பது மேலே விளக்கப்பட்டது.

---

1. M.E.R. No. 183 of 1915.

2. பதியம், பத்யம் (பாட்டு) என்னும் வடமொழித்திரிபு. 'திருப்பாவைப் பல்பதியம்' என்பது திருப்பாவைத் தனியன். இது, பத்துப்பாடல்கொண்ட பிரபந்தத்துக்குப் பின்பு வழங்கலாயிற்று. 'பதிகம் பதிகமதாக வகுத்தனனே' என்பது, கம்பர்பாடிய சடகோபரந்தாதித் தனியன். இப்பதிகங்கள், சைனபௌத்தருள்ளும் அவ்வவர் தலங்கட்கு வழங்கின. திருப்பதிகம் என்ற நூல் பௌத்தர்க்குச் சிறந்ததாதலுங் காண்க (மணிமே. அரும்).

## 19 நாராயணன் பட்டாதித்தன்.



வெற்றிவேந்தர்களின் வீரமுதலிய செயல்கள் பிரபந்த ரூபமாக முன்னோராற் பாடப்பட்டிருத்தலை வடமொழியிலன்றித் தமிழினும் காணலாகும். தகடூர்யாத்திரை என்ற நூல், அதிகமானது தகடூர்மேற் கோப் பெருஞ்சேரலிரும்பொறைஎன்பான் படையெடுத்துப் பொருதுவென்ற திறங்களைப்பற்றி முன்னோர்பாடிய காப்பியமாம். கோச்செங்கணான், சேரனை வென்றதுபற்றிப் பொய்கையார் பாடிய களவழி நாற்பது என்ற சிறுநூலும் இத்தகையதே. இதுபோலும் நூல்கள், பிற்காலத்துப் பெருவேந்தர்கள்மேலும் பாடப்பட்டிருந்தன. குலோத்துங்கசோழசரிதை,[1] வீராணுக்க விஜயம்[2] என்பன முறையே அபயன், வீரசோழன் என்ற அரசர்களின் வரலாறுபற்றிப் பின்னோர் பாடியனவாம். இவ்வாறே அச்சோழர்களின் முன்னோனை முதல் இராஜராஜன்மேல் "ஸ்ரீராஜராஜவிஜயம்" என்ற நூலொன்று இயற்றப்பட்டிருந்தது என்று, சாஸனமொன்றால் [3] அறியப்படுகின்றது. இஃது, அவ்விராசராசனது வீரம் நியாயம் தியாகமுதலிய அரிய குணஞ்செயல்களைச் சிறப்பித்துப் பாடப்பெற்றதொரு நூலாகவேண்டும். இக்காவியத்தை விசேட காலங்களிற் படிப்பதற்காக "ஸவர்ணன்" [4] ஆன நாராயணன்

---

1. 'கவிகுமுத சந்திரப்பண்டிதன்' என்ற தலைப்பின்கீழ்க்காண்க.

2. "பூங்கோயில் நம்பி" என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

3. M.E.R. 1930—31, p. 44.

4. 'ஸவர்ணன்' என்பான் க்ஷத்திரியப்பெண்ணிடம் பிராமணற்குப் பிறந்த அநுலோமசாதியான் (வைஜயந்திநிகண்டு). இம்மரபினர் ஆதுலசாலைகளில் வைத்தியசிரேஷ்டர்களாய் விளங்கியவர்களாவர் (M. E. R. 112-3 of 1925; 248, 249 of 1923).

பட்டாதித்தன் என்பார்க்கு நிலம் இறையிலி செய்யப்பட்டது என்று அச்சாஸனங் கூறும். இவ்வாறு நூலோதுவதற்கென்று நியமிக்கப்பட்டோரே அந்நூலை இயற்றியவருமாதல் வேண்டும் என்று கருதலாம். இயற்றியவர் வேறாயின், அரசன் அவர்க்குச்செய்த சிறப்பைப்பற்றி ஒன்றுங் கூறாமல், அதனை அவைமுன் படிப்பதற்குமட்டுஞ் செய்யப்பட்டதைச் சாஸனம் எடுத்துக்கூற நியாயமில்லை. அதனால், நூலாக்கியோரே அதனைச் சபைமுன் ஓதிப் பலருமறியப் பிரகாசப்படுத்தலை விரும்பி இவ்வாறு நிலம் அளிக்கப்பட்டதாகக்கருதலே ஏற்புடையதாம். இந்நூல் தமிழில் அமைந்ததொன்றாகக் கருதலும் பொருந்தும். அவைமுன் ஓதிப் பலருமறியச் செய்வதற்குத் தேச பாஷையே ஏற்றதாதலாலும், இது தமிழ்ச்சாஸனமாயிருத்தலாலும், குலோத்துங்க சோழ சரிதை வீராணுக்க விஜயங்கள்போல, இதுவுங் கொள்ளற்பாலது. பிரபலனான சோழனொருவனது வரலாறுகளை விளக்கும் இத்தகைய காப்பியம் இப்போது வழக்குவீழ்ந்துள்ளமை வருந்தத்தக்கதாம்.

---

## 20 இராஜராஜேசுவர நாடக வாசிரியர்.

இதுவும், மேற்கூறிய முதல் இராஜராஜன்காலத்து இயற்றப்பட்ட நூலாகும். முன்பு குறித்த 'ஸ்ரீராஜராஜவிஜயம்' போல, இந்நாடகமும் அச்சோழனது பிறப்பு வளர்ப்புக்களையும் வீரம் நியாயமுதலிய அருஞ்செயல்களையும் பிற அறச்செயல்களையும் அவன் தஞ்சையில் நிருமித்த இராஜராஜேசுவரமான பெரியகோயில் கட்டப்பட்ட வரலாறுகளையும் பற்றிப் பாடப்பெற்றதாதல் வேண்டும். விசேடகாலங்களிலே அத்தஞ்சைக் கோயிலில் இந்நாடகத்தை நடித்துக் காட்டு

தற்கு வேண்டிய நிபந்தங்களை அச்சோழன்மகன் இராஜேந்திரன் செய்திருந்தான் என்று அவன் சாஸனத்தால் [1] தெரிய வருகின்றது. இந்நாடகம் வழக்கு வீழ்ந்தமையால் இதன் ஆசிரியர் இன்னாரென்றேனும், இதுகூறும் வரலாறுகள் இன்னவென்றேனுந் தெரிய இடமில்லை.

---

## 21 வீரசோழனும் தமிழ்ப்புலவர்களும்.



முதற்பராந்தகன்முதலாக முதலிராஜராஜன் வரை உள்ள சோழர்கள், வெற்றிவேந்தர்களாய் நாடெங்கும் தம் பேராற்றலைவிரித்த வீரசிகாமணிகளாகவும் ஆலயங்கட்குத் திருப்பணிகள்புரிந்த பத்திமான்களாகவும் விளங்கியவர்கள் என்பது உண்மையே. ஆனால், பெரும்புலவர்களைத் தம் ஆஸ்தானங்களிற்கொண்டு தமிழ்வளர்ச்சியும் அன்னோர் புரிந்துவந்தவர் என்பதற்கு, நூல்களிலேனும் சாஸனங்களிலேனும் குறிப்பிடத்தக்கது எதுவுமில்லை. அவர்களைப்பற்றிய தமிழ்ப் பாடல்களே காணப்படாமையோடு, மெய்க்கீர்த்திகள் அவர்கட்கில்லாமையும் வியப்பைத்தருவதாகும். அவ்வேந்தர்கள் தம்ஆயுள்முழுதும் வாகைமாலைசூடிப் பகைவேந்தரை ஒடுக்குவதிலும் சோழஏகாதிபத்யத்தைப் பெருக்குவதிலுமே ஈடுபட்டிருந்தமையால், அவர்கட்குப் புலவர்களின் புகழ்மாலைகளையும் சூடிக்கொள்ள அவகாசம் அமைந்ததில்லைப்போலும். முதல் இராஜராஜனும் அவன்மகன் இராஜேந்திரனும் அத்தகையோரே யாயினும், சிவனடியார்கட்கும் அவர்கள்திருப்பதிகங்கட்கும் பிராபல்யம் அளித்து நாடறியவைத்த பெருமை இவர்களுடையதாம். இவர்களது சாஸனங்களாகத் தஞ்சை

1. S.I.I. Vol. ii, p. 306; M.E.R. 1905. p ,98.

முதலிய இடங்களில் அமைந்தவற்றை நோக்குமிடத்து, உயரியதமிழ்நடையும், பிழையற்ற தன்மையும், தெளிபொருளும் உடையவாய் அவை ஒரேபடியாகத் திகழ்தல் தெரியலாம். இத்தகைய சுத்தமானதமிழை வேறு அரசர்சாஸனங்களிற் காண்டல் அரிது. இதனால், தமிழ்மொழி இவர்கள் அரசாட்சிகளிற் பெரிதுங் கவனித்துப் பேணப்பட்டதென்றே தெரிகின்றது. அன்றியும், மெய்க்கீர்த்தியை முதலாகக் கொண்டு சாஸனங்கள் வரையப்பட்டது, இவ்விராஜராஜன் காலமுதலே என்பதும் குறிப்பிடத்தக்கது. புலமைவாய்ந்த அடியார்களும் கவிஞர்களும் இவனாட்சியில் வாழ்ந்தசெய்தி, மேலேகூறினேன். இவன்வழியில், முதலிராஜேந்திரன் மக்களுள் மூன்றாமவனாய்ப் பட்டம்பெற்ற வீரராஜேந்திரன் (கி. பி. 1063-70) தமிழபிமானஞ் சிறக்க வாய்ந்திருந்தவன் ஆவன். புத்தமித்திரர் என்ற தமிழாசிரியரைக் கொண்டு வீரசோழியம் என்ற அரிய இலக்கணநூலை இயற்றுவித்தவன் இவனே.

"வீரசோழன் திருப்பெயராற் பூமேலுரைப்பன்"
"செம்பியன் வீரராசேந்திரன்றன் நாவியல் செந்தமிழ்ச்சொல்லின்"

எனப் புத்தமித்திரர் தம்நூலுட் கூறுதலால், வீரசோழன் என்ற வீரராஜேந்திரனே அந்நூல் செய்தற்குக் காரணமானவன் என்பதும், அதுபற்றித் தம்நூலுக்கு அவன் பெயரிடலாயினர் என்பதும் தெரியலாம். தம்மை அபிமானித்த சோழற்கு இப்புலவர்குறிப்பிட்ட அந்நாமங்களேயே—

"ஆகவமல்லனை மும்மடி வென்கண்ட வீரசோள
கரிகாலசோள ஸ்ரீவீரராஜேந்திரதேவ
ராஜகேசரிவன்ம பெருமானடிகள்"

என்று திருநாமநல்லூர் (திருநாவலூர்)ச் சாஸனமுங் கூறுதல் அறியத்தகும். இவனால் ஆதரிக்கப்பெற்ற புத்தமித்திரர்

'பொன்பற்றிகாவலன்' எனப்படுகின்றார். இது, மிழலைக்கூற்றத்தைச் சார்ந்ததென்பது—

> "ஈண்டுநூல் கண்டா னெழின்மிழலைக்[1] கூற்றத்துப்
> பூண்டபுகழ்ப் பொன்பற்றி காவலனே—மூண்டவரை
> வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுனை வீரன்றன்
> சொல்லின் படியே தொகுத்து"

என வீரசோழியவுரையிற் கண்ட வெண்பாவொன்றால் தெரியலாம். இவ்வாறே, சாஸனங்களும்,

> "மிழலைக் கூற்றத்துப் பொன்பற்றியுடையான்"[2]

என்று கூறுவன. இவ்வூர், தஞ்சாவூர் ஜில்லா அறந்தாங்கித் தாலுகாவில் பொன்பேத்தி என்று இப்போது வழங்குகின்றது. இப்பொன்பற்றிகாவலரான சேந்தன்என்பார் சோழன் சேனாபதியாகவும் பௌத்தசமயத்தவராகவும் வீரசோழிய உரைப்பாட்டொன்றிற் (யாப். 11) கூறப்படுகின்றார். இவர் அந்நூலியற்றிய புத்திரமித்திரர்க்கு முன்னோர்போலும். இவ்வாசிரியர் போலவே, வேறுபுலவரொருவரும் வீரசோழன் காலத்து வாழ்ந்தவராகத் தெரிதலை அடுத்துக் கூறுவேன்.

---

## 22 பூங்கோயில் நம்பி.



திருவாரூர்க் கமலாலயத்தின் முதற்பிராகாரத்தே தெற்குத் திருமதிலிற்கண்ட சாஸனமொன்று, அப்போதுவாழ்ந்த சோழனது 15-ம் ஆட்சியாண்டில் அமைந்ததாகும். அதனில், அவ்வரசன் தன்மகன் வீரசோழவணுக்கர்மேல் வீரணுக்க

---

1. 'மாலைக் கூற்றத்து' என்று அச்சுப்பிரதியிற் காணப்படினும் அஃது இவ்வாறு திருத்தற்குரியது.
2. I. M. P. Cg. 1014; Pd. 268.

விஜயம் என்ற நூல்பாடிய பூங்கோயில்நம்பி என்ற புலவருக்கு நிலங்கள்சில இறையிலியாகவிட்ட செய்தி காணப்படுகின்றது.[1] வீரசோழவணுக்கன் என்பது முதற்பராந்தகசோழனும்,[2] முதல் இராஜேந்திரன்மக்களுள் ஒருவனும் கொண்ட பெயராகும். இவர்களுள், இச்சாஸனங்கூறும் 'வீரசோழவணுக்கர்' என்பார், இராஜேந்திரசோழன் மகனை வீரராஜேந்திரன் என்று கருத இடமுண்டு.[3] அச்சோழனதுசேனைப் பிரிவுகளுள் வீரசோழவணுக்கர்படையும் ஒன்று என்று சாஸனமூலம் தெரிகின்றது.[4] இதனால், தன்மக்களுள் ஒருவனைத் தலைமையாகக்கொண்ட படையும் அவ்விராசேந்திரற்கு இருந்தமை பெறப்படும். இவ்வீரசோழன் தன் தந்தை காலத்தே யுத்தயாத்திரையொன்று நடத்தி அதனில் வெற்றிபெற்றவன் என்பதும், அவ்வெற்றித்திறத்தைப் புகழ்ந்து பாடியவர் இப்பூங்கோயில்நம்பி என்பதும் இச்சாஸனத்தால் அறியப்படுதல் காண்க. பூங்கோயில் - திருவாரூர்க் கமலாலயத்தின்பெயர்; "பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண்டிருந்தாரை" என்பர் சேக்கிழாரும்.[5] இவ்வீரணுக்கவிஜயம் இக்காலத்து வழக்குவீழ்ந்தமை வருந்தத்தக்கது.

---

1. M. E. R. No. 548 of 1904.
2. Historical Sketches of Ancient Deccan, p. 367.
3. இராஜகேசரிவர்மன் என்பானது 7,9-ம் ஆண்டுச் சாஸனங்களிலும் வீரசோழவணுக்கர் என்ற பெயர் தலைவர்சிலர்க்கு வழங்குகின்றது (M. E. R. Nos. 382, 387 of 1924).
4. S. I. I. Vol. ii, [9]
5. பெரியபு. ஏயர்கோன். 272.

## 23 முதற்குலோத்துங்க சோழனும் தமிழ்ப்புலவர்களும்.



மேற்கூறிய வீரராஜேந்திரனுக்கு மருகனும் அவன்பின் பட்டமெய்திய அபயன் என்ற முதற்குலோத்துங்கசோழன் (கி.பி. 1070—1119) தன்முன்னோர்களைப்போலப் புறப்பகைவர்களை ஒடுக்கி நாடுபெருக்கும் முயற்சியில் மூண்டுநின்றவன் என்று சொல்வதற்கில்லை. அவர்களால் வளர்க்கப்பட்ட தன் ஏகாதிபத்தியத்தின்கீழ் அடங்காத கலிங்கர்முதலியவர்களை அடக்குதற்குப் புரிந்த போர்களன்றி, வேற்றுநாடுகளைப் பிடிக்குந்துறையில் இவன் இறங்கியவனல்லன். அதனால், இவனாட்சி பெரும்பாலும் அமைதி பெற்றிருந்ததென்றே கூறலாம். இவ்வபயனது ஆஸ்தானத்தை அலங்கரித்து விளங்கிய கவிச்சக்கரவர்த்தியான சயங்கொண்டார், இவனது கலிங்கவெற்றிபற்றிப் பாடிய பரணிநூலில்—

"வருசெருவொன் றின்மையினால் மற்போருஞ்
 சொற்புலவர் வாதப் போரும்
இருசிறைவா ரணப்போரு மிகன்மதவா
 ரணப்போரு மினைய கண்டே" (263)

என்று கூறுகின்றார். இதனுள், தம்மரசனது ஆட்சிக்காலம் அமைதிபெற்றிருந்ததனால், பெரும்புலவர்களின் கலைவன்மையைச் சோதிப்பதினும், விலங்குப்போர்முதலிய விளையாடல்களைக்[1] காண்பதினும் அவன்மனம் ஈடுபடலாயிற்று

1. 'விலங்குப்போர் விளையாட்டு' என்ற தலைப்பின்கீழ் யானெழுதிய கட்டுரை காண்க. (கலைமகள்.)

என்று அவர் கூறுதல் காண்க. அங்ஙனமே, இவன் காலத்தில் தமிழ்ப்பெரும்புலவர் பலர் விளங்கினர். அவராவார்:—

1. கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டார்.
2. மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பலமுடையான்.
3. கவிகுமுதசந்திரபண்டிதன் திருநாராயணபட்டன்.
4. வீரைப் பரசமயகோளரி மாமுனி.
5. நெற்குன்றங்கிழார் களப்பாளராஜர்—என்பார்.

## 24 சயங்கொண்டார் பாடிய தலைவர்கள்.

கவிச்சக்கரவர்த்தியான சயங்கொண்டாரைப்பற்றிக் கல்லெழுத்துக்களால் நேரேயறியக்கூடிய செய்தி ஒன்றுமில்லை. ஆயினும், அவராற் பாடல்பெற்ற தலைவர்களைக் குறித்துச் சிலாலிகிதங்களால் தெரியவருவன சிலவுள. அபயன் என்ற முதற்குலோத்துங்கனது கலிங்கவெற்றிபற்றி இப்புலவர்பிரான் பாடிய பரணிநூலின் அருமைபெருமைகளும், அப்பாட்டுடைத்தலைவனை சோழனது சிறப்பும், அவ்வேந்தனது வெற்றிக்குக் காரணமான கருணாகரத் தொண்டைமானது அருஞ்செயல்களும் அறிஞர் நன்கறிந்தவை. இவற்றுள் மேற்கூறிய அத்தொண்டைமானை—

"வண்டையர் அரசன் அரசர்களுதன் மந்திரி"

"தண்ணார் மலர்சேர் திரடோ ளபயன்
தானேவிய சேனை தனக்கடையக்
கண்ணாகிய சோழனசக்கரமாங்
கருணாகரன் வாரண மேற்கொளவே" (350)

என்று சயங்கொண்டார் கூறுவர். இத்தொண்டைமானது ஊரான வண்டை என்பது, இதுவரை கருதப்பட்டுவந்தபடி

தொண்டைநாட்டு வண்டலூர் அன்றென்பதும், சோணாட்டுள்ள வண்டாழஞ்சேரி என்ற ஊரே என்பதும் சாஸனங்களால் விளங்குவன. இதனை—

"சோழமண்டலத்துக் குலோத்துங்கசோழ வளநாட்டுத் திருநறையூர்நாட்டு வண்டாழஞ் சேரியுடையான் வேளான் கருணாகரனான தொண்டைமானார்" [1]

என்ற காஞ்சீபுர சாஸனப்பகுதியால் தெளிவாம். இதனை, முன்னரே கண்டு நன்குவிளக்கியுள்ளேன். [2]

இனிச் 'சோழனசக்கரமாங் கருணாகரன்' என்ற பழம் பாடத்தைச் "சோழன் நிசக்கரமாம் கருணாகரன்" என்று மாற்றிக்கொண்டு ஆசிரியர் கருத்தல்லாப் பொருளுரைத்தாரும் உளர். அது பொருந்தாமையும், பொருந்தும் பொருளும் "கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி" என்ற நூலுள் என்னால் விரித்துக்கூறப்பட்டன. யான் கூறிய அப்பொருளினுண்மையைப் புறநாட்டுச் சாஸனமொன்றும் இப்போது மெய்ப்பித்தல் அறியத்தகும்.

'சோழனசக்கரம்' என்றது, திருமாற்குச் சக்கராயுதம் போல, சோழற்குச் சக்கரமாக உதவும் சேனாபதியென்றவாறு. அபயனேவலால் கருணாகரன் படையெழுந்தநிலையைப் பகைவர்கூற்றில் வைத்துச் சயங்கொண்டார்—

"கண்டு காணுன் படைவலி நீயும்அத்
தண்டு கொண்டவன் சக்கரம் வந்ததே" (375)

என்று பாடியிடத்தும், அத்தொண்டைமானைச் சக்கரமாக உருவகித்தல் காண்க. இனி, அனந்தபுரம் ஜில்லா, கொத்தசிவரம் என்ற ஊரில் உள்ள ஆஞ்சனேயர்கோயில்

1. S. I. I. Vol. iv, No. 862.
2. கலிங்கத்துப்பரணியாராய்ச்சி, பக். 35

தம்பமொன்றில் வரையப்பட்டதும், முதல் இராஜேந்திர னது 10-ம் ஆட்சியாண்டில் அமைந்ததுமான கன்னடசாஸ னத்தே[1] அச்சோழனது படைத்தலைவன்—நால்மடிவீமன், சோழனசக்கரம் என்று கூறப்பட்டுள்ளான். இச்சேனுபதி சோழியவரையன் என்பானுவன். இது மேற்கூறிய அக் கொத்தசிவரத்துக்கும் பாதசிவரம் என்ற ஊர்க்கும் இடையி லுள்ள சிவன்கோயிலுள் அமைந்த தமிழ்ச் சாஸனப்பாடல் களால்[2] அறியப்படுவன: அவை வருமாறு:—

"கலிங்கரையு மொட்டரையுங் கட்டழித்துக் கைவேற்
றெலிங்கரையுஞ் சேணவிசும்பிற் சேர்த்திக் - கொலிங்கரையும்
போரழித்து வாய்த்தனவே போர்ச்சோ ழியவரையன்
கார்முகத்து வாய்த்த கணை"

"வேயோடு சானதரில் வீழ்செருநர் தோற்பிடித்துப்
பேயோடு பேயுறங்கும் பெற்றித்தே—போயோடி
நான்மடிவீ மற்குடைந்த நாமப் படைத்தெலுங்கர்
கான்மடிவீ மட்டுலருங் காடு"

மேற்கூறியவற்றால், சோழரின் படைத்தலைவர் 'சோழ னசக்கரம்' என்ற சிறப்புப்பெயரால் அபயன்முன்னோர்கால முதலே வழங்கப்பட்டுவந்தமை தெரிதலின், கருணாகரனும் அத்தகைய சிறப்புக்கு உரியனாயினன் என்பது நன்கு விளங்கும்.

இக் கருணாகரத் தொண்டைமானுடன் கலிங்கப்போ ர்க்குச் சென்ற உபசேனுபதிகள் பல்லவரசர், வாணகோவரை யன், முடிகொண்ட சோழன் என்ற மூவர்கள் என்று செயங் கொண்டார் தம்பரணியிற் பாடுவர்(351 - 2). இவருட் பல்ல வரசர் என்பார் அத்தொண்டைமானுக்குத் தமையனாராவர்.

1. M. E. R. No. 23 of 1917 (c)
2. Ibid. No. 30 of 1917

இவரே "இராஜராஜ மூவேந்தவேளார் சேனாபதிபல்லவரசர்" என்று சாஸனத்துக் கூறப்படுபவர்.[1] வாணகோவரையன் என்பான், அதுவே பெயருடன் சாஸனங்களிற் கூறப்படு கின்றான்.[2] மூன்றாமவன், முடிகொண்டசோழ மூவேந்த வேளான் எனப்படுவன்.[3] இவனது போர்த்திறத்தை—

"புல்லாத மன்னர் புலாலுடம்பைப் பேய்வாங்க
ஒல்லாத கூற்ற முயிர்வாங்கப்—புல்லார்தந்
தாங்கு மடமகளிர் தத்த மிழைவாங்க
வாங்கும் வரிசிலைக்கை வாணனும்" (விக்கிரம. உலா)

என்று புகழ்வர் கூத்தரும். இவ்வாணனைப் பற்றியமைந்த செய்யுட்சாஸனமொன்று[4] அடியில்வருமாறு:—

"புயன்மேவு பொழிற்றஞ்சை முதற்பஞ்ச
நதிவாணன் புதல்வன் பூண்ட
வயமேவு களியானை முடிகொண்டான்
மாநெடுவேல் வத்தர் வேந்தன்
இயன்மேவு தோளபயற் கிருபத்தை
யாண்டதனி லிடர்க்க ரம்பைச்
செயன்மேவு மீச்சுரற்குத் திருநந்தா
விளக்கொன்று திருத்தி னானே"

மற்றும் செயங்கொண்டார் பாடிய பரணித்தலைவர்களின் வரலாறுகளும் பிறவும் யான் வெளியிட்டுள்ள "கலிங்கத்துப் பரணி யாராய்ச்சி" என்ற நூலுட் பரக்கக் கண்டுகொள்க.

---

1. I. M. P. No. 189
2. Ibid. No. 220.
3. Ibid. S. A. 986.
4. S. I. I. Vol. iv, 470.

# 25 மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பலமுடையான்.



புதுக்கோட்டைச் சீமை, குளத்தூர்த் தாலுகா, நாங்குப்பட்டி மடத்துக்கோயிற் பிராகாரமுகப்பில், இராஜகேசரி வர்மனான திரிபுவனசக்கரவர்த்தி குலோத்துங்கசோழதேவனது 13-ம் ஆண்டுச் சாஸனமொன்று உள்ளது.[1] அதனில், சோணாட்டிலுள்ள உறத்தூர்க்கூற்றத்துப் பையூருடையான் என்ற தலைவனைக் கவிபாடிப் புகழ்ந்த புலவர், செயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க்கோட்டத்து மருதத்தூரினரான 'மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பலமுடையான்' என்பவர் என்று தெரிகின்றார். இப்புலவர் அவ்வாறு பாடியதற்குப் பரிசிலாக அத்தலைவனால் இரும்பூதி என்ற ஊரை முற்றூட்டாகப் பெற்றனர் என்பதும், பெற்ற அவ்வூரை உறத்தூர்க்கூற்றத்திற் கோயில்கொண்ட திருப்பெருமானடிகள் என்ற சிவபெருமானுக்கு உதகபூர்வமாகச் சாஸனஞ்செய்து உதவினர் என்பதும்—

"பையூருடையான் வேதவனமுடையானை நான் கவிபாடிப் பாடின கவிக்கு எனக்குப் பரிசில்தந்த தன்காணியான குடிக்காடு இரும்பூதி" ".........தி குன்றன் திருச்சிற்றம்பல முடையானேன் ...திருப்பெருமானடிகள் திருக்கைமலரிலே நான் நீர்வார்த்த குடிக்காடு"

என்று, இப்புலவரே தம்சாஸனத்துக் கூறுதலால் தெரியவருகின்றன. இவர்பாடிய வெண்பாவொன்றும் அச்சாஸனத்துக் காணப்படுதல் அறியத்தக்கது. அது வருமாறு:—

"வாளை வயிறு நிறைய மடற்கமுகம்
பாளைபசுந் தேனொழுக்கும் பையூரே-நாளையென்று

1. புதுக்கோட்டைச்சீமைச் சாஸனத்தொகுதி, No. 129, p. 71

செப்பாத மெய்மையான் வேதன் றிருமனுநூ
லொப்பானெங் கோமான்ற னூர்"

இவ்வழகிய வெண்பாவின் சொற்பொருணயங்கள் அறிந்து மகிழற்பாலன. இவர்பாடிய பாடல்கள் பலவற்றுள், இஃதுஒன்றுபோலும். மேற்குறித்தசாஸனத்தால், இம்மருதத்தூருடையான், தொண்டைநாட்டினின்று சோணாட்டிற் குடியேறிவாழ்ந்த பெரும்புலவர் என்பதும், தம் புலமைத்திறத்தாற் பெற்ற பெரும்பரிசிலைத் தேவார்ப்பணஞ்செய்த பத்திமான் என்பதும் பெறப்படுவன. இச்சாஸனகாலத்தவனாகக் கூறப்படுஞ் சோழனை, அவனது காலக்குறிப்புக்களைக் கொண்டு முதற்குலோத்துங்கனாகக் கருதுவர்,[1] கணிதவறிஞர். அதனால், இப்புலவர் 11-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது தெரியலாம்.

---

## 26 கவிகுமுதசந்திர பண்டிதன் திருநாராயணபட்டன்.



பிரஞ்சு அரசாங்கத்தைச் சார்ந்த புதுச்சேரிச்சீமைத்திரிபுவனி என்ற ஊரிலுள்ள சிவாலயமண்டபத்தின் தெற்குத் திருமதிலில், மேற்கூறிய முதலாங் குலோத்துங்கசோழனது 27 - ம் ஆண்டுச் சாஸனமொன்று பொறிக்கப்பட்டுள்ளது.[2] அதனுள், திரிபுவனி மாதேவிச் சதுர்வேதமங்கலம் என வழங்கப்பட்ட அத்திரிபுவனியூரினரும் 'கவிகுமுதசந்திரன்' என்ற சிறப்புப்பெயர் படைத்தவருமான திருநாராயணபட்டன் என்பார், குலோத்துங்கசோழசரிதை என்றகாவியமொன்றுபாடினர் என்றும், அஃது அரசன் விருப்பின்படி

1. I. M. P. Pd. 159. 2. M. E. R. 198 of 1919.

அவ்வூர் மகாசபையார்முன் அரங்கேற்றப்பெற்று நன்குமதிக்கப்பட்டதோடு, அந்நூலாசிரியர்க்கு அவ்வூரில் நிலம் இறையிலிசெய்து அவர்களாற் பரிசளிக்கப்பெற்றதென்றும் கூறப்பட்டுள்ளன. இங்ஙனம் சிறப்பிக்கப்பட்ட காவியம் 'குலோத்துங்கசோழசரிதை' எனத் தமிழ்ப்பெயர் பெற்றிருத்தலாலும், வடமொழியிலன்றித் தமிழில் அமைந்த சாஸனமாயிருத்தலாலும் இது தமிழ்நூல் என்றே கருதற்குரியதாம். முதற் குலோத்துங்கனது 27 - ம் ஆட்சியாண்டில் இச்சிலாலிகிதம் அமைந்துள்ளமையால், அச்சோழனது நீண்ட ஆட்சியின் முதற்பகுதிவரலாறுகளே இக்காப்பியத்துப் பாடப்பட்டனவாதல் வேண்டும். அதனால், கி. பி.1115 - க்குச் சில்லாண்டுக்குமுன் அவ்வேந்தன் நடத்திய கலிங்கப்போர்ச் செய்திகள் இந்நூலில் அமைய இடமில்லை எனலாம். ஆகவே, அக்கலிங்கவெற்றியைப் பாடிய செயங்கொண்டார்க்கு இக்குலோத்துங்கசரிதையாசிரியர் முற்பட்டவரென்பது தேற்றம். புலவர்களாகிய குமுதங்கட்குச் சந்திரன்போன்றவர் என்ற பொருளுடைய இவர் சிறப்புப்பெயரினின்று, புலவர்களெல்லாம் ஈடுபட்ட வாக்கினிமையுடையவர் இத்திருநாராயணபட்டர் என்றும், அத்தகைய மதிப்பை அரசனற்பெற்று, செயங்கொண்டார்க்கு முன்பே அவன்வாயிற் பெரும்புலவருள் ஒருவராய் விளங்கியவர் இவர் என்றும் கருதல் தகும். இந்நூல் அடைந்துள்ள பெருஞ்சிறப்பை நோக்குமிடத்து, இது புலவர்களாற் போற்றப்பட்டு அக்காலத்துப் பெருவழக்குப் பெற்றிருந்ததென்றே சொல்லலாம். இத்தகைய காப்பியமும் இக்காலத்து வழக்குவீழ்ந்ததாம்.

---

# 27 வீரைத்தலைவன் பரசமயகோளரி மாமுனி.



தென்னார்க்காடு ஜில்லா, திருப்பாதிரிப்புலியூர்ப் பாடலீசுவரர்கோயில் மேற்குத் திருமதிலில், பாடற்சாஸனங்களிரண்டு சிதைவும் பிழையுமுடையனவாகக் காணப்படுகின்றன.[1] ஆங்குள்ளபடி அவை பின்வருமாறு:—

(1) 1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகுலோத்துங்கசோழ தேவர்க்கு
யாண்டு ௨௧. தழைத்ததிருப்பாதிரிப்...

2. ன வீரைதலைவ னிருடைப்[2] பரசமையகோ
ளரிமாமுனிக்கு கொழித்தவஷ்டாதசபுராணங்க...

3. தானங் கன்னிவனபுராணம் வழுத்தபடிகாட்டுத
லானந்தருமவ்ருத்திபாலையூரு...யிருபூவிளையுகி...

4. பழுத்துமறை தனமாயுள்ளனவு முண்ண
விறையிலியாம் வகைதந்தோ மிரண்டுமாவே.

(2) 1. ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழ தேவர்க்குயாண்டு
௨௧. திருவாழுங் கறைஞாழற் சினைமரும்...

2. சாஸனந் தென்மருதம் பாகைக் கருவாழ வருங்
கமலாலயற்குக் கன்னிவனபுராணம் பாடிப் பரிசி...

3. வாடுந் நாடகமுஞ் செய்தாற்கு சிறப்பாப் பாலையூரினி
விருபூவும் விளையும்பாரில் ஒருமா[நன்] நில

4. ...பருங்கொழுகிளையினோடு மூழிதொறு
மிறையிலியே யுரைத்தானேய்.

---

1. S. I. I. Vol. Vii, pp. 752-3; M.E.R. No.128 of 1902.

2. 'னிரும்பை' என்று, ஸ்ரீ. து. அ. கோபிநாதராயர் படித்திருப்பதாக, அவர்கட்டுரையொன்றால் தெரிகின்றது (செந்தமிழ், தொகுதி-13, பக். 173).

மாங்கொல் லை[யிலி]ரண்டு மாவொருமா முக்காணி
யோங்கு மறப்பெருஞ் செல்வி யொருகாணி...
பூவமர் காணியினிற் பூம்புலியூர் நாடகஞ்செய்
நாவலன் பெற்ற நலம்.

இங்ஙனம் அமைந்த மூன்றுபாடல்களிலே, ஈற்று வெண்பாவொழிய ஒழிந்தவை, செய்யுளமைதியை ஊகித்துக்கொள்ளற்கு இடமின்றியுள்ளன. எனினும், இவற்றினின்று அரியசெய்திகள் சில தெரியவருகின்றன. வீரைத்தலைவன் என்ற அடையுடன் பரசமயகோளரி என்ற புலமைப்பெரியாரொருவர், முதற்குலோத்துங்கனது ஆட்சியிறுதியில் விளங்கியவர் என்பது, அச்சோழனது 41, 49-ம் ஆட்சியாண்டுகளில் இச்சாஸனங்கள் அமைந்தமையால் அறியப்படும். 'மாமுனி' என இவர் வழங்கப்படுதலின், துறவியும் மடாதிபதியுமாக இவர் வாழ்ந்தவரென்பதும், பரசமயகோளரிஎனப்படுதலின், சமயவாதம்புரிந்து வெற்றிபெற்றவரென்பதும் பெறப்படுவன. இவர்—அஷ்டாதசபுராணம், கன்னிவனபுராணம், பூம்புலியூர்நாடகம் என்ற நூல்கள்பாடியவர் என்றும் இவர்க்குப் பாலையூரில் நிலம் இறையிலிசெய்து அளிக்கப்பட்டதென்றும் இப்பாடல்கள் கூறுகின்றன. இவ்வாறு, இவரைகொண்டு பாடுவித்துப் பரிசிலுதவியவன், அரசனுன குலோத்துங்கனுகவே தோற்றுகின்றுன். திருப்பாதிரிப்புலியூரின் தொடர்பும் இம்மாமுனிக் குண்டென்று தெரிகிறது. இரும்பை என்ற ஊர்க்கும் இவர் உரியவர்போலும். புராணநூல்களும், நாடக நூலும் அபயன்காலத்தே இயற்றப்பட்டிருந்தவை என்பது இச்சாஸனப்பாடல்களால் அறியலாகும். இந்நூல்களில் ஒன்றுமே இப்போது கிடைத்திலது. கம்பர் கூத்தர்கட்குமுன் செயங்கொண்டார்காலத்து இம்மாமுனி வாழ்ந்தவர் என்பது, அபயனது ஆட்சியின் பிற்பகுதியில் இவர் நூல்கள்பாடியுள்ள செய்தியினின்று அறியலாம்.

## 28 நெற்குன்றங்கிழார் களப்பாளராசர்.



கவிச்சக்கரவர்த்தியான கூத்தர்காலத்தில் 'நெற்குன்ற வாணர்' என்ற தலைவரொருவர் வாழ்ந்தவர் என்பது தமிழ் நாவலர்சரிதை என்ற நூலால் (127) அறியப்படுகின்றது. அக்கூத்தர் தங்காலத்தே சிறுபுலவர்கள் பெருகிவந்ததைப் பொறுக்காது, அன்னோரைக் கடுமையாகத் தண்டிக்கும்படி தம் செல்வாக்காற் செய்துவந்ததைத் தடுத்தல்வேண்டி,

"கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூவில்விண்ணோர்
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ர வர்த்திநின் கட்டுரையாம்
பாக்கண் டொழிவர்க ளோதமிழ் பாடிய பாவலரே"

என்று அப்புலவர்முன்னின்று அஞ்சாது கூறியவர் இப் பெருந்தகையாரேயாவர். இது,

"கவிஞரை வெட்டவேண்டா' என்ற நெற்குன்ற வாண
முதலியார் பாடியது"

என அச்சரிதை நூலுட் காணப்படுங் குறிப்பால் விளக்க மாம். யாதவகுலத்தவரான நம்பிகாளி [1] என்பாரது புலமைத் திறத்தில் இந் நெற்குன்றவாணர் ஈடுபட்டு அவர்க்குத் தம் முடைமையாவும் அளித்துத் தாமும் அடிமையாயினர் என் பர். இதனை—

"கற்குங் கவிவல்ல [2] யாதவர்கோ னம்பி காளிக்கியாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்

1. இப்புலவர் செய்தியை, தக்கயாகப்பரணி, 457-ம் தாழிசை விசேடக்குறிப்பிற் காண்க. இவர் முருகக்கடவுளின் பேரருளைத் துணைக்கொண்டு பாடிய பாட்டொன்றும் கொங்குமண்டல சதகத்துப் (78) பயில்கின்றது.

2. 'வல்லே யாதவர்கோன்' என்றும் பாடமுண்டு.

பொற்குன் றமும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போல்
நெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே"

என்ற இத்தலைவர்வாக்கால்[1] உணர்க. இதனால், தமிழ்ப் புலமையும் வள்ளன்மையும் வாய்ந்துவிளங்கியவர் இவர் என்பது தெளிவாகும். சோணாட்டுள்ள திருப்புகலூர்ச் சிவபிரான் மேற் சொற்பொருணயங்கள்மலிந்த அந்தாதி நூலொன்றும் இத்தலைவராற் பாடப்பெற்றுளது. அந்நூலிறுதியில்—

"களப்பாள னெற்குன்ற வாணனந் தாதிக் கலித்துறையே"
எனப்பாடிய தொடரால், களப்பாளர் என்ற மரபினர் இவரென்பது தெரியலாம். இத்தகைய வள்ளற் புலவரைப்பற்றிச் சாஸனவழியாலும் நாம் அறிய இடமுண்டு.

மேற்கூறிய திருப்புகலூர்ச் சிவாலயத்துள், முதற் குலோத்துங்க சோழனது 49-ம் ஆட்சியாண்டில் அமைந்த சிலாலிகிதமொன்றில்—

"ஸ்ரீ புகலூர்த்தேவர் மத்தியான்னம் அமுதுசெய்தருளும் போது... நித்தம் பன்னிரண்டு பிராமணர் உண்பதாக, ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க்கோட்டத்துப் பேரூர்நாட்டு நெற்குன்றத்து நெற்குன்றங் கிழார் அரையன் கருவுணயகரான களப்பாளராஜர் செய்வித்த சாலைக்கு... சாலைப்புறமாக இறையிலி செய்து"[2]

எனக் காணப்படுதல் அறியத்தகும். இதனுட்கண்ட நெற்குன்றங்கிழார் திருப்புகலூர்ச் சிவபிரானிடம் பத்திமிக்கு அறம்புரிந்திருத்தலாலும், 'களப்பாளராஜர்' எனப் படுதலாலும் மேற்கூறியபடி புகலூரந்தாதிபாடிய "களப்பாள னெற்குன்றவாணன்" என்பாரே இச்சாஸனம் அமைத்தவர்

1. தொண்டைமண்டலசதகம், 83-மேற்கோள்.
2. M.E.R. No. 96 of 1927-8.

என்று கருதக்கூடியதாம். களப்பாளர் என்பார் பண்டைக் காலமுதலே தமிழ்நாட்டில் சிற்றரசுரிமைபெற்ற தலைவர்களாய் விளங்கியவர் என்பது, நூல்களாலும் சாஸனங்களாலும் அறியப்படுகின்றது.[1] அபயனென குலோத்துங்கனது ஆட்சியிறுதியில் சாஸனமமைத்துள்ள இந் நெற்குன்றங்கிழார், அவன்மகன் விக்கிரமசோழன்ஆட்சிக் காலத்தும் திருமந்திரவோலை நாயகமாய் விளங்கியவர் என்று ஆலங்குடிச்சாஸனமொன்றால்[2] அறியப்படுவதாம். ஆகவே, அவ் விக்கிரமசோழனைப்பாடிய கூத்தர்காலத்தும் இவர் வாழ்ந்திருந்தவர் என்பது பொருத்தமாதல் காண்க. இவற்றால், நெற்குன்றங்கிழார்...களப்பாளராஜர்' எனச் சாஸனங்குறித்த தலைவர் 'களப்பாள னெற்குன்றவாணன்' என்பவரே என்பதும், இவர் சிவனடிமைத்திறமும் புலமையும் பெற்றிருந்ததோடு புலவர்க்குப் பேருபகாரியுமாய் விளங்கியவர் என்பதும் தெளியப்படும்.

---

1. இம்மரபினரே, கூற்றுவநாயனர் (பெரியபு.), அச்சுதகளப்பாளன் (தமிழ்நா.), பாலறுவாயர், மெய்கண்டதேவர், அரிதாசர் முதலியோர்.

2. S. I. I. Vol. v, p. 178.

## 29 அனபாயன் குலோத்துங்கனும் தமிழ்ப்புலவர்களும்.



அபயனான முதற்குலோத்துங்கசோழன் போலவே, அவன் பேரனான அனபாய குலோத்துங்கனும் தமிழறிவு சிறக்கப் படைத்தவனாகவும் புலவர்பலரைக்கொண்டு தமிழ் வளர்ச்சி புரிந்தவனாகவும் விளங்கினன். இவனது பேரவையைக் கவிச்சக்ரவர்த்தி கூத்தர், சேக்கிழார், பேராசிரியர்நேமிநாதர், தண்டியாசிரியர் முதலியோர் அலங்கரித்துவந்தனர். இக்குலோத்துங்கன்மேற் பிள்ளைத்தமிழும் உலாவும் கூத்தரால் பாடப்பட்டன. பெரியபுராணம் என்ற சீரிய நூலைச் சேக்கிழாரைக்கொண்டு தமிழுலகிற்கு உபகரித்தவன் இச்சோழனே. பேராசிரியர்-நேமிநாதர் என்பாரொருவர் இவனதவையில் இருந்தவர்என்பது தமிழ்நாவலர்சரிதையால்(129) தெரிகின்றது. இந்நேமிநாதர் தொல்காப்பியத்துக்கு உரையிட்ட பேராசிரியரோ என்ற சங்கையுண்டு. தண்டியலங்காரத்தைச் "செம்பியன் அவையத்து" அதனாசிரியர்வகுத்தனர் என்று அந்நூற்பாயிரங் கூறும். இச்செம்பியன் மேற்கூறிய அனபாயனே ஆதல் வேண்டும் என்பது, இச்சோழனைப்பற்றியும் இவனதவைப் பெரும்புலவரான கூத்தரைப் பற்றியும் தண்டியாசிரியர் ஆண்டுள்ள பாடல்கள் பலவற்றால் கருதப்படும். இச்சோழனவையில் விளங்கிய புலவர்பெருமக்களைப் பற்றிச் சாஸனவழியால் அறிந்தசெய்திகளை இனிக் கூறுவேன்.

---

# 30 கவிச்சக்கரவர்த்தி கூத்தரும் அவர்பேரனார் ஓவாதகூத்தரும்.



கவிப்பெருமானன கூத்தரைப்பற்றிப் பின்னிகழ்ந்த ஆராய்ச்சியால் அறியப்பட்ட செய்திகள் பல.[1] இப்புலவர், விக்கிரமன், குலோத்துங்கன், இராஜராஜன் என்ற சோழவேந்தர் மூவர் ஆஸ்தானங்களையும் அலங்கரித்து விளங்கியவர் என்பது அறிஞர் அறிந்தது. இத்தகைய பெரும்புலவரைப் பற்றிச் சாஸனவழியால் அறிதற்கு இடமில்லாதிருப்பது வருந்தத்தக்கது. எனினும், இவர்பேரனாரது சிலாலிகிதமொன்று அக்குறையைச் சிறிதளவு நீக்குவதெனலாம். தஞ்சை ஜில்லா நன்னிலந் தாலுகா, பூந்தோட்டம் என்ற ஊரையடுத்துக் காவிரிக்கரைக்கணுள்ள கூத்தனூரில் சரசுவதிதேவிக்குக் கோயிலொன்று உளது. இக்கோயிற் கிணற்றருகிற் கிடந்த விக்கிரகபீடமான ஆதாரசிலையிற்கண்ட[2] அரியசாஸனம் அடியில் வருமாறு:—

"[ஸ்வஸ்தி] ஸ்ரீ ஸரஸ்வதீதேவியை எழுந்தருளுவித்தார். இவ்வூர் [நஞ்சை] 20-ம் காணி உடைய மலரி உடையார். இந்தக் கவிச்சக்ரவர்த்திகள் பேரனார் கவிப்பெருமாளான ஓவாதகூத்தர்"— என்பதாம்.[3]

---

1. இக்கூத்தரைப்பற்றி யானெழுதிய கட்டுரை காண்க (செங்குந்தர் பிரபந்தத்திரட்டு, முகவுரை).

2. இச்சாஸனத்தை முதன்முதற்கண்டு வெளியிட்டவர் இலக்கணவிளக்கவாசிரியர் பரம்பரை: ஸ்ரீ. சோமசுந்தரதேசிகர் அவர்களாவர் (செந்தமிழ், தொ-25, ப-11). இச்சாஸனத்திறுதியில் 'ஆனந்தவாதகூத்தர்' என்று முன்பு படிக்கப்பட்டதாயினும் அது பொருத்தமற்று என்பது ஆராய்ச்சியால் தெரிகின்றது.

3. M.E.R. No. 109 of 1927-28.

இச்சாஸனத்தால், கூத்தனூரில் சரஸ்வதிதேவிக்குக் கோயிலெடுத்துப் பிரதிஷ்டைசெய்தவர், மலரியுடையாரான கவிச்சக்கரவர்த்தியின் பேரனார் ஓவாதகூத்தர் என்பது தெரியலாம். 'மலரியுடைய கவிச்சக்கரவர்த்தி' எனப்படுவார் கூத்தரே என்பது "மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" என்ற தண்டியலங்கார மேற்கோட்செய்யுளாற் (48) பெறப்படும். மலரி என்பது சோணாட்டுத் திருவெறும்பியூரின் பழம்பெயராகும்.[1] பாண்டிநாட்டுத் திருவாடானைச் சேகரத்தும் மலரி என்ற ஊருண்டு. இவற்றுள் எதுவாயினும் இம்மலரிக் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரே என்பது தேற்றமாம். "சரசுவதி தம்பலங்கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்தமுதலியார்" என்ற தமிழ்நாவலர்சரிதைக் குறிப்பும், தக்கயாகப் பரணியிறுதியில்—

"ஆற்றங்கரைச்சொற் கிழத்திவாழியே
கூத்தன்கவிச்சக்ர வர்த்திவாழியே"

எனவரும் அடிகளும் மேற்கூறிய சாஸனச்செய்திகளோடு இயைபுடையவாதல் இங்கு அறியத்தகும். கூத்தர் காணியானமைபற்றிக் கூத்தனூர் என்று இக்கிராமம் பழைமையாகவே பெயர்வழங்கியது.[2]

இனி, இக்கூத்தரின் பேரனார்க்குக் 'கவிப்பெருமாள்' என்ற சிறப்புப்பெயர் கூறப்படுதலினின்று, இவரும் பெரும் புலவராயிருந்தவரென்பது தெரியலாம். இவரது இயற்பெயர் 'ஓவாதகூத்தர்' என்று சாஸனங் குறிக்கின்றது. இராமநாதபுரம்ஜில்லா முதுகுளத்தூர்த் தாலுகா, திருமாலுகந்தான் கோட்டையிலுள்ள சிவாலயத்து அம்மன்சந்நிதித் திரும்தி

1. M.E.R. No. 136 of 1914.
2. Ibid. 1931-2, p. 68.

லில் வரையப்பட்ட சாஸனமொன்றில்,[1] திரிபுவனசக்கரவர்த்தி குலசேகரதேவன் என்ற பாண்டியனது ஆட்சிக்காலத்து, ஓவாதகூத்தன் என்பார் அறங்கள்சில புரிந்தனர் என்று கூறப்படுகின்றது. எழுத்தமைதியால் இதுவும் கூத்தனூர்ச்சாஸனமும் 13-ம் நூற்றாண்டுக்குரியன என்பர் சாஸனவறிஞர்.[2] இதனால், அவ்விரண்டிடங்களினும் கண்ட ஓவாதகூத்தர் ஒருவரோ என ஐயுறுதல் கூடியதேயாம். இனி, திருநெல்வேலி ஜில்லா கோயிற்பட்டித் தாலுகா, ஆதனூரில் உள்ள சிவாலயத்தே, "இனியன் கூத்தனான ஓவாதகூத்தன்"[3] என்பார், தம்பமொன்று உதவிய செய்தி பொறிக்கப்பட்டுள்ளமையும் இங்கு அறியத்தக்கது. "தில்லைச் சிற்றம்பலத்தே அந்தியும் பகலும்"[4] இடையீடின்றி நடனமாடுபவன் சிவபிரான் என்று கூறப்படுதலின், அப்பொருளில் ஓவாதகூத்தன் எனப்பட்ட சிவநாமம் மக்கட்கு வழங்கியதென்று கருத இடமுண்டு.

இனி, கூத்தரது பேரும்புகழும் அவர்க்கு அடுத்த பிற்காலத்தும் மக்களின் ஞாபகத்தைவிட்டு நீங்காதிருந்தன எனலாம். சோணாட்டுக் கொள்ளம்பூதூர்ச் சிவாலய சாஸனமொன்றில்[5]

"கூத்தன் சக்கரவர்த்திப் பெருமானான நடுவிருக்கை
சயிளைக்கும்"

என்னுந் தொடரால் இதனை அறிக. 'ஒட்டக்கூத்தன்' என்ற பெயருடன் பிற்காலத்தில் வேறுபுலவரொருவரும் இருந்தனர் என்று தமிழ்நாவலர்சரிதை கூறும் (233).

1. M. E. R. No. 49 of 1931-32.
2. Ibid. No. 109 of 1927-28.
3. I. M. P. Tn. No. 149.
4. தேவாரம், பக். 8, பாட் 3.
5. S. I. I. Vol. vi, p. 179A.

## 31 குன்றத்தூர்ச் சேக்கிழார் உத்தமசோழப் பல்லவரையர்.



திருத்தொண்டர்புராணம் என்ற சீரிய நூலைப் பாடியுதவிய புலவர்பெருமான்சேக்கிழாரின் அருமை பெருமைகளை அறியாதார் யாவர்? இப்பெரியார் அனபாயன் என்ற இரண்டாங் குலோத்துங்கசோழன் காலத்தவர் என்பது அவர்தம் வாக்கானே அறியப்பட்டது. இவ்வேந்தனிடம் அமைச்சர் தலைவராய், அவனால் உத்தமசோழப்பல்லவரையர் என்ற சிறப்புப் பெயர்பெற்றுச் சேக்கிழார் விளங்கியவர் என்பதும், அச்சோழன் விருப்பின்படி திருத்தொண்டர் புராணத்தை இவர் பாடிமுடித்துப் பின்பு தம் அமைச்சுத்தொழிலினின்றும் விலகிச் சிவதொண்டுபுரிந்து முனிவராய் வாழ்ந்தவர் என்பதும், இப்பெரியார் வகித்த அரசியற்பதவியை இவரினவல் பாலறுவாயர்க்குத் 'தொண்டைமான்' என்ற பட்டத்துடன் அச்சோழன் அளித்தனன் என்பதும் பிறவும் உமாபதிசிவாசாரியர் பாடிய சேக்கிழார்புராணத்தால் அறியப்படுகின்றன.[1] அவ் வனபாயனுக்குத் திருநீற்றுச்சோழன் என்ற வேறுபெயருண்டு என்றும் அவர் கூறுவர்.[2] இச்சோழன் தில்லையம்பலம் பொன்வேய்ந்தவன் என்பது பெரியபுராணத்தால்[3] அறியப்படும்.

இனி, திருத்தொண்டர்புராணம் பாடிய சேக்கிழாரை முதற்குலோத்துங்கன் காலத்தவர் என்று ஒருசாராரும், அவற்குமுற்பட்ட அரசன்காலத்தவர் என்று வேறு சிலரும்,

1. திருத்தொண்டர் புராணவரலாறு, 18,99,100.
2. கோயிற்புராணம், பாயிரம், 12.
3. பெரியபுராணம், பாயி. 8; கண்ணப். 8; புகழ்ச்சோ. 8.

இரண்டாங் குலோத்துங்கன் காலத்தவரென்று மற்றொருசாராரும் கருதுவர். மேலே சேக்கிழாரும் உமாபதி சிவாசாரியரும் கூறியபடி, அனபாயன்,[1] திருநீற்றுச்சோழன்,[2] தில்லையம்பலம் பொன்வேய்ந்தவன்[3] என வேறுபெயர்களாலும் வழங்கப்படும் சோழவேந்தன் இரண்டாங்குலோத்துங்கனே என்பது, சாஸனங்களால் தெளிய அறியப்படுகின்றது. அதனால், முன்னிரண்டு கொள்கைகளும் சிறிதும் பொருந்துவனவல்ல என்பது திண்ணம். ஆகவே, கி. பி. 1133—1146-வரை வாழ்ந்தவனும், விக்கிரமசோழன்மகனுமான சோழவரசன் காலத்தேதான் பெரியபுராணம் இயற்றப்பட்டதென்று கொள்ளற்பாலது. இம்முடிபினை, அடியில்வரும் அரிய சாஸனமொன்றும் வலியுறுத்துநிற்றலை இனிக் கூறுவேன்.

சோணாட்டுத் திருமழபாடி என்ற தலத்துள்ள சிவாலயத்தின் இரண்டாம் பிராகாரத் தெற்குத் திருமதிலில், திரிபுவனசக்கரவர்த்தி இராஜராஜதேவன் என்ற சோழனது 17-ம் ஆட்சியாண்டில் அமைந்த சாஸனத்தே—[4]

1. இரண்டாங் குலோத்துங்கனைக் கூத்தர்பாடிய உலாவில் அவனது அனபாயப்பெயர் மூன்றிடங்களிற் பயில்வன (159, 314-ம் கண்ணி; இறுதிவெண்பா).—ஏமப்பேரூர்ச்சிவாலய தர்மமாகவும்(M.E.R. 533 of 1921), திருவாரூர் அர்ச்சனாபோகமாகவும்(S.I.I. vii, 298) அனபாயநல்லூர் எனத் தன்மெய்க்கீர்த்தியுடன் தன் பெயரிட்டுதவிய இச்சோழன் சாஸனங்கள் வேறிடங்களினும் பலவாக உள்ளன. (M. E. R. 106 of 1901, Nos. 346, 359, 363 of 1911; 1912, p. 10; 271 of 1915).

2. M.E.R. 1912, p. 60; No. 106 of 1901; 363 of 1911.

3. S. I. I. Vol. vii, p. 503; M. E. R. Nos. 315, 349 of 1928-9.

4. M. E. R. No. 95 of 1920.

"ஜயங்கொண்ட சோழமண்டலத்து...குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனை உத்தம சோழப்பல்லவராயன்"

என்பார் மேற்குறித்த கோயிற்குத் திருநந்தாவிளக்கின் பொருட்டு 90-பேராடுகள் உதவியசெய்தி குறிக்கப்பட்டுள்ளது. சேக்கிழார் புராணத்தே (18) உமாபதிசிவாசாரியர்—

"அத்தகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கி
ழார்குடியில் வந்தருண் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந்
தலைமையளித் தவர்தமக்குத் தனதுபேரும் [1]
உத்தமசோ ழப்பல்ல வன்றன் என்னும்
உயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்சீர் நாட்டு
நித்தனுறை திருநாகேச் சுரத்தி லன்பு
நிறைதலினுன் மறவாத நிலைமை மிக்கார்"

என, இப்பெரியார் வரலாறு கூறுகின்றார். இராஜராஜன் காலத்தே 'குன்றத்தூர்ச் சேக்கிழான்...உத்தமசோழப்பல்லவராயன்' என்று தலைவரொருவரை இங்ஙனஞ் சாஸனங் கூறுமாயின், அவர், அச்சிறப்புப்பெயர்கொண்ட பெரியபுரா

1. 'தனது பேரும்' என்பதனால், உத்தமசோழன் என்பதும் அனபாயனது பெயர்களுள் ஒன்றாதல்வேண்டும்; ஆனால் அப்பெயர் அவற்குண்டு என்று தெரியவில்லை. 'பேரும்' என்ற உம்மை பின்னரும்வந்து எண்ணப்பட்டிலாமையால், 'தனது பேரு' என்றிருந்த பழம்பாடமே பிறழ்ந்ததுபோலும். இதுபாடமாயின், அரசன்கொடுத்த பட்டம் அவன்பேரேயன்றிச் சேக்கிழார்பேறு அன்று என்பது கருத்தாய் நயமுறுதல் காண்க. இனி, 'உத்தமசோழப் பல்லவன்றன்' என்புழி, 'தான்' என்ற அசை இயைபிலிடத்துள்ளதனால், 'பல்லவரையன்' என்றிருந்த பாடமே எழுத்துச்சாயையால் மாறியதாதல் வேண்டும்.

ணவாசிரியர் என்றே கொள்ளத் தடையென்னை? அரசர்கள் தங்கீழுள்ள தலைவர்க்குப்பட்டப்பெயர் சூட்டுதல் பண்டைமரபாம். உத்தமசோழன், தன்கீழ் அதிகாரியான பழுவூர்நக்கன் என்பாற்கு விக்கிரமசோழமாராயன் என்றும், முதல்இராஜராஜன், ராஜராஜப்பல்லவரையன் என்பாற்கு மும்முடிசோழப் பெருந்தரம் என்றும் இவ்வாறே பட்டமுதவிச் சிறப்பித்திருத்தல் காண்க.[1]

இனி, உத்தமசோழப் பல்லவராயரான சேக்கிழாரை 'மாதேவடிகள்' என்று சாஸனம் விசேடிக்கின்றது. இது—

"குன்றைமுனி சேக்கிழார்" (84)

"அண்டவாண ரடியார்கள் தம்முடன்
அருந்தவந்தனி லிருந்த்வர் (100)

எனச் சேக்கிழார்புராணங் கூறியவாறு, அப்பெரியாரது சிவனடிமைத் திறத்துக்கேற்ற சிறப்புப்பெயராகும். மாதேவடிகள் - மாதேவர்க்கு ஏகாந்தரான பெரியார். இப்பெயர், சிவதொண்டிற் சிறந்து விளங்கியவரும் கண்டராதித்தர் மனைவியுமான செம்பியன்மாதேவியார்க்கும் முன்னோர் வழங்கியதென்பது முன்பே கூறப்பட்டது.[2] இதனையடுத்து, 'ராமதேவன்' என்று சேக்கிழாரைச் சாஸனங் குறித்தலினின்று, அஃது இவரதியற்பெயர் என்பது தெரியலாம். நரசிங்க முனையரையர், புருடோத்தமநம்பி, அச்சுதகளப்பாளர் முதலிய திருமால்பெயர்களைப் பிற்காலத்தவர்போலவே முன்னோரான சிவனடியார்களுந் தம் இயற்பெயர்களாகக் கொண்டிருத்தலின் சேக்கிழார்க்குவழங்கிய இந்நாமமும் அத்தகைய தொன்றென்றே கொள்ளற்பாலது.

1. M. E. R. 1928 - 9, p. 75.

2. இந்நூலிற் கண்டராதித்தர் என்ற தலைப்பின்கீழ்க் காண்க (பக். 37).

"பெருமணலூர் மந்திரி இராமனான பல்லவராஜன்"

(S. I. I. iv, 107)

"ஆதித்ததேவன் சீராமதேவன் வல்லவரையர்"

(M. E. R. 252 of 1922)

"அம்பலத்தாடுவான் சீராமதேவனான காலிங்கராயன்"

(Ibid. 245 of 1929-30)

"மூவேயதரையன் குலமாணிக்கன் இராமதேவன்"

(I. M. P. S.A. 896)

என்றிவ்வாறே, சோழவதிகாரிகள்பலர் இராமப்பெயர் பெற்றிருத்தலும் காணலாம். "மாதேவடிகள் ராமதேவன்" என இப்பெரியார் விசேடிக்கப்பட்டிருப்பது, அங்ஙனம் திருமால் பெயர்பெறினும் சிவனடியாரேயாவர் என்பது குறிக்கும். அருண்மொழித்தேவர் என்றும் இவர் சிறப்புப்பெயர்பெற்றிருந்தவராக உமாபதி சிவாசாரியர் கூறுவர். இது, சேக்கிழாரது தெய்வவாக்குப்பற்றி வழங்கியதாகும் என்று அறிஞர் சிலர் கருதினர். அருண்மொழித்தேவர் என்பது சேக்கிழார்க்கு இயற்பெயரென்று அச்சிவாசாரியர் யாண்டுங் குறித்திலாமையால் இக்கருத்துப் பொருந்துவதாகும். மூவர் திருப்பதிகங்களும் பெற்றதும், சுந்தரமூர்த்திகட்குச் சிறப்பாக அருள்புரிந்ததுமான தலமாதலின், திருமழபாடி சேக்கிழாரால் குறிக்கொண்டு அறஞ்செய்தற்குரிய தலமாயிற்றென்க.

இனி, இச்சாஸனகாலத்தரசன் திரிபுவனசக்கரவர்த்தி இராஜராஜதேவன் என்ற சோழன் என்பது அக்கல்லெழுத்தால் அறியப்பட்டது. இப்பெயர், மேற்கூறிய அனபாய குலோத்துங்கன் மகனுக்கும், மூன்றாங் குலோத்துங்கன் மகனுக்கும் வழங்கியதாம். அவருள் முற்கூறியவனும் கி. பி. 1146-ல் பட்டம்பெற்றவனுமான இரண்டாமிராஜராஜனே பெரியபுராணம் பாடுவித்த சோழன்மகனாதலின், அப்புராண

வாசிரியரும் தலைப்பிற்குறித்த சாஸனத்துக்கு உரியவரு மான சேக்கிழார், அவ்விராஜராஜன் பட்டம்பெற்றதற்குப் பதினேழாண்டின்—அஃதாவது கி. பி. 1163-க்கு—பின்ன ரும் வாழ்ந்திருந்தவர்[1] என்பது பெறப்படுகின்றது. இவற் றால், பெரியபுராணவாசிரியரான சேக்கிழார்காலமுதலியன தெளியப்படும்.

இனி, கோயம்புத்தூர்ஜில்லா தர்மவரந்தாலுகா, முத் தூர்ச் சிவாலயத்தே, முதற்குலோத்துங்கன் முன்னோனை வீரராஜேந்திரசோழனது 4-ம்வருஷ சாஸனத்தில், உத் தமசோழப்பல்லவராயன் என்பார்மைந்தர் திருநந்தாவிளக்கு அமைத்த செய்தி கூறப்படுவதென்றும், அவ்வறஞ்செய்தார் தந்தையே பெரியபுராண வாசிரியர் என்றும் சிலர் கருதி எழுதலாயினர்.[2] இவை சிறிதும் பொருந்துவனவல்ல. சாஸ னங்கூறும் வீரராஜேந்திரதேவன் என்பான் கி. பி. 1207-52 வரை ஆண்ட கொங்குச் சேரவேந்தனுவன்.[3] தன் முன் னோன் குலோத்துங்கசோழதேவனென்பான் (கி. பி. 1149-1163) தன் பெயரால் அமைத்த கோயிற்கு இவன் அறம் புரிந்துள்ள செய்தி அம்முத்தூர்ச் சாஸனங்களால் அறியப் படுகின்றது.[4] ஆகவே, பிற்காலத்துக் கொங்கரசனை இவ்வீர ராஜேந்திரன், சோழசக்கரவர்த்தியான முதற்குலோத்துங்க னின் முன்னோன் அல்லன் என்றறிக. அன்றியும், உத்தம

1. இரண்டாம் இராஜராஜன் ஆட்சியில், அவனது 18-ஆம் ஆண்டு முதலிய சாஸனங்களும்உள்ளன (I.M.P. Tp. No. 285).

2. செந்தமிழ், தொகுதி. 11, பக். 273, 386.

3. இவன் சேரர்மரபினனே என்பதும், தலைமைவேந்தரான சோழர்பெயர்களையே இவன்மரபினர் தரித்துவந்தவரென்பதும் அறி யத்தக்கன—('சேரர்வஞ்சியும் சிலாசாஸனவழக்கும்' என்ற என்கட் டுரைகாண்க (University Journal, Research Institute. Vol. I).

4. I. M. P. Cm. Nos. 124, 250.

சோழப் பல்லவரையர் என்ற்பெயர்வழக்குச் சோழர்காலத்து வேறு சிலர்க்கும் வழங்கியதேயாம்.[1] அதனால், குன்றத்தூர்ச் சேக்கிழார் என்றேனும், அவர் சிவனடியார் என்றேனும் சாஸனங் குறிப்பிடாதநிலையில், பெயரின் ஏகதேச வொற்றுமை கொண்டு ஒருதலைதுணிதலும் பொருந்தாதென்க. இதுநிற்க.

மூன்றாங் குலோத்துங்க சோழனது (பட்டம். கி. பி. 1178) 2-ம் ஆட்சியாண்டில் அமைந்த கோட்டூர்ச் சாஸனமொன்றில், ஷை கோயிலில் திருநந்தாவிளக்கொன்றற்காகச் செயங்கொண்ட சோழமண்டலத்துக் "குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயர்" சில பொற்காசுகள் அளித்தனர் என்றும்,[2] அவற்குமுன்னுண்ட இரண்டாம் இராஜராஜசோழனது 19-ம் ஆண்டில் அமைந்த திருவரத்துறைச் சாஸனமொன்றில் அவ்வாலயத்துக்கும் அவர் நிலம் உதவினர் என்றும்[3] கூறப்பட்டுள்ளன. பெரியபுராண வாசிரியரான சேக்கிழார்க்குப் பாலறாவாயர்[4] என்ற இளவலொருவர் இருந்தமையும், தம் தமையன் நிர்வகித்த அமைச்சுத் தலைமையை அவர்க்குப்பின இவர் ஏற்று வகித்தமையும் உமாபதிசிவாசாரியர் வாக்கால் அறியப்பட்டவை. சாஸனப்

---

1. திருப்புறம்பயச் சாஸனத்தில், 'ஆலூர் உத்தமசோழத் தமிழப்பல்லவரையர்' என்பவர் முதலிராசேந்திரன் காலத்து வாழ்ந்தமை காண்க (M.E.R. No 150 of 1931-2). ஆலூர் என வேறூர் குறிப்பிடப்பட்டும், சேக்கிழார்குடி குறிக்கப்படாமலும் உள்ளமையால், இவரும் பெரியபுராணவாசிரியர் ஆகாரென்க.

2. M. E. R. No. 446 of 1912.

3. Ibid. No. 211 of 1928-9.

4. பாலறாவாயர் என்பது சம்பந்தமூர்த்திகள் திருநாமம். இப்பெயர் அக்காலத்து மக்கட்கு வழங்கியமை, கொற்ற மங்கலத்துப் பாலறாவாயர் (Ibid. 95 of 1911), திருத்துறைப்பூண்டிப் பாலறாவாயர் (477 of 1912) முதலிய சாஸனவழக்கால் உணர்க.

பாலறுவாயரே அச்சிவாசாரியராற் கூறப்பட்டவராகக்கொள் ளற்குப் பெரிதும் பொருத்தமுண்டு. ஊர்குடி யியற்பெயர் களும் காலமும் சேக்கிழார்புராண வரலாற்றுக்கியைய அமைதல் கண்டுகொள்க. 'களப்பாளராயர்' என்பது அரச னளித்த பட்டப்பெயராகக் கருதற்குரியதாம். ஆகவே, இரண்டாங் குலோத்துங்கனை அனபாயனது (கி. பி. 1133-1146) இடைக்காலந்தொடங்கி, மூன்றாங் குலோத்துங்கனது ஆட்சித் தொடக்கம்வரை 35, 40-வருஷங்கள் வாழ்ந்தவர் இப் பாலறுவாயர் என்பது நன்குபெறப்படும். இவர்க்கு இர ண்டாங் குலோத்துங்கன் 'தொண்டைமான்' என்ற பட்டம் அளித்து, இவரைத் தன் அமைச்சராகக் கொண்டனன் என்று சேக்கிழார்புராணம் (99) கூறுகின்றது. இதற்கே ற்ப, அச்சோழனது 12-ம் ஆட்சியாண்டில் அமைந்த சாஸன மொன்றால், அச்சோழன் தன்னமைச்சனை தொண்டைமா னுக்குச் சில கட்டளைகள் நிறைவேற்றுதற்கு ஆணையிட்ட செய்தி தெரிகின்றது. [1] இத்தொண்டைமான், சேக்கிழாரின் இளவல் பாலறுவாயரே போலும்.

இனி, அவ்விரண்டாங் குலோத்துங்கனது 4-ம் ஆட்சி யாண்டில் திருக்கடவூர்ச் சாஸனத்தே, [2]

"குன்றத்தூர்ச் சேக்கிழான் அம்மையப்பன் பராந்தகனை கரி காலசோழப் பல்லவரையன்"

என்பாரும், திருப்பாசூர்ச் சாஸனத்தே இரண்டாம் இராஜ ராஜனது 11-ம் ஆட்சியாண்டான சகஹு 1078-ல், [3]

---

1. தொண்டைநாட்டுக் களத்தூர்ச் சாஸனம் (M. E. R. No. 346 of 1911)
2. M. E. R. 39 of 1906
3. Ibid. No. 136 of 1929 - 30.

"குன்றத்தூர்ச் சேக்கிழான் அரையன் ஆட்கொண்டதேவனான முனையதரையன்"

என்பாரும் சிவாலயங்கட்கு அறங்கள்சில புரிந்தசெய்திகள் கூறப்பட்டுள்ளன. இவற்றால், பெரியபுராண வாசிரியரான சேக்கிழாரது வாழ்நாளில், அவர்குடியினர்பலர் சோழராஜாங் கத்திற் பிரபலம்பெற்றிருந்தமை தெரியலாம்.

"குன்றைவளநாட்டு...குன்றத்தூரில் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே" *

என்று உமாபதிசிவாசாரியர் கூறிய செய்தியினுண்மையை மேற்கூறிய சாஸனங்கள் தெளிவாக்குதல் காண்க. இவற்றால், சாஸனவழியாற், புலவர்பெருமான் சேக்கிழார் உத்தம சோழப் பல்லவரையர் வரலாறுகள் விளங்கக்கூடியன.

## 32 ஞானமிர்தாசாரியர்.



ஞானமிருதம் என்பது, பதிபசுபாச வியல்புகளையும் பிற சமயவுண்மைகளையும்பற்றித் தமிழில் இயற்றப்பட்ட ஒரு சைவசாத்திரமாகும். இதனை இயற்றியவர், வாகீசமுனிவர் என்பார். இந்நூலால் இம்முனிவர் சைவசாஸ்திரங்கள்வல்ல ஆசிரியர் என்பதுமட்டுமன்றி, இதன் உயரிய செய்யுணடையினின்று செந்தமிழ்வல்ல பெரும்புலவர் இவர் என்பதும் விளங்குவதாகும். இவரது ஆசிரியர், கோடலம்பாகை அருண்மொழித்தேவர் என்ற பரமானந்தமுனிவர் என்பது, இவரது பாயிரத்தான் அறியப்படுகின்றது. இத்தகைய ஞானமிருதாசிரியரைப்பற்றி, மேற்கூறியவையன்றி வேறு வரலாறுகள் நூல்வழியால் தெரிய இடமில்லையேனும், சாஸனங்களால் இவரைக்குறித்துச் சில அறியக்கூடியவா யுள்ளன.

4. சேக்கிழார் புராணம், 11.

திருநெல்வேலி ஜில்லா, திருவாலீசுவரம் என்ற ஊரி லுள்ள சிவாலயத் திருமதில்களில், ஜடாவர்மன் திரிபுவனசக் கரவர்த்தி வீரபாண்டியதேவனது 3-ம் ஆட்சியாண்டில் அமைந்த சாஸனங்கள் வரையப்பட்டுள்ளன. அவை யொன்றனுள்ளே—

"அச்சிவாலயத்தே, திருஞானம்[1] விண்ணப்பஞ்செய்வ தற்குச் சிவப்பிராமணர் எண்மர், கோளகிமடத்து ஞானாமிர் தாசார்ய ஸந்தானத்தைச் சார்ந்த புகலிப்பெருமாள் என்பா ருடன் உடன்படிக்கையின்மேல் நிலம்பெற்றனர்" (M.E.R. 359 of 1916) என்றும், மற்றொன்றில்—

"கோளகிமடத்து ஞானாமிர்தாசார்ய ஸந்தானத்தவரான அகோரதேவர்க்கு நந்தவனத் திருப்பணி நடத்திவருதற் காகச் சிவப்பிராமணர்கள் நிலம் உதவினர்"(Ibid. 361 of 1917) என்றும் கூறப்பட்டுள்ளன. இச்சாஸனங்கள் பிறந்தகாலம் கி. பி. 1254 - ஆகும். இவற்றால், 13 - ம் நூற்றாண்டுக்கு முன்பு வாழ்ந்தவர் ஞானாமிர்தாசாரியர் என்பதும், அவரைத் தலைவராகக்கொண்ட சைவாசாரியபரம்பரையொன்று தென் னாட்டும் பிரபலமாயிருந்ததென்பதும் தெளிவாகின்றன.

இத்தகைய சந்தானாசாரியத் தலைவர், ஞானாமிர்தம் என்ற நூலை இயற்றிப் பிரசித்தி அடைந்திருந்தமைபற்றியே ஞானாமிர்தாசாரியர் என வழங்கப்பட்டார் என்பது எளிதின் விளங்கும். ஞானாமிர்தம் என்ற நூல் வடமொழியில் உண்டு என்று இதுவரை அறியப்பட்டிலது. அதனால், மேற்குறித்த தமிழ் ஞானாமிருதமே இச் சாஸனங்கள் குறிப்பதுபோலும்

1. திருஞானம் என்பது, வேறுசாஸனங்களினும் பயில்வதாம் (463 fo 1929-30.) இது, தேவாரத்தையோ, அதுபோன்ற பெரி யார்வாக்கையோ குறிப்பதுபோலும் (Ibid. p. 77).

என்று கருத இடந்தருகின்றது. இவ்வாறாயின், இதனை இயற்றிய வாகீசமுனிவர் 13 - ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவராதல் வேண்டும்.

இனி, 12 - ம் நூற்றாண்டின் பிற்பகுதியில், திருவொற்றியூர்ச் சிவாலயத்து வரையப்பட்ட சாஸனமொன்று, திரிபுவன சக்கரவர்த்தி இராஜாதிராஜதேவனது (கி. பி. 1172 - 86) 9 - ம் ஆட்சி வருஷத்து அமைந்துளது. அதனில், அச்சோழன் திருவொற்றியூர்ப் படம்பக்கநாயக தேவரது (சிவபிரானது) பங்குனியுத்தரத் திருநாட்கு வந்திருந்தனன் என்றும், அக்காலத்து அவ்வொற்றியூர் மடாதிபதியான சதுராननபண்டிதரும்,[1] 'சோம சித்தாந்தம் வக்காணிக்கும்' வாகீசபண்டிதரும் பிற கோயிலதிகாரிகளும் ஆங்கு அரசனுடனிருந்து ஆளுடையநம்பிபுராணங் கேட்டனர் என்றும் கூறுவதாம்[2]. இங்ஙனம் கேட்டவர்களுள் வாகீசபண்டிதர் என்பாரைத் தனியே குறிப்பிட்டுச் சமயபோதகர் என்று சாஸனங் கூறுதலின், அவர், அரசனாலும் பிற அறிஞர்களாலும் பெரிதும் மதித்துக் கௌரவிக்கப் பெற்றவர் என்பது பெறப்படுகின்றது. இவரும் பிறரும் அரசனுடனிருந்து கேட்ட ஆளுடையநம்பி புராணம், சேக்கிழாரது பெரியபுராணப் பகுதி போலும். தமிழ் ஞானாமிருதநூல் செய்த வாகீசமுனிவரே அப்புராணங்கேட்ட வாகீசபண்டிதர் என்பதற்குச் சாஸனக்குறிப்பில்லையேனும், முற்குறித்தபடி, சமயசாஸ்

---

1. இச் சதுராननபண்டிதர்மடத்திற் பணிபுரிந்துவந்தவளே, கம்பராற் காதலிக்கப்பட்டவளாகக் கூறப்படும் திருவொற்றியூர்வல்லி என்ற கணிகை என்பது "தடக்கையான் சதுரானன பண்டிதன், மடத்து ளாளென் மனத்துறை வல்லியே" என்ற கம்பரது பாடற் பகுதியால் அறியப்படும் (தமிழ்நா. சரிதை. 8).

2. I. M. P. Cg. 976.

திரம் வல்லாராகவும் 13 - ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவ ராகவும் தெரிதலால், அவ்விருவரும் ஒருவர்போலும் என்று கருத இடமுண்மை காண்க. இஃது எங்ஙனமாயினும், ஞானமிர்தாசாரிய ஸந்தானத்துக்குத் தலைவர் தமிழ்ஞானமிருத ஆசிரியராகக் கொள்வது பொருந்துவதெனலாம். தமிழ் ஞானமிருதம், சிவஞானமுனிவர் முதலியோரால் 'திராவிடமாபாடிய' த்தில் கௌரவித்து மேற்கோள் காட்டப்பட்ட சமயசாஸ்திரங்களுள் ஒன்று என்பதும் அறியத்தக்கது.

---

## 33 மூன்றுங் குலோத்துங்கசோழனும் தமிழ்ப்புலவர்களும்.



மூன்றுங் குலோத்துங்கனை, அவன்முன்னோர் பலரினும் சிறப்பாகத் தமிழ்வளர்ச்சி புரிந்தவனென்றே சொல்லலாம். இரண்டாம் இராஜராஜசோழன் (கி. பி. 1146—1170) சந்ததியின்றியே காலஞ்சென்றமையால் அவனது தலைமைமந்திரியாய் அரசியலை நிர்வகித்துவந்த காரிகைக் குளத்தூர் கிழான் பெருமானம்பிப்பல்லவராயன் [1] என்பாரால், சோழர் குலத் தோன்றலொருவன் இராஜாதிராஜன் எனப் பட்டஞ் சூட்டப்பெற்றான் என்பது பல்லவராயன்பேட்டைச் சாஸனத்தால் அறியப்படுகின்றது.[2] இங்ஙனம் பட்டம்பெற்றவன், மேலேகுறித்த ஞானமிர்தாசாரியர் காலத்துச் சோழனே யாவன். அவனாட்சிக்குப்பின் அவன்தம்பியாய்ச் சோழ சிங்காதனம் ஏறியவன் இக் குலோத்துங்கன். இவனது ஆட்சி, அறிவுதிருவாற்றல்களுடன் 38 - ஆண்டுகள் (கி. பி.

1. தக்கயாகப்பரணியுரையுட் கூறப்பட்ட "நம்பிப்பிள்ளை" என்பார் இவ்வமைச்சரேயாவர் (தாழி. 236; பக். 301)

2. M.E.R. No. 433 of 1924.

1178—1216) வரை நிலவியது. இவனுக்கு வீரராசேந்திரன், திரிபுவனவீரன் என்ற மறுபெயர்களும் உண்டு. 'குமார குலோத்துங்கன்' என்றும் இவனை முன்னோர் வழங்கினர் என்பது, இவ்வேந்தனது 9-ம் ஆட்சியாண்டில் அமைந்த திருமயானச்சாஸனத்தாலும்,[1] மூன்றும் இராஜராஜனது 2-ம் ஆண்டில் அமைந்த திருவீழிமிழலைச் சாஸனங்களாலும்[2] அறியப்படுகின்றது. "குமாரமகீதரன்" என்று சங்கரசோழனுலாவிற் கூறப்படுமவனும் இவனே. குலோத்துங்கன் கோவை என்ற நூல் இவன்மேற் பாடப்பட்டதாம்.[3] அந்நூலின் ஆசிரியர், வீரம் நியாயம் தியாக முதலியவற்றாற் சிறந்தவன் என்று இக்குமாரகுலோத்துங்கனைப் புகழ்வதோடு, தானே தமிழ்ப்புலமை வாய்ந்தவன் என்றும், பெரும்புலவர்களாற் பாடல்பெற்ற புகழுடையானென்றும், புலவர்களின் அருமை பெருமைகளை அளந்தறிய வல்லவனென்றும் கூறுகின்றார்.

"தாயுந் தமரு மெனத்தமிழ் தாங்கியத் தண்டமிழை
ஆயுங் கமகன்" (94)
"தமிழ்வாணர் தெய்வக்கவியாபரணன்" (224)
"வியன் பாவனைத்துங் கோதே பிரித்தெறி கோமான்" (75)
"உரைவாணர்தங்க ணவைகாணின் மாற்றுங்குலோத்துங்கன்"
(65)

என்பன முதலியன காண்க. கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர் விளங்கியதும் இவனாட்சிக் காலமேயாகும். இப்புலவர் 12-ம் நூற்றாண்டிறுதியில் தம் காப்பியத்தை இயற்றிமுடிக்

1. M. E. R. 259 of 1925.
2. Ibid. Nos. 419-20 of 1908.
3 இச்சோழனது மெய்க்கீர்த்திக்கேற்ப இக்கோவைநூல் கூறுதலை, 'சேரர்வஞ்சியும் சிலாசாஸனவழக்கும்' என்ற கட்டுரையுள் விளக்கியுளேன் (University Journal, Research Institute, Vol. i)

தவர் என்பது முன்னரே ஆராய்ந்து நிறுவப்பட்டது.[1] இம் மகாகவி தம் இராமாயணத்தே—

"சென்னிநாட் டெரியல் வீரன் தியாகவி நோதன்[2]
தெய்வப் பொன்னிநாட்டு" (யுத். மருத்துமலை. 58)
"புவிபுகழ் சென்னி போரமலன் தோள்புகழ்
கவிகட மனையன கனக ராசியும்" (கிட்கிந். பிலநீங். 35)

என்று தங்காலத்துச் சோழனைச் சிறப்பிப்பர். இவ்வேந்தன் மூன்றாங் குலோத்துங்கன் என்றே தெரிகின்றான். திரிபுவன வீரன், வீரராஜேந்திரன் என்பன இவன் தரித்த நாமங்களாத லின் வீரன் போரமலன் என்றும், இவை இவன்முன்னோர் சிலர்க்குமுரியவாய்ப் பொதுவாதலின், இவனுக்கே அமைந்த சிறப்புப்பெயரால் 'தியாகவிநோதன்' என்றும் குறிப்பிடலா யினர் கம்பநாடர் என்க. வீரத்தொடு தியாகத்தாலும் சிறந் தவனாதலின் "வீரக்கொடியொடு தியாகக் கொடியெடுத்து" என்று இவனது மெய்க்கீர்த்தியும் இவனைப்புகழும்.[3] தியாக விநோதன் என்ற சிறப்புப்பெயர் இவனுக்கு வழங்கியதென் பது, இவன்காலத்து அதிகாரிகளும் நன்மக்களும் ஊர்களும் அப்பெயரைத் தம் கௌரவநாமமாகத் தரித்திருத்தலி னின்று தெளியலாம்.

"தியாகவிநோதன்" (M. E. R. No. 260 of 1920 c)
"தியாகவிநோதன் மூவேந்தவேளான்" (28 of 1927 c)

---

1. மகாவித்வான். ஸ்ரீ: ரா. இராகவையங்கார் அவர்கள் 'கம்பர் காலம்' என்ற தலைப்பின்கீழ்ப் பல்லாண்டுகட்குமுன் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரை காண்க (செந்தமிழ் - 2-ந் தொகுதி).

2. 'தியாகமா விநோதன்' என்றும் பாடம்.

3. தியாகக்கொடியும், தியாகவிநோதன் என்ற திருநாமமும் (S.I.I. V. 175) சோழர் வழிபடுகடவுளான திருவாரூர் ஸ்ரீதியாக ராஜர்க்கு உரியன. அவற்றையே தன்கொடியும் நாமமுமாக இச் சோழன் கொண்டவன் என்றுஞ் சொல்லலாம்.

"தியாகவிநோத பட்டன்" (169 of 1927)
"தியாகவிநோத நல்லூர்" (S. I. I. Viii, p. 254)
"தியாகவிநோதனூற்றூர்" (290 of 1927)

எனக் காண்க. தியாகசமுத்திரம், தியாகாபரணன் என இக் குலோத்துங்கன்முன்னோர் பெயர் பெற்றிருத்தலும் ஒப்பிடத்தகும். இவற்றால், கம்பர் புகழ்ந்த வீரன் தியாகவிநோதன் என்பான், திரிபுவனவீரதேவனான குலோத்துங்கன் என்றே கொள்ளத்தகும். தெய்வக்கவியாகிய அப்புலவரால் இங்ஙனம் சிறப்பிக்கப்பட்டமைபற்றிப் போலும் "தமிழ்வாணர் தெய்வக்கவியாபரணன்" என்று, குலோத்துங்கன் கோவையும் இவனைப் புகழ்வதாயிற் றென்க.

இவ்வாறு, பெரும்புலவர்களின் புகழ்ச்சிக்குரியனாய் விளங்கிய இத் திரிபுவனவீரன்காலத்தே தான், நேமிநாதம் வச்சணந்திமாலை என்ற இலக்கண நூல்கள் இயற்றிய குணவீர பண்டிதரும் விளங்கினர். பிற்கூறிய நூல் இத் திரிபுவன தேவன்போவையில் அரங்கேற்றப்பட்டது என்பது, அந்நூற் பாயிரவுரையால் விளக்கமாம். 'உரைவாணர் தங்கள் நவை காணின்' மாற்றவல்லான் என்று கோவையாசிரியர் இவ்வேந்தனைக் கூறுதலும் நோக்கத்தக்கது. "பேராசிரியர் நேமிநாதர் பட்டோலை பிடித்தெழுதக்" கூத்தர்பாடியது என்று, தமிழ் நாவலர்சரிதையிற் பாடலொன்று காணப்படுகின்றது.[1] இந் நேமிநாதரான பேராசிரியர், நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதரோ என்ற சங்கையுமுண்டு. இவரளவோ: 'பல்கலைக் குரிசில் பவணந்தி யென்னும் புலவர்பெருமான்' வாழ்ந்ததும் இக்குலோத்துங்கன் ஆட்சிக்காலத்தேதான். இது பின்னர் விளக்கப்படும்.[2] இவ்வாறு கம்பர், குணவீரபண்டிதர், பவ

1. "செங்கான் மடவன்னம்" என்ற பாட்டாம். (129)
2. '37 பவணந்திமுனிவர்காலம்' என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

ணந்தி, குலோத்துங்கன்கோவையாசிரியர் முதலியோர் விளங்கிய இச்சோழனது ஆட்சிக்காலத்தை, வேறு பெரும்புலவர் சிலரும் அலங்கரித்தவர்கள் என்பது சாஸனவழியால் அறியக்கிடக்கின்றது. அவரைப்பற்றித் தெரியவருவனவற்றை இனி முறையே கூறுவேன்.

---

## 34 மூங்கிற்குடி - திருவரங்கத்தமுதனார்.



விசிஷ்டாத்துவைத மதஸ்தாபகரும், ஸ்ரீபாஷ்யகாரர் எனப் பிரசித்திபெற்றவருமான இராமாநுஜமுனிவரர்மேல், இராமாநுஜநூற்றந்தாதி என்ற அரிய பிரபந்தத்தைப் பாடியவர், திருவரங்கத்தமுதனார் என்ற பெரியாராவர். இவர், அம்முனிவரரின் பிரதமசிஷ்யரான கூரத்தாழ்வான் திருவடிகளை ஆசிரயித்தவர். இவர் அருளிய அந்தாதி, நாலாயிர திவ்யப்பிரபந்தத்துட் சேர்க்கப்பெற்றும், 'பிரபந்ந காயத்திரி' என்று கொண்டாடப்பட்டும் ஸ்ரீவைஷ்ணவர்களால் நித்தமும் ஓதப்படுவதொன்றும். இத்தகையார் வரலாறு சாஸனவழியானும் சிறிது தெரியவருதல் அறியத்தக்கது.

நடுநாட்டுத் திருக்கோவலூரில்உள்ள திருமால்கோயிலின் வடக்குத் திருமதில்சுவரிற் கண்ட சாஸனமொன்று [1]—

"இராஜராஜசேதியராயர் என்பார் ஆணைப்படி வன்னியமலையமான் என்ற அதிகாரி, திருக்கோவலூர் மகாசபையாரிடமிருந்து சில நிலங்களை விலைக்குப்பெற்று, பெற்றவற்றைப் பெரியகோயில் (ஸ்ரீரங்கம்) 'கடக்கத்துக்கண்டன்' திருநந்தவன கைங்கரியத்தை நடத்திவருவதற்காக மூங்கிற்குடித் திருவரங்கத்தமுதனார் என்பார்க்கு உதவினர்"

---

1. M. E. R. No. 365 of 1921.

என்று கூறுகின்றது. இச்சாஸனம், மூன்றாங் குலோத்துங்கனது ஆட்சியில்(கி. பி. 1178—1216) 3-ம் ஆண்டிலே (1181-ல்) அமைந்ததாகும். இதனிற்கூறப்படும் திருவரங்கத்தமுதனார் ஸ்ரீரங்கநகரினர் என்பது, பெரியகோயில் நந்தவன கைங்கரியத்துக்காக இவர் நிலம்பெற்றிருத்தலால் தெரியலாம். இராமாநுஜமுனிவர்மேல் நூற்றந்தாதிபாடிய அமுதனார் இவரேயாயின், அம்முனிவர் திருநாடலங்கரித்து 43-வருஷங்கட்குப்பின்பும் இவர் நிலவுலகில் வாழ்ந்திருந்தவர் என்பது பெறப்படும். அம்முனிவர் கி. பி. 1137-ல் பரமபதித்தவர் என்பது பிரசித்தம்[1]. திருவரங்கத்தமுதனார் அரங்கமாநகர்த் தானத்தாருள் தலைமைபூண்டு, 'பெரியகோயில் நம்பி' என்று அழைக்கப்பட்டவர் என்பதும், இராமாநுஜர்க்குப்பின் அவர்ஸ்தானத்தை வகித்துப் பிரபலராய்விளங்கிய ஸ்ரீபராசரபட்டர் காலத்தும் வாழ்ந்திருந்தவர் என்பதும் குருபரம்பரைகளால் அறியப்பட்டவை. ஆண்டில் இளையராயிருந்த இவர் தம்நூலை இராமாநுஜமுனிவரது வயோதிகநிலையிற்பாடி அரங்கேற்றியவர் என்று கொள்ளுமிடத்து, சாஸன அமுதனாரும் நூற்றந்தாதியமுதனாரும் ஒருவரே என்றுகொள்ளத் தடையில்லை. "மூங்கிற்குடி"[2] என்று குடிப்பெயரைச் சாஸனங் கூறுமாறே, 'மூங்கிற்குடி யமுதன்' என்று இவர் தனியன் மொழிதலுங் காண்க. "ஸ்ரீரங்காமிர்தகவி" "கவிவரர்" என்று வடமொழியாளரும்[3] இப்பெரியாரைப் புகழ்வர். இவற்றால், ஸ்ரீபாஷ்யகாரரின் அந்திமதசைக்கும், இத்திருக்

1. "தர்மோநஷ்ட:" என வழங்கும் கடபயாதி கணனத்தொடரால், சகாப்தம் - 1059 இவர் பரமபதமடைந்த காலமாதல் காண்க.

2. இக்குடியின் பழைமை முதலியவற்றை 'ஆழ்வார்கள் காலநிலை' யுள், 49-ம் பக்கத்துக் கீழ்க்குறிப்பால் அறிக.

3. ஸ்ரீராமாநுஜார்ய திவ்யசரிதை, பக். 117.

கோவலூர்ச் சாஸனம் பிறந்த காலத்துக்கும் அதிககாலம் இன்றி அரைநூற்றாண்டுக்கும் குறைந்தே இடையீடிருத்தலால், சாஸனப்பெரியார் இராமாநுஜநூற்றந்தாதி பாடியவரே என்றும், 80, 85 ஆண்டுகட்குமேல் இவர் நிலவுலகில் வாழ்ந்திருந்தவரென்றும் கொள்ளப் பெரிதும் பொருத்தமுண்டெனக. இச்சாஸனப்போக்கினின்று, திருக்கோவலூரினும் அமுதனார்க்கு நிலமுதலிய உரிமைகள் இருந்தனஎன்பதும், இவர்க்குப் பெரியகோயிற் கைங்கரியத்துக்காக நிலம் உதவிய சேதியராயன், திருமால்பத்திமையும் அவ்வமுதனாது திருவடிசம்பந்தமும் உடைய மலையமான் என்பதும் பெறப்படுவன.

"பொற்புடைய மலையரையன் [1] பணிய நின்ற
பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே"
(திருநெடுந்தாண். 7)

என்று திருமங்கைமன்னன் அருளியவாறு, மலையமான்கள் திருமாலடிமைத் திறத்தைப் பழைமையாகவே படைத்திருந்தவர்கள் என்பது அறியத்தக்கது.

## 35 வீராந்தப் பல்லவரையர்.



மேற்கூறிய குலோத்துங்கசோழனது 23-ம் ஆட்சியாண்டில், சோணாட்டுத் திருக்கடவூர்ச்சிவாலயத்து வரையப்பட்ட சாஸனமொன்றில், அவ்வாலயத்தே நடத்தற்குரிய 'நட்டுவநிலை' [2] என்ற விருத்திக்கு, காலவிநோத நிருத்தப்பேரரை

1. 'மலையரையன் - மலையமான்' என்பது ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானம்.

2. நிருத்தபோகம், சாக்கைக்காணி எனவும் சாஸனங்களில் வழங்கும்.

யன் ஆயின பாரசவன் பொன்னன் என்பானை நியமித்தல் வேண்டி, அச்சோழவேந்தனிடம் அவனது அபிமானம்பெற்ற புலவரான வீராந்தப்பல்லவரையர் என்பார் விண்ணப்பித்துக் கொண்டனர் என்றும், அப்புலவர் விருப்பின்படி அவ் விருத்திநடத்துமாறு மேற்கூறிய நிருத்தப் பேரரையன் அரசாணையால் நியமனம்பெற்றனன் என்றும் கூறப்பட் டுள்ளன.

இச்சாஸனத்தினின்று, வீராந்தப்பல்லவரையர் என் பார், மூன்றாங்குலோத்துங்கனது வாயிற்புலவராய் அவனது அபிமானம்பெற்று விளங்கியவர் என்பது வெளியாகின்றது. நட்டுவநிலையுரிமையை அரசனிடங்கேட்டு, நிருத்தம்வல்லா னொருவற்கு இப்பல்லவரையர் கி. பி. 1201-ல் அளிக்கச்செய் திருத்தலால், இவரால் மதிக்கப்பட்டவன் அந்நிருத்தப் பேர ரையன் என்பதும் இவரும் இசைப்பயிற்சியுடையவர் என்ப தும் பெறப்படும். கோயிலினும் அரசரது ஓலக்கங்களினும் 'நட்டுவநிலை' நிகழ்த்துவோர் முத்தமிழினும் வல்லவராகவே இருந்தவர்கள். சாக்கையர் என்போர், இத்தகைய கலையிற் பேர்பெற்ற மரபினர்என்பது, பழைய நூல்களாலும் சாஸனங் களாலும் தெரியவருகின்றது.[1] அவரைப்போலவே, பாரச வர் என்பாரும் இத்தொழிலைத் திறம்பட நிகழ்த்திவந்தவ

1. புராணகதைதழுவிய ஆரியக்கூத்தைச் சாக்கையருள் ஆண் பாலார், அரசவையினும் தேவாலயத்தும் ஆடியபிநயித்துவந்தமை சிலப்பதிகாரத்தும் (28-79), கல்லெழுத்துக்களினும் (M. E. R. No. 120 of 1925; 250 of 1926; 97 of 1915) காணலாம். பெண் பாலாரும் இக்கூத்து நிகழ்த்தலுண்டு (Ibid. No. 8 of 1928-9). இச்சாக்கையர், குடமலைநாட்டில் இதுவே விருத்தியுடன் இன்றும் வாழ்தல் அறியத்தக்கது ('மூன்று தமிழ்க்குடிகள்' என்ற என் கட் டுரை காண்க—செந்தமிழ். தொ. 7).

ராவர்.[1] தண்டியலங்காரவாசிரியரும், ஆடல்வல்லோருள் ஒருவராய்க் கனகசபையில் இவ்விருத்தியை மேற்கொண்டு நடத்திவந்தவர் என்பது,

"ஈரிரண் டெல்லையி னிகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பிய னவையத்
தரும்பொருள் விளங்க யாப்பின் வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே"

எனவரும் அவர் பாயிரப்பகுதியால் அறியத்தகும். இத்தகைய விருத்திகொண்டோர்க்கு அலங்கார சாஸ்திரப்பயிற்சி இன்றியமையாததாம். அம்முறையில், இச்சாஸனங்கூறும் காலவிநோத நிருத்தப்பேரரையனும், தமிழிலும் அலங்கார நூல்களினும் தக்க ஞானம்பெற்றிருந்தவன் என்றும், அதுபற்றியே வீராந்தப்பல்லவரையர் அத்தகையோற்கு அரசனைக்கொண்டு உதவலாயினர் என்றும் கருதற்குரியன. இங்ஙனம், கலைவலார்க்கு உபகாரியான இப்பல்லவரையர்போன்ற ஆஸ்தானகவி யொருவராற்றான், அக் குலோத்துங்கனது மெய்க்கீர்த்தியும் குலோத்துங்கன்கோவைமுதலிய நூல்களும் பாடப்பட்டனவாதல் வேண்டும்.

---

1. பாரசவராவார், பிராமணற்குச் சூத்திரப்பெண்ணிடம் பிறந்தோரென்பர். இவர் கூத்துத்தொழில் நடத்தலை நச்சினார்க்கினியரும் கூறுவர் (தொல். பொருள். ஆராய்ச்சி. பக். 75).

# 36 பாரதந் தமிழ்செய்த அருணிலை விசாகன்.



சங்ககாலத்தே இயற்றப்பட்ட பாரதமொன்றும், 9-ம் நூற்றாண்டுப் பல்லவன் காலத்து இயற்றப்பட்ட பாரதமொன்றும் ஆக இருவேறு தமிழ்ப்பாரத நூல்களைப்பற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளேன்.[1] மூன்றாவது பாரதமொன்றும், மூன்றாங் குலோத்துங்கசோழன் காலத்தே தமிழில் இயற்றப்பட்டிருந்த தென்று திருவாலங்காட்டுச் சாஸன வாயிலாக இப்போது தெரியவருதல் குறிப்பிடத்தக்கதாம். இக்கல்லெழுத்தில்—

"மணவிற்கோட்டத்துத் திருப்பழையனூர் நாட்டுத் திருவாலங்காட்டுத் திருவரங்கில் அண்டமுற நிமிர்ந்தருளின நாயனார்க்கு"[2] திருநந்தாவிளக்கொன்று, "குன்றவத்தனக் கோட்டத்து இல்லத்தூர் நாட்டு அரும்பாக்கமுடைய அருணிலைவிசாகன் திரைலோக்யமல்லன் வத்ஸராஜன்" என்பானால் அமைக்கப்பட்டதென்றும், இவ்வருணிலைவிசாகன் பாரதத்தை இனிய செந்தமிழ்ப்படுத்தியவன் என்றும்,சிவநெறியில் ஒழுகுபவனென்றும்" கூறப்பட்டுள்ளன.[3] இச்சாஸனகாலத்தவனான குலோத்துங்கன் கி. பி. 1178-ல் பட்டம்பெற்றவனாகலின், அவனது 32-ம் ஆட்சிவருஷமான 1210-ல் இச்சாஸனம் அமைந்ததாகும். இதனால், 13-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தமிழ்ப்பாரதமொன்று புதிதாக இயற்

1. இந்நூல், பக். 4.

2. 'ஆலங்காடதனில் அண்டமுற நிமிர்ந்தாடுகின்ற கோலம்' என்றார் சேக்கிழாரும் (பெரியபு. காரைக். 63).

3. M. E. R. No. 482 of 1905.

றப்பட்டு வழங்கிவந்தமை தெரியலாம். இந்நூலாசிரியரை வத்ஸராஜன் என்று சாஸனங் கூறுவதால், தமிழ்நாட்டில் வாழ்ந்த சிற்றரசமரபினருள் ஒருவர் இவர் என்று தோற்று கின்றார். வத்ஸராஜரை-வச்சர் வச்சவர் வத்தவர் வத்தர் என்றும் வழங்குவர். "வச்சத்தொள்ளாயிரம்" [1] என்ற நூலொன்று, இக்குலத்தலைவர்மேற் பாடப்பட்டிருந்தது. இன்னோர் சோழர்கீழ்ப் படைத்தலைவராகவும்[2] அதிகாரிகளாகவும் வாழ்ந்தசெய்தி சாஸனங்களாலும் அறியப்படும். இப்பாரத நூலாசிரியர் சைவசமயத்தினர் என்று குறிக்கப்பட்டிருத்தலும் அறியத்தகும். இப்பாரதம் வழக்குவீழ்ந்தமையால், அதனமைதி எத்தகையது என்பது விளங்க இடமில்லை.

---

## 37 பவணந்திமுனிவர் காலம்.



"அருங்கலை விநோதன் அமராபரணன், திருந்திய செங்கோற் சீயகங்கன்" என்று புகழப்பட்ட அரசன் விரும்பியபடி, "பல்கலைக் குரிசில் பவணந்தி யென்னும் புலவர் பெருமான்" நன்னூலை இயற்றியுதவியவர் என்பதை அறியாதார் யாவர்? தமிழுலகில் என்றும் நிலவிவிளங்கும்படி அவ்விலக்கண நூலை இயற்றுவித்த வேந்தனைப்பற்றிச் சாஸனமூலம் அறியப்படுவனவற்றையும் நாம் பேணிக் கொள்ளற்பாலதன்றோ? வடஆர்க்காடுஜில்லா, திருவல்லத்துச் சிவாலயத்தே,

"ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு முப்பத்துநாலாவது. அமராபரணன் சீயகங்கன் நம்பிராட்டியாரான

1. பெருந்தொகை, 765.
2. கலிங்கத்துப்பரணி யாராய்ச்சி, பக் 24.

அரியபிள்ளை திருவல்லமுடைய நாயனார்க்கு வைத்த சந்திவிளக் கொன்றும்'...'[1]

எனவும், சீகாளத்திச் சிவாலயத்தின் இரண்டாம் பிராகாரத் திருமதிலில், திரிபுவனசக்கரவர்த்தி திரிபுவனவீரதேவனான அச்சோழனது அதுவே ஆட்சியாண்டில்—

"உடையார் திருக்காளத்தியுடையார்க்குக் குவளாலபரமேசுவரன் கங்ககுலோத்தமன் சூரநாயகன் திருவேகம்பமுடையானான அமராபரணன் சீயகங்கன்"[2]

திருவிளக்கொன்று வைத்தான் எனவும் இவன்சம்பந்தமான சாஸனங்களோடு, இக்கங்கன் மகளொருத்தி அறஞ்செய்தாள் என வேறு சாஸனமும்[3] வரையப்பட்டுள்ளது. புங்கனூர்த்தாலுகா அகஸ்தியகொண்டாச்சிவாலயத்தே, அச்சோழன்காலத்தவாகிய கல்லெழுத்துக்களால்,[4] இச்சீயகங்கனுக்குச் சூரநாயகன், உத்தமசோழகங்கன், வீரகங்கன்,வெட்டும் அமராபரணன் என்ற பெயர்களும் வழங்கின என்று அறியலாம்.[5] இவற்றால், குவளாலபுரத்தை (கோலாரை)த் தலைமைநகராகக் கொண்டு ஆண்டுவந்த கங்கர்வழியினனான அமராபரணன் சீயகங்கன் என்பான் சோழசக்கரவர்த்திக்குக் கீழ்ப்பட்டிருந்தவன் என்பதும், அரியபிள்ளை என்ற தேவியை உடையவன் என்பதும், திருவேகம்பமுடையான் என்ற இயற்பெயரும் சூரநாயகன்முதலிய சிறப்புப்பெயர்களும் உடையவன் என்பதும் தெரியவருவன. மூன்றாங் குலோத்துங்கனது 3 - ம் ஆட்சியாண்டுமுதல் 34-ம் ஆண்டு

1. M. E. R. No. 446 of 1912
2. Ibid. 116 of 1922
3. M. E. R. 195 of 1892
4. M. E. R. 186-7.
5. Ibid. 562-3 of 1906.

வரை இச்சியகங்கன் வாழ்ந்தவன் என்று தோற்றுகின்றான்.[1] இவன் முன்னோரும் சோழர்கீழ் அடங்கியிருந்தவர்களே. இன்னோர், கங்கவரசராயினும் கொங்குநாட்டையடுத்த கோலார்ப் பிரதேசத்தையாண்ட தமிழ்வேந்தரே என்பது, இவனதும் இவன்தேவியதுமான இயற்பெயர்களாலும், தமிழ்நாட்டுள்ளே இவனும் தேவியும் அறம்புரிந்திருத்தலாலும் விளங்குகின்றது. அக் கொங்குநாட்டுள்ள சீனபுரம்[2] என வழங்கும் சனகையில்வாழ்ந்த பவணந்தி முனிவரைக்கொண்டு இவன் நன்னூலை இயற்றுவித்தற்கு மேற்கூறிய தமிழ்த்தொடர்பே காரணம் என்க. திருக்காளத்திப் பிரதேசத்தை ஆண்ட மதுராந்தகப் பொத்தப்பிச்சோழன் என்பான், இச்சியகங்கனுடைய மாமன் ஆவன். தமிழெல்லையில் வாழ்ந்த இவனும் சோழர்கீழ்ச் சிற்றரசனே. தன்மருகனைப்போலவே, இப்பொத்தப்பிச் சோழனும் தமிழபிமானமுடையவன் என்பது அடுத்துக்கூறும் புலவர்வாலாற்றாற் புலனும். இவ்வாறு, தமிழருமை யறிந்தவனுப் தக்காரொருவரைக்கொண்டு,

"முன்னூ லொழியப் பின்னூல் பலவினுள்
எந்நூ லாரும் நன்னூ லாருக்
கிணையோ வென்னுந் துணிவே யன்னுக" (இலக். கொத். 8, உரை)

என்று, பிற்காலத்துத் தமிழ்மக்களெல்லாம் கொண்டாடும்படி அரிய இலக்கணநூலொன்றை இயற்றிப் புகழ்படைத்த இச்சியகங்கன் செய்திகள் சாஸனமூலம் சிறிதளவேனுந் தெரியக்கூடியதாயிருத்தல் அறிந்து போற்றத்தக்கது.

---

1. M. E. R. 432 of 1929 - 9.

2. இச்சனகை,கொங்குமண்டலத்துக் குறும்பு நாட்டைச்சார்ந்ததென்று அம்மண்டலசதகம் கூறும்.

# III. பிற்காலத்துப் புலவர்கள்

## 38 தேவன் திருவரன்குளமுடையான் மறச்சக்கரவர்த்திப் பிள்ளை.



மேற்கூறிய மூன்றாங் குலோத்துங்கசோழனது ஆட்சி யிறுதியோடு (கி. பி. 1216) இடைக்காலத்துப் புலவர்களை நாம் நிறுத்திக்கொள்ளலாகும். அவ்வேந்தனுக்குப் பின்பு சோழ ஏகாதிபத்தியம் நிலைகுலையத்தொடங்கியது. அதனால், அச்சோழர்கீழ்ச் சாமந்தர்களாகவும் மந்திரி தந்திரிகளாக வும் இருந்த பல்லவகுலத்துச் சம்புவராயர்கள், தம் சக்கர வர்த்திக்கு விரோதிகளாய்க் கிளம்பித் தங்களாட்சியைச் சோணாடு தொண்டைநாடுகளிலே நாட்டிக்கொள்ளலாயினர். தெற்கே, பல நூற்றாண்டுகளாகச் சோழர்கீழ் ஒடுங்கியிருந்த பாண்டியர்கள் அவர் பலவீனங்கண்டு பேராற்றலோடு தம்மர சியலை விரிவுபடுத்திவந்தனர். வடக்கே காகதீய விஜயநகர ஏகாதிபத்யங்கள் ஒருபுறந்தோன்ற அவற்றின் வலிமை தமிழ கத்திலும் பரவுவதாயின. இவ்வாறாக 4-நூற்றாண்டுகளாய்த் தமிழ்நாடு முழுமையுந் தன்னடிப்படுத்திவந்த சோழராட்சி 13-ம் நூற்றாண்டுமுதல் சிதறுண்டதாயினும், விஜயநகரஏகா திபத்யம் பின்னர் வேரூன்றி இந்நாட்டை அமைதியான நிலை மையில் வைத்ததென்று சொல்லலாம். ஆகவே, 13-ம் நூற் றாண்டுமுதலாக வாழ்ந்தகவிஞர்களைப் 'பிற்காலத்துப்புலவர் கள்' என்று கொள்வது பொருந்தும். இக்காலம் அரசியன் மாறுபாட்டுக் குட்பட்டதாயினும், அரசர்களுந் தலைவர்களும் புலவர்பெருமக்களை ஆதரித்துத் தமிழ்வளர்ச்சி புரிந்துவந்த மையால், அந்நிலையில் அதிகமாற்றமில்லை யெனலாம். அங்ஙு

னம் ஆதரிப்புடன் வாழ்ந்த புலவர்களைப்பற்றிச் சாஸனங்கள் கூறுஞ் செய்திகளை இனிக் காலமுறையில்வைத்துக் கூறுவேன்.

சோழர் வலிகுன்றியதும் தன்பேராற்றலை விரிக்கமுயன்ற தென்னாட்டு வேந்தன், திரிபுவன சக்கரவர்த்தி மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பான். இவன் கி. பி. 1216—1235 வரை ஆட்சிபுரிந்தவன். இவனது ஆட்சியின் 11-ம் ஆண்டுச் சாஸனமொன்று, புதுக்கோட்டைச்சீமைத் திருவரன்குளத்துள்ள திருமால்கோயிலில் வரையப்பட்டுள்ளது.[1] அதனில்—

"பாண்டிமண்டலத்துப் பொன்னமராவதி முதலிய நாடுகளில் வாழும் பெருவீரர்களான மறமாணிக்கர்கள்மேல், தேவன் திருவரன்குளமுடையான் என்ற புலவர் பாடிய பேர்வஞ்சி என்ற பிரபந்தத்தை அவ்வீரர்கள் கேட்டு மகிழ்ந்து, அப்புலவர்க்கு 'மறச்சக்கரவர்த்திப் பிள்ளை' என்ற பட்டப்பெயருதவியும், தூத்திக்குடி என்ற கிராமத்திற்பாதி இறையிலியாகக் கொடுத்தும் பெருஞ்சிறப்புச் செய்தனர்"

என்ற அரியசெய்தி காணப்படுகின்றது. மறமாணிக்கர் என்பது வீரர்களில் தலைசிறந்தவர் என்ற பொருள் பயப்பதாம். இவ்வீரருள் மற்றொருசாராரை "மழவர்மாணிக்கம்" என்று வேறுசாஸனமொன்று கூறுதலும்[2] ஒப்பிடத்தக்கது. இன்னோர் 'மறச்சக்கரவர்த்திகள்' என்றும் வழங்கப்படுவர். இவர்கள்மேற் பாடப்பட்ட பேர்வஞ்சி என்பது பெருவஞ்சி என்ற பிரபந்தமாம். பெருவஞ்சியாவது, தன்னை வந்துபணியாத பகையரசர் நாட்டை வெற்றிவேந்தன் பின்

1. புதுக்கோட்டைச் சாஸனத்தொகுதி. No. 278, p. 158.
2. The Pandyan Kingdom, p. 154

னூர் எரியிட்டழித்தலைக் கூறும் புறத்துறையாகும்.[1] இத்துறையமையப் புலவர் பிரபந்தம் பாடியுள்ளமையால், இம்மறமாணிக்கர் அத்தகைய வீரச்செயலைத் தம் அரசனை பாண்டியன்பொருட்டு நிகழ்த்தியவர் என்பது பெறப்படுகின்றது. இவ்வீரர்கள் வாழ்ந்த பொன்னமராவதி, அச்சுந்தரபாண்டியனது தலைநகர்களுள் ஒன்றாக அக்காலத்து விளங்கியது. இவ்வரசனது மெய்க்கீர்த்தி "பூமருவிய திருமடந்தையும்" என்று தொடங்குவதாகும்.[2] இதனுள், சோழன் தன்பால் வந்து பணியாமையால்,

"வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையுஞ் செந்தழல் கொளுத்தி" ச்

சோணாட்டை அழித்தான் என்றும், அவன் பணிந்த பின்னர்—

"வாங்குசிறை யன்னந் துயிலொழிய வண்டெழுப்பும்
பூங்கமல வாவிசூழ் பொன்னம ராவதியில்
ஒத்துலகந் தாங்கு முயர்மேரு வைக்கொணர்ந்து
வைத்தனைய சோதி மணிமண் டபத்திருந்து
சோலை மலிபழனச் சோணாடுந் தானிழந்த
மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப" ச்

சோழன்வந்து அச்சுந்தர்பாண்டியனது அடிபணியவும்,

"பண்டிழந்த, சோள பதியென்னு நாமமுந் தொன்னகரும்
மீள வழங்கி விடைகொடுத்து விட்டருளி" னன்

என்றும் கூறப்பட்டிருத்தல் அறியத்தகும். இத்தகைய பெருவெற்றிக்குக் காரணமானவர், மேற்கூறிய மறமாணிக்கரே

---

1. "முன்னடையார் வளநாட்டைப், பின்னருமுடன் றெரிகொளீஇயன்று" (புறப். வெண். 3, 57)

2. பெருந்தொகை, 906.

என்று கூறத்தகும். இப்பெருவீரர்களால் அபிமானிக்கப் பெற்றுப் பெருவஞ்சி என்ற நூலை இப்புலவர் பாடினமை யின் "மறச்சக்கரவர்த்திப்பிள்ளை" என்ற சிறப்புப்பெயரை அவராற் பெறலாயினர் என்க. இவற்றால், 13-ம் நூற்றாண் டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் இப்புலவர் என்பது நன்கு விளங்கும். இவர்பாடிய பெருவஞ்சி இப்போது கிடைத் திலது.

---

## 39 திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவர்.



தமிழ்ச் சைவசாத்திரங்களுள் தலைமைவாய்ந்த சிவ ஞானபோதம் என்ற அரிய நூலை ஆக்கியருளியவர், திருவெண் ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் என்பதும் சைவசமய சந் தானசாரியருள் இவரே தலைவரென்பதும், மற்றும் இப்பெரி யாரது வரலாறுகளும் சைவசமயிகளும் பிறரும் நன்கறிவர். இவ்வாசிரியரைப்பற்றிச் சாஸனவழியாலும் சிறிது அறியக் கூடியதாயுள்ளது. மேலே குறித்துப்போந்த மூன்றாங் குலோத்துங்க சோழற்கு மகனாய் அவற்குப் பின் (கி. பி. 1216-ல்) பட்டமெய்திய மூன்றாம் இராஜராஜனது ஆட் சிக்காலத்தில், திருவண்ணாமலைச் சிவாலயத்தின் முதற் பிராகாரத்து வடக்குத் திருமதிலில் அமைந்துள்ள சாஸன மொன்று—

"திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவன்"

என்பாரால் அக்கோயிலுள் பிரதிஷ்டிக்கப்பட்ட சிவமூர்த் தத்தின் நித்திய பூசை முதலியவற்றுக்காக, மேற்குறித்த

இராஜராஜசோழனது 16-ம் ஆண்டில் நிலம் இறையிலி செய்து அளிக்கப்பட்டது [1] என்று கூறுகின்றது. அச்சோழன் 1216-ல் பட்டம் பெற்றவனாதலின் கி. பி. 1232-ல் இச்சாஸனம் பிறந்தமை தெரியலாம். இச்சிலாலிகிதங் கூறும் மெய்கண்டதேவர் சிவஞானபோத ஆசிரியரே யாதல்வேண்டும் என்று கருதுவர் சாஸனவாராய்ச்சியாளர். உமாபதி சிவாசாரியர்க்கு நான்காந்தலைமுறைக் குரவரே மெய்கண்டதேவர் என்பது சந்தானாசாரியரின் வரலாறாகும். அச்சிவாசாரியர் தாம் இயற்றிய சங்கற்பநிராகரணம் என்ற நூலுள்—

"ஏழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்ப "(பாயி. 2, 26-7)

அதனைத் தாம் இயற்றியதாகக் கூறுகின்றார். அஃதாவது—சகாப்தம் 1235(=கி.பி.1313)ல்செய்யப்பட்டது என்பதாம். இக்காலத்துக்கும் மேற்குறித்த திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டார்சாஸனம் பிறந்த 1232-க்கும் 81-ஆண்டுகளே இடையீடுள்ளன. இஃது, உமாபதிசிவத்துக்கு நான்காந் தலைமுறைச் சந்தானகுரவரான மெய்கண்டதேவர்க்குப் பெரிதும் ஏற்புடைத்தாதல் காணலாம். ஆகவே, "திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவன்" என்று சாஸனங் கூறுமவரே சிவஞானபோத ஆசிரியர் என்றும், நடுநாட்டு வெண்ணெய்நல்லூரினரான அப்பெரியாரே அந்நாட்டில் தம்மூர்க்கு அயலதான திருவண்ணாமலையினும் சிவமூர்த்தமொன்றைப் பிரதிஷ்டித்தவர் என்றும், அதற்கு அரசனே பிறதலைவரோ நிலமுதவினர் என்றும் கொள்வது பொருத்தமாதல் கண்டுகொள்க.

---

1. Ep. Ind. Vol. vii, p. 268; M. E. R. 485 of 1902.

## 40 திருவாழிபரப்பினன் கூத்தன்.



திரிபுவனசக்கரவர்த்தி மூன்றும் இராஜராஜசோழனது 21-ம் ஆட்சிவருஷத்துச் சாஸனமொன்று, காஞ்சீபுரத்து ஸ்ரீவரதராஜப் பெருமாள்கோயில் திருமஞ்சனமண்டபத்தின் மேற்குத் திருமதிலில் வரையப்பட்டுள்ளது.[1] திருவாழிபரப்பினன் கூத்தன் என்பார் சிந்துப் பிரபந்தமொன்று பாடினர் என்றும், அதற்குப் பரிசாகப் பொத்தப்பிச்சோழன் திருக்காளத்திதேவன் என்ற அரசன், வள்ளுவப்பாக்கம் என்ற ஊரை அப்புலவர்க்கு முற்றூட்டாயளித்தான் என்றும் இச்சாஸனம் அறிவிக்கின்றது. 'திருவாழி பரப்பினன்சந்தி' என்ற பெயரால், அவ்விராஜராஜன்காலத்து மதுராந்தக பொத்தப்பிச்சோழனால், திருநீர்மலைக்குச் சிலகட்டளைகளுக்காக நிலம் உதவப்பெற்றதென்று மற்றொரு கல்லெழுத்துக் கூறும்.[2] இப்பொத்தப்பியரசன் சிந்துநூல்பாடிய இப் புலவர்க்கு உதவியவனோ அன்றி அவன்தந்தையோ—இருவருள் ஒருவனாதல் வேண்டும். திருவாழிபரப்பினன் என்பது திருமால் சமயத்தை எங்கும் நிலவச்செய்தவன் என்ற பொருள்படுவதென்பர். இங்ஙனம் பரப்பினவன் பொத்தப்பிச்சோழருள் ஒருவன் போலும். பொத்தப்பி என்பது திருக்காளத்தி சூழ்ந்த நாடாம்.[3] இந்நாட்டரசான அச்சோழனைக் கண்டகோபாலன் என்றும் சாஸனங்கள் வழங்குவன. தமிழ்ப்புலவரொருவரை இங்ஙனம் ஆதரித்து நூல்பாடச்செய்து முற்றூட்டு உதவியதினின்றும், மேற்குறித்த அமராபரணன்-சீயகங்கனுக்கு அம்மானாகிய மதுராந்தகபொத்தப்பிச்சோழன் மேற்பாடிச் சிவாலயத்துத் திருப்பணிசெய்ததை—

---

1. M. E. R. 622 of 1919 b.
2. Ibid. 534 of 1912.
3. பெரியபு. கண்ணப்ப. 1.

"பொத்தப்பிச் சோழன் புடோலியர சன்புவிமேல்
எத்திசையும் போற்றுமெழின் மேற்பாடி - மெய்த்தவத்தாற்
சோளேந் திரசிங்க நாயகற்குத் துங்கமணித்
தாளேந்து மண்டபஞ்செய் தான்" 1

என்ற வெண்பாவொன்று சிறப்பித்திருத்தலினின்றும் தமிழகத்தினெல்லையில் இருந்தாண்ட பொத்தப்பிச்சோழர் தமிழபிமானஞ் சிறக்கப் படைத்தவர்களென்பது தெரியலாகும். கச்சித் திருமாலைப்பற்றியதாய்ச் சிந்துப் பிரபந்தங்களிற் பழைமைவாய்ந்து அக்காலத்து வழங்கியதாகத் தெரியும் இந்நூல் பிற்காலத்து வழக்குவீழ்வதாயிற்று.

---

## 41 சம்புகுலக் காடவராயரும் தமிழ்ப் புலவர்களும்.



சோழசக்ரவர்த்திகளின்கீழ்ப் படைத்தலைவராயும் சாமந்தர்களாயும் வாழ்ந்த சம்புவராயர் என்ற பல்லவகுலத்தவரைத் தமிழபிமானஞ் சிறக்கப்படைத்தவர் என்று கூறலாம். இன்னோர்காலத்துச் சாஸனங்கள் தமிழ்நாட்டினும் பிறவிடங்களினும் எண்ணிறந்துள்ளன. அவற்றுட் சில தமிழ்ப்பாடல்களால் அமைந்தவை. விருத்தாசலக் கோபுர வாயிலிலே இத்தகைய பாடற்சாஸனங்கள் வரையப்பட்டுள்ளன. இவை புலவர் பலராற் பாடப்பெற்றவை என்பது இவற்றின் குறிப்புக்களால் விளங்குவனவாம். இவையாவும்,

---

1. S. I. I. Vol. iv, p. 88.—இப்பாட்டுட்கண்ட புடோலி கடப்பைஜில்லாவிலும், மேற்பாடி சித்தூர் ஜில்லாவிலுமுள்ள ஊர்கள் என்றும், சோளேந்திரம் மேற்பாடிசிவாலயத்தின் பெயரென்றும் அறிக.

அரசநாராயணன் கச்சியராயன் மகன், காடவராயனை ஆளப்பிறந்தான் வீரசேகரன் என்பானைப்பற்றியவை. இவன் கற்கடகமாராயனது கூடலூரையும், அதிகமானது நாட்டையும் அழித்தவன் என்று அவற்றிற் கூறப்படுகின்றான்.[1] இக்காடவராயன், மூன்றுங்குலோத்துங்கனது காலத்தில் அமைச்சனும் படைத்தலைவனுமாய் விளங்கியவன். திருவெண்ணெய்நல்லூர்ச் சிவாலயத்தின் கோபுரவாயில்நிலைக் கல்லினும் இத்தலைவனைப்பற்றிய பாடல்கள் உள்ளனவாம். மேற்கூறியபடி, 13-ம் நூற்றுண்டில் சோழஏகாதிபத்தியம் நிலைகுலையவும் இத்தலைவன்வழியினரே சோணுடு தொண்டைநாடுகளைக் கைப்பற்றித் தாமே அரசராய் ஆட்சிபுரிவாராயினர்.

இவருள் தலைவனானவன் கோப்பெருஞ்சிங்கன் என்பான். இவன் கி. பி. 1243-ல் பட்டம்பெற்றவன். சோணுட்டைக் கைப்பற்றிச் சோழசக்கரவர்த்தியை இவன் சிறைப்படுத்திப் போந்தசெய்தி, வடவார்க்காடு ஜில்லா வந்தவாசித் தாலுகா வாயலூர்என்ற ஊரிற் காணப்பட்ட பாடற் சாஸனமொன்றுனுந்[2] தெரிகின்றது. அதனுள், இவ்வரசன்—அவனிநாராயணக் காடவப்பெருஞ்சிங்கன், நிருபதுங்கசீயன், திரிபுவனராஜாக்கள் தம்பிரான், மல்லைவேந்தன் என்று புகழப்படுகின்றான். இவனது வெற்றித்திறங்களைப்பாடிய புலவர் சோக்கசீயர் என்பார் ஆவர்: இப்பெருஞ்சிங்கனும் தமிழ்ப்புலமை வாய்ந்திருந்தவனே.[3] கோதாவரிஜில்லாவில் இடர்க்கரம்பை எனத் தமிழ்ப்பெயர்பெற்ற திராக்ஷாராமம் என்ற ஊரிற் சிதைந்துகாணப்படும் இரண்டு சாஸனத் தமிழ்ப்பாடல்கள் இவனால் இயற்றப்பட்டவை என்பர். திருவண்ணு

1. M. E. R. 74 of 1919 (c) 2. Ibid. 418 of 1922.
3. Ibid. 1902. p. 5.

மலை அருணசலேசுவரர் கோயிற் றிருமதிலில் பொறிக்கப்பட்டதும் 136 அடிகளில் அமைந்ததுமான அகவலொன்று[1]

"கார்வளர் மேனிக் கமலக் கண்ணன்
பார்வள ருந்திப் பல்லவர் பெருமான்
சகல புவன சக்கர வர்த்தி
கூட லவனி யாளப் பிறந்தான்
கோப்பெருஞ் சிங்கன் குரைகழற் காடவன்
சொன்மறை யரக்கன் சுடர்வா ளெடுத்துப்
பின்வர நடந்து பிலந்திறந் தருளிய
காவலர் தம்பிரான் கண்ணு ரமுதர்
அருண மால்வரைப் பெருமாள் தமக்குச்
செய்த திருப்பணி தெரிந்தெடுத் துரைப்பின்"

என்று தொடங்கி இப்பெருஞ்சிங்கனையும்,

"விருதரில் வீரன் விறல்வீ ராசனி
கரிய நாதன் காதற் குமரன்
குடதிசைக் கருநடர் தென்புலங் குறுகவும்
வடதிசைத் தெலுங்கர் வடக்கிருந் தழியவும்
போர்பல கடந்து பொருந்தா மன்னர்
ஆரெயிற் சேர்ந்தூர் மலையர ணழித்து
நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்
வெல்புக ழனைத்து மேம்படத் தங்கோன்
வாகையுங் குரங்கும் விசையமுந் தீட்டிய
அடல்புனை நெடுவே லாட்கொண்ட தேவன்
கடகரி முனைமுகங் கடந்த காங்கயன்"

என்று அவ்வேந்தன் மகன் ஆட்கொண்டானையும் சிறப்பித்து,

"இவ்வகை யாவையுஞ் செய்தன னதனுல்
* * *

1. S. I. I. viii, pp. 39-41.

ஆதியி லஞ்செழுத் தோதிய தொண்டரென்
றெண்ணிய நாற்பத் தெண்ணா யிரவரும்
திருவரு ளிவன்மேல் வைத்தனர்
இருநிலந் தன்னி லினிதுவாழ் கெனவே''

என வாழ்த்தி முடிக்கின்றது. இவற்றால், புலவர்பாடும் புகழுடையனாவதில், இப்பெருஞ்சிங்கனும் இவன்வழியினரும் பெருநோக்கங் கொண்டிருந்தவர் என்பது புலனும். இக்காடவனது வெற்றிப்புகழ்கள் "நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்'' தீட்டப்பட்டன என்ற செய்தி இங்கே குறிப்பிடத்தக்கது. கடாம்புனை நன்னன் என்பான், பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரால் மலைபடுகடாத்திற் புகழ்ந்து பாடப்பட்ட நன்னன்சேய் நன்னன் என்ற வேளிர்தலைவன் என்பது அறிஞர் அறிவர். இவன்வெற்புப் பல்குன்றக்கோட்டம் என்பதும், இவன்தலைநகர் [1] செங்கண்மா என்பதும் "பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள்'' என இவன் கூறப்படுதலால் அறிக.

---

## 42 கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன்.

மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பானது (கி. பி. 1216—1238) பதினான்காம் ஆட்சியாண்டில் (கி. பி. 1230)

---

1. இவ்வூர் நவிரமலைப்பக்கத்தது; "நவிரமலைத் தென்பற்று நாட்டவர்க்கும்'' என்பது சாஸனம் (S. I. I. vii, p. 43). இம்மலை, இப்போது திரிசூலகிரி, பர்வதமலை என வழங்குவதென்பர் (பத்துப் பாட்டு, முகவுரை, பக். 27).

பாண்டிநாட்டுப் பெருச்சிகோயில்[1] என்ற ஊர்க்கணுள்ள சிவாலயத்தே சாஸனங்கள் உள்ளன. அவையொன்றில், கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன் என்ற தலைவன் தன் மீது பிள்ளைக்கவிப் பிரபந்தம் பாடிய சிறுபெருச்சியூர்க் கோடிக்கோண்டான் பெரியான் - ஆதிச்சதேவன் என்ற புலவர்க்குச் சாத்தனேரி என்ற ஊரில் நிலங்கள் அளித்தும், அந்நிலங்கட்குரிய வரிகள் சிலவற்றை அவ்வூர்க் கோயிற் கட்டளைக்கு நியமித்தும் போந்தசெய்தி கூறப்பட்டுள்ளது.[2] இக்காங்கேயன், திருப்புத்தூர்ச் சேகரத்துத் தென்னாற்றுப் போக்கைச் சார்ந்த நியமம் என்ற ஊரின் தலைவனும், மேற் கூறிய சுந்தரபாண்டியனது தலைமையதிகாரியுமாக விளங்கியவன் என்று இரணியூர்ச் சாஸனம் கூறும்.[3] பெரியான் ஆதிச்சதேவனை இப்புலவரை அக்காங்கேயனுக்கு முதன் முதல் அறிமுகஞ்செய்வித்து நட்புண்டாக்கி வைத்தவர், அச்சுந்தர பாண்டியனது வாயிற் புலவரான காரணைவிழுப் பரையர் என்பது இச்சாஸனத்தால் அறியலாம். இப்பாண்டியனது 15-ம் ஆண்டுக் (கி. பி. 1231) கல்லெழுத்தாக ஆங்குள்ள மற்றொன்றில், அக்காங்கேயனும் கண்டியூர்நாடாள்வான் என்பவனும் இப்புலவர்க்குச் சிலநிலங்களைக் கிரயஞ் செய்ததைப்பற்றிக் கூறுமிடத்து, அக்காங்கேயன் இவ்வாதிச்சதேவனை நம்புலவன்[4] என்று உரிமைபாராட்டிக் கூறுகின்றான். இதனால், முற்கூறிய சாஸனம்பிறந்த ஓராண்டுள்ளே, அத்தலைவனால் இப்புலவர்பெற்றிருந்த பேரபிமானம் புலனாகின்றது.

1. இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூர்த் தாலுகாவில் உள்ளது.

2. M. E. R. 75 of 1924; Ibid. 26 of 1926.

3. Ibid. 26 of 1926. 4. Ibid. 71 of 1924.

இவற்றால், பெரியான் ஆதிச்சதேவன் என்பார் மாறவர் மன் சுந்தரபாண்டியன் காலத்தே அவனது ஆஸ்தானத் தமிழ்ப்புலவராலும் தலைவர்களாலும் பெரிதும் அபிமானித்துக் கொண்டாடப்பெற்ற பெருங்கவிஞர் என்பதும், காங்கேயன் பிள்ளைக்கவி என்ற பிரபந்த மொன்று இவரால் பாடப்பெற்றிருந்ததென்பதும் சாஸனங்கள்வாயிலாக அறியப்படுதல் கண்டுகொள்க. இப்பிரபந்தம் இப்போது கிடைத்திலது.

## 43 காரணை விழுப்பரையர்.

மேற்கூறிய பெரிச்சிகோயிற் சாஸனத்தால், மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய வாயிற்புலவராக விளங்கியவர் காரணை விழுப்பரையர் என்பார் என்றும், இவர் பெரியான் ஆதிச்சதேவன் என்ற புலவர்க்கு நட்பினர் என்றுந் தெரியலாகும். இவ்விழுப்பரையரைப் "பெருமாள் சீபாதம் சேவிக்கும்" [1] என்று அச்சாஸனம் விசேடிக்கின்றது. இதனால், அச்சுந்தரபாண்டியனது (1216 - 38) ஆஸ்தான கவியாயிருந்தது மட்டுமன்றி, அவ்வரசற்கு அணுக்கத் தொண்டராகவும் வாழ்ந்தவர் இப்புலவர் என்பது புலனாம். கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன் என மேற்குறித்த பாண்டியனதிகாரிக்கும் இவர் பெருநட்பினராவர். இதுபற்றியே, பெரியான் ஆதிச்சதேவனை அத்தலைவற்கு அறிமுகஞ்செய்வித்து அப்புலவரது நல்வாழ்வுக்குக் காரணமாயினர். இவரூராகிய காரணை என்பது திண்டிவனந்தாலுகாவில் அண்ணமங்கலத்தைச் சார்ந்ததென்று தெரியவருகின்றது.[2] 'காரணை விழுப்

1. M. E. R. 1927 - 8, p. 47.
2. M. E. R. 239 of 1927 - 8.

பரையன்மடல்' என்பதொரு நூலும் உண்டு என்பர். காரணை என்பது காராணை [1] என்றும் வழங்கும். மாறவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றிய 'பூமருவிய திருமடந்தையும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி, [2] அவனது வாயிற்புலவரான இவ்விழுப்பரையர் போன்றவராற்றான் பாடப்பட்டிருத்தல்வேண்டும்.

---

## 44 கப்பற்கோவையாசிரியர்.



கப்பற்கோவை என வழங்கும் நூலின் பாடல்கள்பல தமிழ்நாட்டிற் பயில்வன என்பதைக் கற்றோர் அறிவர். பாண்டிநாட்டுக் கப்பலூர், துவரை என்ற ஊர்களிலிருந்து ஆண்டவனும், பாண்டியற்கு மந்திரியும் தளகர்த்தனுமாக விளங்கியவனுமான கருமாணிக்கன் என்ற தலைவன்மேற் பாடப்பட்டது அப்பிரபந்தம். இதுபற்றிக் கருமாணிக்கன் கோவை எனவும் வழங்குப. மதுரைத் தமிழ்ச்சங்கத்துக்கு அருமையாகக் கிடைத்திருந்த அக்கோவைப்பிரதி ஒன்றைக்கொண்டு "கப்பற்கோவை'' என்ற தலைப்பின்கீழ், அந்நூலால் தெரியவந்த செய்திகளைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் [3] விரித்தெழுதியுளேன். அக்கோவைத் தலைவனைத் தொண்டையர்கோன் என்றும், யாதவமரபினன் என்றும், பாண்டியன் படைத்தலைவனாய்ப் பலவெற்றிகளையும் அடைந்து அவன் புகழை வளர்த்தவன் என்றும் அந்நூல் கூறும்.

"சேயோ னெனுந்திற லோன்திரு மேனி வலம்புரிபோற்
றூயோன் வழிவந்த தொண்டையர்கோன்'' (11)

---

1. S. I. I. vii, 43. 2. பெருந்தொகை, 906. 3. தொ-6, ப-8.

"உலகம் புகழ்பதி னொரு யிரவ ருளக்கவர்ந்த
கலகன் குலதிலகன் கருமாணிக்கன்" (379)
"கைதவர்தந் தளத்துக் கொருவன்" (346)
"கன்னடர் மண்கவருங் கருமாணிக்கன்" (395)
"காடவர் மண்கவருங் கருமாணிக்கன்" (222)

என்ற அக்கோவையடிகளால் அறிக. இவற்றுட்கண்ட போர்ச்செயல்களை நோக்குமிடத்து, இவை 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சிபுரிந்த பாண்டியர்களுடையன என்று தோற்றுகின்றது. இனி, கோனேரின்மை கொண்டான் என்ற பாண்டியன்காலத்ததான சாஸனமொன்றில்—

"முத்தூற்றுக் கூற்றத்துக் கப்பலூரான உலகளந்த சோழநல்லூர்க் கரியமாணிக்காழ்வான் திருவுடைநாயகரான வீரபாண்டியக் காலிங்கராயர்"[1]

எனவருந் தொடர் இங்கே குறிப்பிடத்தக்கது. முத்தூற்றுக் கூற்றம் என்பது கானாடும் புதுக்கோட்டைச்சீமைப் பகுதியும் அடங்கியதாகும். இப்பிரதேசத்தில் உள்ளனவே, கருமாணிக்கனுக்குரிய கப்பலூர், துவரை (துவராங்குறிச்சி) என்ற ஊர்கள். இக்கப்பலூர்த் தலைவற்குச் சாஸனங்கூறும் கரியமாணிக்காழ்வான் என்ற பெயரினின்று, கப்பற்கோவை கொண்ட கருமாணிக்கனே அவன் என்றுகொள்ள இடந்தருகின்றது. காலிங்கராயன் என்ற சிறப்புப்பெயரும் இவன் குடியினர்க்கு வழங்கியதாம். "காலிங்கர்கோ னிருந்துணைவன்" என்ற கப்பற்கோவைத் தொடரால், இவன் சகோதரனும் அப்பெயர் பெற்றிருத்தல் காண்க. "கோனேரின்மை கொண்டான்" என்று, இவன்காலத்துப் பாண்டியன் கூறப்படுகின்றான். இது, மாறவர்மன் குலசேகரனுக்கு (பட்டம்

1. S. I. I. Vol. iv, 112

1268) சாஸனத்துப் பயில்வதாம். இவன் ஜடாவர்மன் வீர பாண்டியற்குப்(பட். 1253)பின் சிங்காதனமேறியவன். இவ்விருவரும் ஒருகாலத்து விளங்கியவர்களேயாதலின், கோனேரின்மைகொண்டானென குலசேகரனுக்கு முன்பாண்ட வீர பாண்டியன்பெயரைத் தன் கௌரவநாமமாகக் கப்பலூர்க் கரியமாணிக்காழ்வான் தரித்திருந்தனன் என்றும், அவ்வேந்த ரிருவர்காலத்தும் படைத்தலைமை வகித்தவன் இத்தலைவனென்றும் கருதக்கூடியன. இவற்றால், 13-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவரே கப்பற்கோவை யாசிரியர் என்பது பெறப்படுகின்றது.

---

## 45 சேனாவரையர்.



சேனாவரையர் என்பதற்குப் படைத்தலைவர் என்பது பொருளாம். இது, சேனாபதிகளாய் விளங்கியவர்க்கு அரசர்கள் வழங்கிவந்த சிறப்புப்பெயராகும். 'கிளை யெண் குழூஉ' (275) என்ற நன்னூற் சூத்திரவுரையுள், சிறப்பாற்பெறும் பெயர்க்கு 'ஆசிரியன், படைத்தலைவன், சேனாவரையன்' என்பவற்றை மயிலைநாதர் உதாரணங்காட்டுதல் காண்க. இவற்றுட் சேனாவரையன் என்னும் பெயர் சாஸனங்களினும் பயில்வது:—

(1) "திருவழுதி வளநாட்டுத் திருவள்ளூர்ச் சேனாவரையனாயின தத்தன்" (T. A. S. Vol. iii, p. 75)

(2) "புவனேக சுந்தரநல்லூர் அரையன் ஆண்டானான சேனாவரையன்" (S. I. I. V, p. 154)

(3) "மிழலைக் கூற்றத்துப் புதுக்குடியூரினரான சேனாவரையர்" (M. E. R. 457 of 1929-30)

(4) "ஆற்றூர்ச் சேனாவரையன்" (465 of 1929-30)

என்பனமுதலிய காண்க. இத்தகைய சிறப்புப்பெயர், தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்குச் சிறந்த உரையிட்டாருள் ஒருவர்க்கும் வழங்குதலை அறியாத தமிழறிஞர் யாவர்? இவ்வாசிரியரும், படைத்தலைவர் கூட்டத்தைச் சார்ந்தமையால் அப்பெயர் எய்தியவர் என்றே நாம் கொள்ளத்தகும். இனி, மேற்குறித்த தொடர்களிற்கண்ட நால்வருள்ளே, ஈற்றிலுள்ள ஆற்றூர்ச் சேனாவரையரைத் தொல்காப்பிய உரையாளரான சேனாவரையரோ என்று சாஸன வாராய்ச்சியாளர் சங்கிப்பர்.[1] ஆயின், இச்சங்கைக்குச் சிறப்புடைய காரணமொன்றும் அன்னோர் எழுதினரில்லை. எனினும், என் ஆராய்ச்சியில் அதுபற்றித் தோன்றும் கருத்துக்கள் சிலவற்றை இங்கே கூற விரும்புகின்றேன்.

சாஸனத்துக்கண்ட ஆற்றூர் என்பது, தென்பாண்டி நாட்டின் பழைய துறைமுகநகரான கொற்கைப் பக்கத்துத் தாமிரபர்ணியின் அக்கரையிலுள்ள ஊராகும். அவ்வூர்ச் சோமநாதர்கோயிலில் வரையப்பட்ட சாஸனங்களில் ஒன்று, மாறவர்மன் குலசேகரபாண்டியனது 7-ம் ஆட்சியாண்டில் அமைந்துளது. சேந்தமங்கலம், அவனிபசேகரமங்கலம்[2] என்பன அதன் பழம்பெயர்கள் என்பது அச்சாஸனத்தால் தெரிகின்றது. அதனில், ஆற்றூர்ச் சேனாவரையன் என்பார், ஆசிரியர்மாணாக்கர்முறையில் தம்முன்னோரிடமிருந்து தமக்குக்கிடைத்த நிலம் மனைகளை, தம்மூர்ச் சோமநாதசுவாமிக்கு

---

1. M. E. R. 1929-30, p. 78.

2. அவனிபசேகரன் என்பது, 9-ம் நூற்றாண்டினனான ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனது பெயரென்பது முன்னரே குறிக்கப்பட்டது (இந்நூல், பக். 32-3).

உதவிய செய்தி கூறப்பட்டுள்ளது.[1] இச்சாஸனத்துக்கண்ட காலக்குறிப்புக்களால், அங்ஙனம் உதவியது கி. பி. 1276-ம் ஆண்டென்பது தெளிவாம் என்பர். இதனால் இரண்டாம் மாறவர்மன் குலசேகரனே, இச்சாஸனகாலத்துப் பாண்டியன் என்பது தேற்றமாம். இனி, அவ்வூர்த் திருமால்கோயிலில் அமைந்த வேறுசாஸனங்க ளிரண்டால்—

"மிழலைக்கூற்றத்து நடுவிற்கூறு பராந்தகநல்லூர்ப் புதுக்குடியூரினரான சேனுவரையர்"(467 of 1929-30

"பராந்தகநல்லூர்ச் சேனுவரையர் ஆயின அழகப்பிரான் இடைக்கரையாழ்வான்" (458 of 1929 - 30)

என வழங்கப்பட்டா ரொருவர், மேற்குறித்த குலசேகர பாண்டியனது 13-ம் ஆட்சியாண்டில் (கி. பி. 1280), ஷை ஆற்றூர்ச் சோமநாதசுவாமிக்குப் பஞ்சகவ்யப்புறமாக விலைக்குப்பெற்று உதவிய நிலத்தை, அப்பிரதேசத்து மகாசபையார் ஏற்றுக்கொண்டு இறையிலிசெய்தசெய்தி தெரியவருகின்றது. இச்சேனுவரையரும் மேற்கூறிய ஆற்றூர்ச்சேனுவரையரும் ஒருவராகவே கருதற்குக் காலம் இடம் பெயர் முதலியன ஒற்றுமைப்படுகின்றன. இஃது உண்மையாயின், சேனுவரையரது முன்னோர் வாழ்ந்த ஊர் மிழலைக்கூற்றத்துப் பராந்தகநல்லூர் என்பதும், தம் முன்னோர்காலமுதலே கொற்கையையடுத்த ஆற்றூரிற் படைத்தலைவர்வழியினராகவும், இடம்பொருளேவல்களுடைய செல்வராகவும், அதனால் ஆற்றூர்ச் சேனுவரையர் என்றே வழங்கப்பட்டவராகவும், அழகப்பிரான் இடைக்கரையாழ்வான் என்ற இயற்பெயரினராகவும் 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பதும் விளங்குவனவாம். ஆசிரியர்மாணுக்கர் வழிமுறையாக முன்னோரிடமிருந்து தமக்குக்கிடைத்த நிலமனைகளைச்

1. M. E. R. 465 of 1929-30.

சிவாலயத்துக்கு இவர் உதவினர் [1] என்று சாஸனவிலாகா அறிக்கையிற் காணப்படுஞ்செய்தி ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாம். இதனால், இவர், பரம்பரையே புலமைவாய்ந்த குடும்பத்தினர் என்பதும், அப்புலமைத்திறம்பற்றித் தமக்கென்று முன்னோரிடமிருந்து கிடைத்த நிலமனைகளைச் சிவார்ப்பணஞ்செய்த பத்திமான் என்பதும் பெறப்படுவன. பாண்டிநாட்டின் தென்பகுதியில், தந்திரர் மகாதந்திரர் எனப்பட்ட படைத்தலைவர்களும் வீரர்களும் மிகுதியுங் குடியேறி நிலையாக வாழ்ந்துவந்தனர் என்பது, அப்பிரதேசத்தமைந்த சாஸனங்களால் அறியப்படுகின்றது [2]. இன்னோரைப் 'படைக்கானவர்' 'பெரும்படையார்' எனவும், இவர்கள்வாழும் இடங்களைப் "படைப்பற்று" எனவும் முன்னோர் வழங்கிவந்தனர். இவற்றால், சாஸனத்துக்கண்ட ஆற்றூர்ச் சேனாவரையர் செய்திகள் ஒருவாறு விளங்கின.

இனி, தொல்காப்பியச் சொல்லதிகார உரையாளரான சேனாவரையரை, மேற்கூறிய ஆற்றூர்ச் சேனாவரையராகச் சாஸனவறிஞர்கருதுமாறு கொள்ளுதற்கு நேரான பிரமாணமொன்றுங் கிடைத்திலதேனும் அடியில்வருஞ் செய்தி அதனை ஆதரிப்பதாயிருத்தல் குறிப்பிடற்பாலது.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்துப் பெயரியலில், பாலறியவரும் உயர்திணைப்பெயர்கள் இன்னவென்பதுகூறும் 10-ம் சூத்திரத்துள்—"பெண்மையடுத்த மகனென் கிளவியும்" என்பதன் விசேடவுரையாக—

1. "The land is said to have been acquired by the donor's ancestors and descended to him in succession from preceptor to disciple"— (M. E. R. 1928-9, p. 78.)

2. M. E. R. 1917, p. 112.

"புறத்துப்போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்பாலாரைப் 'பெண்மகன்' என்று வழங்குப" என்று இளம்பூரணரும், "விளையாடுபருவத்துப் பெண்மகளைப் பெண்மகன் என்றல் பண்டையோர்வழக்கு" என்று தெய்வச் சிலையாரும் எழுதிச்செல்லச் சேனாவரையரோ—

"புறத்துப்போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாரோக்கத்தார் இக்காலத்தும் பெண்மகன் என்று வழங்குப."

என்று, பயிலுமிடங் குறிப்பிட்டுக் கூறுகின்றார். மாரோக்கம் என்பது கொற்கைசூழ்ந்த நாட்டுக்கு வழங்கும் பெயராம் என்பர். [1] "மாரோக்கத்தார் இக்காலத்தும் வழங்குப" என்ற சேனாவரையர் கூற்றால், அவ்வழக்கு அந்நாட்டுப் பயிற்சியைத் தாம் நேரிலறிந்து அது தொல்காப்பியர் காலவழக்குடன் ஒற்றுமைப்படும் அரிய செய்தியை எழுதுகின்றார் என்பதும், அந்நாட்டுப் பயிற்சி அவர்க்கு நன்கமைந்திருந்த தென்பதும் தெளிவாவன. அன்றியும், சொல்லதிகார எச்சவியலில், திசைச்சொற்கிளவிக்கு ஏனை யுரையாசிரியரெல்லாம்—குடம் பூழி வடுகு சிங்கள முதலிய பிறநாட்டு வழக்கான சொற்களைத் தாம் அறிந்தவாறு உதாரணங்காட்டச் சேனாவரையரோ அவ்வாறன்றி—

1. இக்குறிப்பு, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களது சொல்லதிகாரப் பதிப்புக்களிற் கண்டது. இதற்குப் பிரமாணம் இன்னதென்பது தெரியவில்லை. சாஸனங்கள், கொற்கைசூழ்ந்த நாட்டைக் 'குடநாடு' என்று கூறுகின்றன. மேற்குநாடு என்ற பொருளில் அப்பெயர் வழங்கிய தென்பது பொருத்தமாகாமையால், வளைந்த கடற்கரையுள்ள நாடு என்ற கருத்தில் அங்ஙனம் வழங்கியது போலும். குடவென்பது தடவென்பதுபோல வளைவை யுணர்த்துவதோர் இடைச்சொல் (திருமுரு. 229, உரை). மாரோகம் எனவும் பாடம்.

"தென்பாண்டி நாட்டார் ஆ எருமை என்பவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழங்குப"

என்று கூறுவர். இவ்வாறு, ஏனையவற்றை விடுத்துத் தென் பாண்டிவழக்கொன்றனையே உதாரணந்தந்து செல்லுத லாலும் அந்நாட்டுப் பயிற்சி நன்குடையார் சேனாவரையர் என்பது பெறப்படுகின்றது. எனவே, மாறோகமாகிய கொற் கைப் பிரதேசத்து ஆற்றூரில் வாழ்ந்தவராகச் சாஸனங் கூறும் சேனாவரையரைத் தொல்காப்பிய உரையாசிரியராகக் கருதற்குச் சேனாவரையத்திற் குறிப்புக்களுண்மை தெரிய லாம். இதற்கேற்ப, அவ்வாற்றூர்ச் சேனாவரையரைப் புலமை வாய்ந்த பரம்பரையைச் சார்ந்தவர் என்று சாஸனங் கூறு வதாக அத்துறையாளரது அறிக்கையிற் கண்ட செய்தி, மேற்கூறிய கருத்தை வற்புறுத்துவதாதல் குறிப்பிடத் தக்கது.

ஆசிரியர் சேனாவரையரது அரிய உரைக்கருத்துக்கள் பலவற்றுள் ஒன்றனையும் நேமிநாதமுடையாரும் நன்னூ லாரும் ஏற்றுளாமல் உரையாசிரியர் கருத்துக்களையே பெரி துந் தழுவிச்செல்வதாலும், அவ்விருவர் கொள்கைகளையும் சேனாவரையர் மறுத்து உரைகூறுதலாலும் குணவீரபண் டிதர்பவணந்தி யிருவர்க்கும் இவர் பிற்பட்டவர் என்றே கொள்ளற்பாலது. அவ் விலக்கண நூலாசிரியர் இருவரும் மூன்றாங்குலோத்துங்கசோழன்காலத்து வாழ்ந்தவர் என்பது மேலே விளக்கப்பட்டமையின், அச்சோழனது ஆட்சியிறு தியான 13-ம் நூற்றாண்டுத் தொடக்கத்துக்கும், சேனாவரை யர் வாழ்ந்த அந்நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் அதிககாலம் இடையீடில்லை என்பது அறியத்தகும்.

இவற்றால், இற்றைக்கு அறுநூறு ஆண்டுகட்குமுன்பு விளங்கியவரே, வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்தவர் என்

றும் திட்பநுட்பங் கொண்ட பேரறிவாளர் என்றும் அறிஞர் களாற் புகழப்படும் சேனவரையர் என்பதும், அவரது பிற வரலாறுகளும் சாஸனவாயிலாக அறியப்படுதல் காண்க.

## 46 பரிமேலழகியார்.

சேனவரையர்போல, நச்சினார்க்கினியர் முதலிய உரை காரர்களைப் பற்றிச் சாஸனவழியால் அறிய இடமில்லை யேனும், திருக்குறட்குச் சீரிய உரையிட்ட பரிமேலழகரைக் குறித்து அவ்வழியாற் குறிப்பிடத்தக்கதொன்று உண்டு. "ஈசனதருளால் உய்த்துணர்வுடையவோர் உண்மையாளன்"[1] என்று சிறப்பிக்கப்படும் இவ்வுரையாளர், காஞ்சீபுர நகரினர் என்பர். அந்நகர் உலகளந்த பெருமாள்கோயில் அருச்சகர் மரபினர் இவர் என்ற கன்னபரம்பரையுமுண்டு. இவற்றை—

"திருக்காஞ்சிவாழ் பரிமேலழகன்" (தொண். சத.)

"நீணிலங் கடந்தோன் தாள்தொழு மரபிற்
பரிமே லழகன்" (பரிபாடற் பாயிரம்)

என்ற முன்னோர் கூற்றுக்கள் ஆதரிப்பனவாம். இப்பரிமேலழகர் வைஷ்ணவமரபினர் என்பதனை அவருரையாலுங் கற்றூர் நன்கறிவர்.[2] திருக்குறட் காமத்துப்பால் அவதாரிகையுள்—

"இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் 'சுவை பல வென்று கூறுவார் கூறுக: யாங்கூறுவது இன்பச்சுவை யொன்றனை யுமே' என இதனையே மிகுத்துக் கூறினன்"

1. இதன்விரிவை, யான் பல்லாண்டுகட்குமுன் பதிப்பித்த திருக்குறட் (கையடக்கப்) பதிப்பின் முகவுரையுள், பரிமேலழகர் வரலாற்றிற் கண்டுகொள்க.

2. திருக்குறள், உரைப்பாயிரம் (எட்டுப்பிரதி).

என எழுதிச் செல்லுகின்றார். இது, சிருங்காரப் பிரகாசம் என்ற பெயரால் அப்போஜராஜன் இயற்றிய அரிய பெரிய வடநூலுள்—[1]

"ஆம்நாவிஷு தசரஸாந் ஸுதியோ வயந்து
ஸ்ருங்கார மேவ ரஸநாத் ரஸநாமநாம"

எனவரும் முதற்பிரகாசத்து 6-ம் சுலோகத்தின் மொழி பெயர்ப்பு என்று தெரியவருகின்றது. இப்போஜன், வடக்கே தாராநகரத்தைத் தலைநகராகக்கொண்டு, 11-ம் நூற்றாண்டில் ஆண்ட அரசனென்பது பிரசித்தமாம். ஆகவே, அவனது நூற்பொருளை எடுத்தாண்ட பரிமேலழகர் அவன்காலத்துக்குப்பின்பு வாழ்ந்தவர் என்பது பெறப்படும். இனி, அறு நூறாண்டுக்கு முன்னர் விளங்கிய உமாபதிசிவாசாரியர் வாக்காக—

"வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்"

என்ற வெண்பாவொன்று வழங்குவதாம். இஃது அச்சிவாசாரியர் பாடியதேயாயின், அவர்க்கு முற்பட வாழ்ந்தவர் பரிமேலழகர் என்பது தெளியப்படும். அச்சிவாசாரியர் கி. பி. 1313-ல் தம் சங்கற்பநிராகரண நூலைச் செய்தவர் என்பது

1. அரிதாகக் கிடைத்த இப்பெருநூலின் பிரதி, சென்னை அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையுட் சேமிக்கப்பெற்றுள்ளது. இதன் முற்பகுதியை, திருநாராயணபுரம் ஸ்ரீ எதிராஜமடாதிபதியான ஜீயர்ஸ்வாமிகள் ஆராய்ந்து வெளியிட்டுளார்கள். இதற்கு, காலஞ்சென்ற ஸ்ரீ. ரங்கஸ்வாமிஸரஸ்வதி அவர்கள், B. A. எழுதிய ஆங்கிலமுகவுரை உண்டு.

முன்னரே விளக்கப்பட்டது.[1] ஆகவே, 11-ம் நூற்றாண்டு க்கும் 14-ம் நூற்றாண்டுத் தொடக்கத்துக்கும் இடைப்பட்ட காலமொன்றே பரிமேலழகர்க்குரியது என்பது பெறலாகும். இனி, அவ்விடைக்காலத்துட் பரிமேலழகர் வாழ்ந்த காலமின்னதெனச் சாஸனமொன்று குறிப்பிடுதலைக் கூறுவேன்.

பல்லவவமிசத்தவனும், 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சிபுரிந்தவனுமான விஜயகண்ட கோபாலனது 27-ம் ஆட்சியாண்டில் (கி. பி. 1272-ல்) காஞ்சீபுரம் ஸ்ரீ வரதாராஜர் என வழங்கும் அருளாளப்பெருமாள் கோயிலில் உள்ள சாஸனமொன்றனுள்—[2]

"ஆமூர் நீலகங்கரையர் என்ற சிற்றரசரொருவர் வண்டுவரைப் பெருமாளான பரிமேலழகியபெருமாள் தாதருடைய நந்தவனமொன்றை விலைக்குப்பெற்று அதனை— "ஜயங்கொண்ட சோழமண்டலத்து நகரம் காஞ்சீபுரத்துத் திருவத்தியூர் அருளாளப்பெருமாளு"க்குத் திருமாலைப்புறமாக அளித்தனர்—என்று கூறப்பட்டுள்ளது.

'திருக்காஞ்சி வாழ்'பவன் என்றும் 'நீணிலங்கடந்தோன் தாள்தொழுமரபினன்' என்றும் கூறப்படுதற்கேற்ப, அக் கச்சிநகர் அருளாளர்கோயிலில் இச்சாஸனம் வரையப்பட்டிருத்தலையும், மேற்கூறியபடி உமாபதிசிவாசாரியர்க்கு முற்பட்டிருத்தலையும் நோக்கும்போது, பரிமேலழகியபெருமாள்தாதர் எனப்படுவார், திருக்குறள் பரிபாடல்களின் உரைகாரர் தாமோ என்ற ஐயந் தோற்றுகின்றது.[3] அவ்விருவரும் ஒருவ

1. இந்நூல் 81-ம் பக்கம் பார்க்க.

2. S. I. I. iv, p. 291; M. E. R. 41 of 1893

3. சாஸனவாராய்ச்சி வல்லாரான ஸ்ரீ. கே. வி. சுப்பிரமணிய ஐயரவர்களும், காஞ்சீபுரக்கல்லெழுத்திற் கண்ட பரிமேலழகியா

ரேயாயின், வண்டுவரைப்பெருமாள் என்பது இவ்வுரையாளரியற்பெயரும், பரிமேலழகியபெருமாள்தாதர் என்பது தாஸ்யநாமமும் ஆகும்.[1] அஷ்டப்பிரபந்த வாசிரியரான ஐயங்காருக்குப் பிள்ளைப்பெருமாள் என்பது இயற்பெயரும் அழகியமணவாளதாதர் என்பது தாஸ்யநாமமும் ஆதல்போல இதனைக் கொள்க. பரிமேலழகியன் என்பது, குதிரைநம்பிரான்மேல் அலங்காரத்திருக்கோலங்கொண்டருளியவர் என்ற பொருளதாய்க் கச்சி அருளாளப்பெருமாளைக் குறிப்பதாம். அக் காஞ்சீபுர சாஸனமொன்றில் ஆனமேலழகியான்,[2] வளைபமழகியான் எனவருதலும் ஒப்பிடத்தகும். சித்திராபௌர்ணிமை முதலிய திருவிழாக்காலங்களில் அப்பெருமான் பரிமேலழகியாராகவும் ஆனைமேலழகியாராகவும் காட்சிதருந் திருக்கோலம் இன்றும் தரிசிக்கத்தக்கது.

இப் பரிமேலழகியபெருமாள்தாதர் புலமைவாய்ந்தவர் என்பதற்குச் சாஸனக் குறிப்பில்லையேனும், காலம் இடம் மதமுதலியன பெரிதும் ஒன்றுதலின் திருக்குறளுரையாளராக அவரைக் கருதப் பொருத்தமுளது. இக்கருத்து ஏற்

---

றைத் திருக்குறளுரைகாரராகவே கொள்ளப் பொருத்தமுண்டு என்று எழுதியுள்ளமை அறியத்தக்கது(கொங்குமலர், தொ-2, பக். 244-5.).

1. வைஷ்ணவர்கள், இன்றுபோலவே பண்டும் தம் இயற்பெயரோடு தாஸ்யநாமமுந் தரித்தவர்கள். பெரும்பூதூர்த்தாதர் (M. E. R. 41 of 1893), அரட்டமுக்கிதாதன் (327 of 1921), இடவைத் திருவரங்கதாசர் (S. I. I. iv, 140) என வைஷ்ணவப் பிராமணர்கட்கு வழங்கிய பெயர்கள் காண்க.

2. S.I.I. iv, 290-3—எடுத்தகை யழகியான், பின்பழகியான் (31, 34 of 1920), சிரம்பவழகியான் (121 of 1916) முதலிய கடவுட்பெயர்கள் மக்கட்கு வழங்கியிருத்தல் ஈண்டு ஒப்பிடத்தக்கது. வளையம்-திரட்சியும் வளைவுமுடையதாகக் கட்டப்படுந் திருமாலை.

புடையதாயின், பரிமேலழகர் கி. பி. 1272-லும், சேனாவரையர் 1276-லும் வாழ்ந்தவர் என்பது பெறப்படுதலின், அவ்விருவரும் சமகாலத்தவர் என்று சொல்லலாகும். பரிமேலழகருரையுட் கண்ட இலக்கணக்குறிப்புக்கள் சில, இளம்பூரணர் கருத்தைத் தழுவாது சேனாவரையர் கொள்கைகளையே தழுவியும், அவர் காணாதுவிட்ட உதாரணத்தைக் கண்டெழுதியுஞ் செல்லுதலால்[1], சேனாவரையத்தை நன்கறிந்தவர் இப்பரிமேலழகர் என்றே தோற்றுகின்றார். அதனால், இவர் சேனாவரையர்க்கு ஆண்டில் இளையராயிருந்தவர் போலும் என்று கருத இடமுண்டு.

---

## 47 தாயினல்லபெருமாள் முனையதரையன்.



சிதம்பரம் தெற்குக்கோபுரத்தெதிரில் உள்ள நந்திமண்டபத்தே வரையப்பட்ட சாஸனமொன்று, ஆறுபாடல்கள் உடையதாக அமைந்துளதாம்.[2] அவற்றுள் ஐந்துசெய்யுட்கள், பாண்டியன்பொருட்டுச் சோழனுடன் தில்லைப்பக்கத்துப் போர்புரிந்த "பனைசையாறுடையான்? முனையன் ஆதித்

---

1. "வாளேக்கிவாழுங்குடி" (குறள், 542) என்பதற்குச் சேனாவரையத்தைத் (93) தழுவியும், "ஆக்கமுங்கேடும்" என்ற குறளுரையில் (642), 'செய்யுளாகலிற் சுட்டுப்பெயர் முன்வந்தது' என்று காட்டி, 'செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக் கண்டுகொள்க' என்று சேனாவரையர் காட்டாதுவிட்ட உதாரணத்தை விளக்கியும், சொல்லெச்சத்துக்கு உரையாசிரியர் கொள்கையைக் கொள்ளாது சேனாவரையர் கருத்தைத் தழுவியும் (சொல். 441; குறள், 10, 37) செல்லுதல் காண்க. இவ்வாறே வேறுசிலவும் உள.

2. M. E. R. 329 of 1913.

தன் வல்லையன்''[1] என்ற படைத்தலைவனது வெற்றித்திறத்தைப்பற்றிப் புகழ்வன. இவைபாடிய புலவர், புவனேகவீரத் தோண்டைமானான தாயினல்ல பெருமாள் முனையதரையன் என்பார் என்று அச்சாஸனங் கூறுகின்றது. 'புவனேக வீரன்' என்ற சிறப்புப்பெயர், மாறவர்மன் விக்கிரம பாண்டியனுக்குப்(பட்டம். 1283) பெருவழக்காகும்.[2] "ஸமஸ்த புவனேகவீர'' என்று இவன் பிரசஸ்தி தொடங்குகின்றது.

> "சீர்கொண்ட வெள்ளாறு குருதிப் பெருக்கிற்
> செவ்வாறு பட்டோட வவ்வாறு சென்றப்
> போர்வென் றுணப்பேய் நடங்கண்ட தற்பின்
> புலியூர் நடங்கண்ட புவனேக வீரா!'' (S.I.I. iv, No.228)

என்று கல்லெழுத்தான பாட்டொன்றும் இப்பெயரைக் கூறும். இந்நாமத்தைச் சாஸனப்பாடல்கள் பாடிய தாயினல்லபெருமாள் சரித்திருத்தலின், இவர் அவ்விக்கிரமபாண்டியன் காலத்தவர் என்றும், அப்பாண்டியன் படைத்தலைவனே இவராற் புகழப்பட்டவ னென்றும் கருதக்கூடியன. முனையதரையன், தொண்டைமான் என்ற பட்டங்கொண்டிருத்தலால், இவர் புலமைவாய்ந்த தலைவராகத் தோற்றுகின்றார். தாயினுநல்ல சோளீசுரமுடையார் என்பது, சேலம்ஜில்லா ஆறகளூர் (ஆறகழூர்)ச் சிவபிரான் திருநாமமாகும்.[3] மூன்றாங் குலோத்துங்கன் காலத்தும் தாயினுநல்லபெருமாள்[4] என்ற தலைவனொருவன் அப்பக்கத்தவனாகக் காணப்படுகின்றான். இவற்றை நோக்கின், இப்புலவரும் அப்பிரதேசத்தவர் என்று கருதலாகும்.

---

1. 'வல்லியன்' என்றும் படிக்கப்பட்டுளது (329 of 1913).
2. M. E. R. 122 of 1896; 93 of 1914.
3. I. M. P. Sm. Nos. 27, 47. 4. Ibid. Sm. 56, 63

## 48 பெரும்பற்றப்புலியூர் நம்பி.



இப்பெயர்பெற்ற புலவர், திருவாலவாயுடையார் திருவிளையாடலை இயற்றியவர் என்பதும், வேப்பத்தூர்ச் சோழியப்பிராமணவகுப்பினர் என்பதும், பிறவும் அந்நூற்பதிப்பின் முகவுரையுள் மகாமகோபாத்தியாய - ஐயரவர்கள் எழுதிய ஆசிரியர் வரலாற்றால் தெரியவருகின்றன. இந்நூலாசிரியரான நம்பியைப்பற்றிய குறிப்பு, சாஸனத்தாலும் சிறிது அறியப்படுவதாம். இராமநாதபுரம் ஜில்லா, திருப்புத்தூர்ச் சிவாலயத்தின் தெற்குத் திருமதிலிற்கண்ட சிலாலிகிதமொன்று,[1] மாறவர்மன் குலசேகரபாண்டியனது (பட்.1267) 36-ம் ஆட்சியாண்டில் அமைந்ததாக உள்ளது. இதனுள் மேற்குறித்த கோயில்அருச்சகர்களால் பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பார்க்கு நிலங்கள் சில அளிக்கப்பட்ட செய்தி காணப்படுகின்றது. இங்ஙனம் உதவப்பெற்றவர், திருவிளையாடற்புராணவாசிரியரோ வேறுபிறரோ என்பது தெளிவுபடவில்லை. ஆயினும், கோயிற்றலத்தாரும் அதிகாரிகளும் புலவர்க்கு அவர் பாடல்பெறும்பொருட்டு நிலமுதவிவந்தனர் என்பது சாஸனங்கள் பலவற்றால் அறியப்படுகின்றமையின், அம்முறையில் மேற்கூறிய அருச்சகர்களால் உதவப்பெற்றவர் திருவிளையாட லாசிரியரான பெரும்பற்றப்புலியூர்நம்பி போலும் என்று கருத இடமுண்டு. ஆனந்ததாண்டவ நம்பி என்பார் இவ்வாசிரியரின் மரபினர்[2] என்றும் அந்நம்பியின் மனைவி சக ௵ 1150 (கி. பி. 1227)ல் மதுரை ஸ்ரீ மீனாட்சிசந்நிதி மூன்றுநிலைக் கோபுரம் கட்டிவைத்தவள்[3]

---

1. M. E. R. 133 of 1908.
2. திருவாலவாயுடையார் புராணம் முகவுரை, பக். 19.
3. மதுரைத் திருப்பணிமாலை.

என்றும் சொல்லப்படுகின்றன. இதுகொண்டு நோக்கின், பெரும்பற்றப்புலியூர் நம்பிக்கு ஆனந்தத்தாண்டவ நம்பி காலத்தால் நெருங்கிய முன்னோராதல் வேண்டும். திருவாலவாயுடையார் திருவிளையாடல், "கார்வளங்கொள் மண்டிலத்துக் கப்பிஞ்சி நாட்டுரைக்கப்" பட்டதென்று, அப்புராணப் பாயிரம் கூறும். கப்பிஞ்சிநாடு என்பது இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லாவைச் சார்ந்துள்ள மருங்காபுரிஜமீனின் பகுதி என்பர்[1]. இந்நாட்டுக்கும், பெரும்பற்றப்புலியூர் நம்பியின் சாஸனம் அமைந்துள்ள திருப்புத்தூர்ப் பிரதேசத்துக்கும் இடைப்பட்ட தூரம் பெரிதன்று என்பதும் அறியத்தகும்.

## 49 இரட்டையர்காலம்.

முடவருங் குருடருமாய் ஒருவர்க்கொருவர் உதவிய வண்ணம் தமிழ்நாடெங்குஞ் சஞ்சரித்துக்கொண்டு தங்கள் அரும்புலமையாற் பெரும்புகழ் பெற்றுவிளங்கிய இச்சகோதரப் புலவர்களைப் பற்றி அறியாதார் உண்டோ? இவர்கட்கு இளஞ்சூரியர் முதுசூரியா என்பன பெயர்கள் என்று தமிழ் நாவலர்சரிதை கூறும். இவர்கள் இயற்றிய நூல்கள்—திருவாமாத்தூர்க் கலம்பகம், ஏகாம்பரநாதருலா என்பன. இவர்களாற் பாடப்பெற்றனவாக வழங்கும் விடுகவிகள் பல. இவற்றுள், இவர்கள் பாடிய உலாவில்—

"வடித்தசுடர் வேற்சம்பன் வாழ்மல்லி நாதன்
கொடுத்த திருத்தேர்மேற் கொண்டு" (102)

1. இச்செய்தி, மகாவித்வான்: இராகவையங்கார் அவர்களால் தெரியவந்தது.

"செம்பதுமை கேள்வன் திருமல்லி நாதனுயர்
சம்புபதி நல்குர் தடந்தேர்மேல்" (146)

என்ற கண்ணிகளில், சம்புகுலத்தவனான திருமல்லிநாதன் என்ற அரசனால், கச்சி ஸ்ரீஏகாம்பரநாதர்க்குத் திருத்தேரொன்று சமைத்துதவப்பெற்ற செய்தி கூறப்பட்டிருத்தல் காணலாம். சம்பன் சம்புபதி என்பன, சம்புவராயர் எனச் சாஸனங்களிற் காணப்படும் தலைவரைக் குறிப்பனவாகும். சோழராதிக்கம் தென்னாட்டில் நிலைகுலைந்தகாலத்தில், அவர்கீழிருந்த இன்னோர் தாமே அரசராயினர் என்பது முன்னரே கூறப்பட்டது. இவ்வரசருள் இராஜநாராயணசம்புவராயன் என்பான் கி. பி. 1331—1383 - வரை ஆட்சிபுரிந்தவன். இவன்சாஸனங்கள் தொண்டைமண்டலத்தில்—திருக்கழுக்குன்றம், திருக்கச்சூர், கூவம், குடிமல்லூர் முதலிய ஊர்களில் உள்ளன. சம்புவராயர்களில் இவனே, மல்லிநாதன், திருமல்லிநாதன் என்றபெயர்களாற் சாஸனங்களினும் சிறப்பிக்கப்படுபவன் ஆவன்.[1] ஆகவே,'சம்பன் வாழ்மல்லிநாதன்' 'திருமல்லிநாத னுயர்சம்புபதி'' என இரட்டையராற் பாடப்பெற்ற தலைவன் மேற்கூறிய கல்லெழுத்துக்களிற் கூறப்பட்டவனே என்பதில் ஐயமில்லை. இனி, வில்லிபுத்தூராரை ஆதரித்துப் பாரதவிருத்தம் பாடுவித்தவனாக அந்நூற் பாயிரத்தால் அறியப்படுபவனும் 'மாகதக்கொங்கர் கோமான்' என்று அவ்வில்லியாற் சிறப்பிக்கப்படுபவனுமான திருவக்கை ஆட்கொண்டானை இவ்விரட்டையர்—"ஆட்கொண்டநாயன் தமிழ்க்கொங்கர்கோன்...வக்கைநகராதி"[2] எனப் பாடியிருத்தலின் அவ்வில்லிபுத்தூராரும் இரட்டையரும் சமகாலத்தவர்கள் என்பது பெறப்படுகின்றது. ஆகவே, சாஸனவழியால் இரட்டையர்காலம் தெளிவாதல் அறியத்தக்கது.

---

1. I.M.P. NA. 623; Cg. 1169. 2. தமிழ்நாவலர் சரிதை, 107.

# 50 அருணகிரிநாதர்.



தமிழ்நாட்டில் முருகக்கடவுள் கோயில்கொண்ட தலங்களையெல்லாம் தம் திருப்புகழ்க் கவிமணிகளால் இழைத்து அலங்கரித்த அருணகிரிநாதரின் பெருமைகளை அறியாதார் யாவர்? இவரது வரலாறுகளனைத்தையும் திருப்புகழ்ப்பதிப்பு முதலியவற்றில் தமிழறிஞர்கள் ஆராய்ந்து எழுதியிருக்கின்றனர். ஆயினும் என் ஆராய்ச்சியில் தெரியவந்த செய்திகள் சிலவும் இப்பெரியார் வரலாறறிதற்கு உதவியாம் என்று நம்புகின்றேன்.

அருணகிரிநாதர், பாரதவிருத்தம்பாடிய வில்லிபுத்தூரர் காலத்தவர் என்பது பெருவழக்காகவுள்ளது. அவ்வில்லிபுத்தூரர் 14-ம் நூற்றூண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த இரட்டையர்காலத்தவர் என்று மேலெழுதிய வரலாற்றுட் குறிப்பிட்டேன். ஆகவே, அவ்வில்லிபுத்தூரார்க்குரிய காலத்தையொட்டியே அருணகிரிநாதர் விளங்கியவர் என்பது பெறப்பட்டது.

அருணகிரியார் தங்காலத்து ஆட்சிபுரிந்த அரசரொருவரைப் பிரவுடதேவமகாராயர் என்ற பெயராற் சிறப்பித்திருத்தலைப் பலரும் அறிவர். அவ்வரசரைப் போலவே, தங்காலத்து விளங்கிய மடாதிபதி யொருவரையும் சோமநாதன் என்றபெயரால் இவர் சிறப்பிக்கின்றூர். அவை வருமாறு:—

"உதயதாம மார்பான ப்ரவுடதேவ மாராயர்
உளமுமாட வாழ்தேவர் பெருமாளே" (88).

"அரிவையொரு பாகமான அருணகிரி நாதர்பூசை
அடைவுதவ றாதுபேணும் அறிவாளன்
அமணர்குல காலனுகு மரியதவ ராசராசன்
அவனிபுகழ் சோமநாதன் மடமேவு...முருக" (828).

இவற்றுள், பிரவுடதேவர் என்ற பெயர் விஜயநகரவேந்தர் சிலர்க்கு வழங்குவதாயினும், 15-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அப்பெயர்பெற்று ஆட்சிபுரிந்தவரான இரண்டாந் தேவராயரே, மேற்கூறியபடி திருப்புகழாற் சிறப்பிக்கப் பெற்றவர் என்று கொள்வது பொருத்தமாகின்றது. இரட்டையர் வில்லிபுத்தூரர்களின் காலத்தவராகத்தெளிந்த அருணகிரியாராற் புகழ்தற்குரிய அரசர் அவரேயாவர் என்பது காலவொற்றுமையால் அறியப்படும். இக்காலத்தே, பழைய சோழவேந்தர்கீழ் மந்திரிகளாகவும் படைத்தலைவராகவும் வாழ்ந்த சம்புவராயர், தொண்டைநாடு சோணாடு முதலியவற்றுக்குத் தாமே தலைவராகி ஆண்டுவந்ததும், விஜயநகர ஏகாதிபத்தியம் தோன்றியதும் அவர் தலைமையொழிந்து சிற்றரசர்களாய் அன்னோர் ஒடுங்கியதும் சரித்திரமூலம் அறியப்பட்டவை. இக்காலம் 14, 15-ம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்டதாகும். இத்தகைய காலநிலைமையையே அருணகிரிநாதர் தம் கருவூர்த் திருப்புகழொன்றில்,

"சஞ்சல சரித பரநாட்டினர் மந்திரி குமரர் படையாட்சிகள்
சங்கட மகிபர் தொழவாக்கினை முடிசூடித்
தண்டிகை களிறு பரிமேற்றனி வெண்குடை நிழலி லுலவாக்
சம்ப்ரம விபவ சவுபாக்கிய முடையோராய்க் [கன
குஞ்சமும் விசிற விருமாப்பொடு பஞ்சணை மிசையி லிசையாத்
கொம்புகள் குழல்கள் வெகுவாத்திய மியல்கீதம் [திரள்
கொங்கணிமகளிர்பெருநாட்டியநன்றெனமன துமகிழ்பார்த்திபர்
கொண்டய னெழுதும் யமகோட்டியை யுணராரே" (932)

என மிகவழகாக எடுத்துரைத்தல் நோக்கத்தக்கது. இக்காலத்தை யொட்டி விளங்கியவரும், வைஷ்ணவப் பேராசிரியருமான ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை — "அராஜகமான தேசத்திலே வன்னியரடையத் தங்களிலே கைசெய்து மேழோலை

யிட்டு நாலுவாசலையும் பற்றுமாபோலே" என்று குறித்திருப்பது இக்காலநிகழ்ச்சியேயாதல் காண்க (பெரியதிருமொழி, 9, 4, 1, வ்யாக்). இனி, திருப்புகழ்நூல் புகழும் மடாதிபதியான சோமநாதரை நோக்குவோம். அருணகிரியார் அவதரித்ததும் அருள்பெற்றதும் திருப்புகழ்களை மிகுதியும் ஓதியதுமான இடம், திருவண்ணாமலைப் பிரதேசமேயாகும். இதனை—

"உரைபெற வகுத்தருணை நகரிலொரு பத்தனிடும்
ஒளிவளர் திருப்புகழ்" (திருவகுப்பு, 12)

"அருணையிற் சித்தித்தெனக்குத் திருவருள் பெருமாளே"
(திருப்பு. 500)

"முன்னருணைநாடதி லோது திருப்புகழ்" (890)

என்பன முதலியவற்றால் அறிக. "அமணர்குல காலனாகும் அரியதவ ராஜராஜன்" என்று இவராற் புகழப்படும் சோமநாதரும் அப்பக்கத்தவரே என்பது "அருணகிரிநாதர் பூசை அடைவுதவறாது பேணும் அறிவாளன்" என இவர் கூறுதலின்று தெரியலாம். இதற்கேற்ப, திருவண்ணாமலைப் பிரதேசத்தைச் சேர்ந்த புத்தூரில்[1] உள்ள சிவாலயத் திருமதிலிற் காணும் சாஸனமொன்று, சக-ஆ 1292 (கி. பி. 1370)ல் அரசரான வீரபொக்கண உடையாரால் சோமநாதஜீயர் என்ற பெரியாரொருவர்க்கு ஷெபுத்தூர்க் கோயிலும் மடமும் உரிமையாக உதவப்பட்டன என்று குறிப்பிடுதல்[2] அறியத்தக்கது. "இந்தத் திருக்கோயில் மாடாபத்யக் காணியாட்சியுடைய அம்மையப்பரான சோமநாத ஜீயர்க்கு" என்பது அச்சாஸனப்பகுதி. இதனால் அம்மையப்பரென்பதும் இச்சீயர் பெயரென்பது தெரியலாம். சிவாசாரியர்களாகவும் பிரபல வித்வான்களாகவும் விளங்கிய கௌடப் பிராமணர்களின்

1. இஃது இப்போது வடஆர்க்காடு ஜில்லா ஆரணித்தாலுகாவைச் சார்ந்துள்ளது. 2. M. E. R. 56 of 1900

வாழ்விடமும், முதற் பிரவுடதேவராயரால் பிரவுடதேவராய புரம் எனத் தம்பெயரிட்டு அவ்வந்தணர்க்குத் தானஞ் செய்யப்பட்டதுமான முல்லண்டிரமும்[1] தேவிகாபுரமும் இச்சாஸனமுள்ள புத்தூர்க்கு மிகஅடுத்துள்ள ஊர்களாம். அதனால் அவ்வூர்களில் வாழ்ந்த பிரபலரான சிவாசாரியர்களிலே[2] சாஸனங் கூறும் சோமநாதஜீயரும் ஒருவர் என்றும், அவ்வாசாரியர்களிடம் பரம்பரையே பிரதிபத்தியுள்ள விஜயநகர வேந்தரால் ஷெ புத்தூர்க் கோயிலும் மடமும் அவருட் சிறந்துவிளங்கிய சோமநாதரது மேற்பார்வையில் விடப்பட்டன என்றும் கொள்வது பொருத்தமாகும். இந்தச் சோமநாதஜீயரே அருணகிரியாரால் சிறப்பிக்கப்பட்ட மடாதிபதி என்பது, அவ்விருவர்க்கும் அமைந்துள்ள இடமும் காலமும் பெரிதும் இயைந்திருத்தலால் தெரியலாம். வீரபொக்கணரால் இச்சாஸனமளிக்கப்பட்ட மூன்றாண்டுகளுக்குப் பின்னர் இரட்டையரால் புகழப்பட்டவனாக மேற்கூறிய மல்லிநாதசம்புவராயன் வாழ்ந்திருந்தவன் என்பது மற்றொரு கல்லெழுத்தால்[3] அறியப்படுகின்றது. இதனால் அவ்விரட்டையர் காலமும் அருணகிரியார்க்கு முற்கூறியபடி இணங்குதல் காண்க. இனி, ஜீயர் என்பது வைஷ்ணவ சந்நியாசிகட்குச் சிறப்புப் பெயராக இன்றும் வழங்குதலை யாவரும் அறிவர். ஆனால் முற்காலத்தே இப்பெயர் சிவாசாரியரான பிராமணர்க்கும்

1. I. M. P. NA. No. 208.—'மூலாண்டம்' என்பது வடநூல் வழக்கு.

2 சோழர் பாண்டியர் முதலியோர்க்கும் ஆசாரியஸ்தானம் வகித்து விளங்கிய கோளகிமடம் பிக்ஷாவிருத்திமடங்களின் சந்தான குரவர்களிற் பலர், இவ்வூர்களில் வாழ்ந்த சிவாசாரியர்களே யாவர் (M. E. R. 1913, pp. 121-22.; pp. 83-4 of 1912).

3. I. M. P. NA. No. 11.

பயின்று வந்ததென்பது "கோளகிமடத்து ஜீயர்ஸந்தானம்"[1] புஷ்பகிரி ஜீயர், ஈசான ஜீயர்,[2] ஜீயர் விசுவேசுவர சிவா சாரியர்[3] என்ற சாஸனத்தொடர்களால் தெளிவாம்.

"திருந்திய குணத்தினு னிறைஞ்சிச் சீய என்று"

என மேருமந்தரபுராணத்து வருந் தொடருள் (638) பெரி யோன் என்ற பொருளில் இச்சொல் வழங்குதல் இங்கு அறி யத்தகும். சிவாசாரியரான சோமநாதருக்கும் அம்முறையில் ஜீயரென்ற பெயர் வழங்கியதென்க. இனி, 'சோமநாதன் மடம்' என்று அருணகிரிநாதர் கூறியது, மேற்கண்ட சாஸ னத்தின்படி கி. பி. 1370-ல் ஷெ ஜீயர்க்கு உரிமையான புத் தூர்மடமாகவே தோற்றுகின்றது. இவற்றால், அப்புத்தூர்ச் சாஸனங் கூறும் காலத்துக்கும் இரண்டாம் பிரவுடதேவரா யர் காலத்துக்கும் இடைப்பட்டதே—அஃதாவது 14-ஆம் நூற்றாண்டிறுதியும், 15-ஆம் நூற்றாண்டுத் தொடக்கமு மான காலமே — திருப்புகழாசிரியர்க்கும் உரியதென்பது மிகத்தெளிவாதல் கண்டுகொள்க. இவை நிற்க.

மேற்கூறிய முல்லண்டிரம் தேவிகாபுரங்களில் வாழ்ந்த பிரபல வித்துவான்களிலே, டிண்டிமகவி[4] என்ற சிறப்புப் பெயர்பெற்ற ஆசுகவிகள் சிலர் அக்காலத்து விளங்கினர் என்பது சாஸனங்களால் அறியப்படுகின்றது.[5] அவருள் நம் அருணகிரிநாதரும் ஒருவர் என்பது சரித்திர அறிஞர்சில

---

1. M. E. R. 364 of 1916. 2. S. I. I. vi, p. 193.

3. புதுக்கோட்டைச்சீமைச் சாஸனத்தொகுதி, பக். 111.

4. டிண்டிமம் என்ற வாத்தியத்தை முழக்கிக்கொண்டு ஆசுகவி பாடவல்லோர் என்பது பொருள். "அக்ரே டிண்டிம தாடநம் தத யிதோ வாதித்ய நிர்க்கோஷணம்" என்று தொடங்கும் சுலோக மொன்றும் இன்னோரைப் பற்றிக் கூறப்படுவதுண்டு.

5. M. E. R. Nos. 83-4 of 1912.

ரின்[1] கருத்தாகும். 15-ம் நூற்றாண்டில் சாளுவாப்யுதயம் என்ற வடமொழிக்காவியம் இயற்றிய ராஜநாதகவி என்பார் அந்நூலில் தம் தந்தையான அருணகிரிநாதரை 'ஸார்வ பௌம டிண்டிமகவி' என்றும் 'அஷ்டபாஷாபரமேசுவரர்' என்றும் சித்திரகவிப்பிரபந்தம் இயற்றுவதிற் சிறந்தவர் என்றும் சேரசோழ பாண்டியர்களால் பிரதமாராத்யராகப்போற்றப் படுபவர் என்றும் சிறப்பித்துக் கூறுகின்றார். இவ்வாறே வேறு வடநூல் சிலவும் கூறுவன. இங்ஙனம் புகழப்படும் அருணகிரிநாதர் நம் திருப்புகழாசிரியரே ஆதல் வேண்டுமென்று காலம் இடம் முதலியவற்றின் ஒற்றுமைபற்றி அன்னோர் கருதுவர். இக்கருத்துக் கேற்ப—

"ஆசுசேர் பெருங்கவி சண்டவாயு
அதிமதுர ராஜனென் வெண்குடை
விருதுகொடி தாளமேள தண்டிகை
வரிசையொ டுலாவுமா வகந்தை தவிர்ந்திடாதோ" (181)

"குறித்தநற் றிருப்புகழ் ப்ரபுத்துவக் குருத்துவத்
தெனைப்பணித் தருள்வோனே" (958)

என்பன முதலியவற்றால், சார்வபௌம திண்டிமகவி[1] இவரென்பதும்,

"அறிவுமறி தத்துவமு மபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதில் அறிவித்த வேதியனும்"
(புயவகுப்பு, 12)

"சித்ர கவித்துவ சத்தமிகுத்த திருப்புகழ்" (384)

---

1. ஸ்ரீமாந். து. அ. கோபிநாதராயர் முதலியோர்.

2. வில்லிபுத்தூரரும் "மண்மிசை உயர்புகழ் நிறுத்தித் தீர காகளம்" பெற்றவரென்றும், "வில்லிபுத்தூ ரிறைவனுஞ் சார்வ பௌமன்" என்றும் கூறப்படுதல் இங்கு ஒப்பிடத்தகும் (பாரதம். பாயி).

என்பவற்றால், கலைகள் பலவற்றிலும் சித்திரகவியிலும் வல்லவரென்பதும்,

"ஆபாதனேன் மிகப்ரசித்தி பெற்றினி துலகேழும்
யானுக நாம அற்புதத் திருப்புகழ்
தேனூற வோதி யெத்திசைப் புறத்தினும்
ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும்" (1132)

"பச்சிம தெட்சிண உத்தர திக்குள
பத்தர்க ளற்புத மெனவோதும்...திருப்புகழை" (384.)

என்பவற்றால், மூவேந்தர்நாட்டினும் முதன்மை வாய்ந்த கவியாக மதிக்கப்பட்டவர் என்பதும் விளங்குவதால் மேலே கூறிய அறிஞரின்முடிவு பெரிதும் பொருந்துவதாகின்றது. வடநூற்கடலில் முழுகி ஆனந்தித்தவர் திருப்புகழாசிரியர் என்பதனை, எண்ணிறந்த இடங்களில் வழங்கும் அவரது அரியபெரிய வடமொழிப் பதங்களாலும் தொடர்களாலும் வழக்குக்களாலும் அறியலாம்.

இனி, திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமி ழாசிரியரும் முருகக்கடவுள்பத்தியிற் சிறந்த முன்னோருள் ஒருவருமாகிய பகழிக்கூத்தர் என்ற புலவர்,[1] தங்காலத்தே அக் கடவுளருளாற்பெற்ற திண்டிமவாத்தியத்தைத் தம் பெருங்கவிப் புலமைக்குறியாக முழக்கிக்கொண்டு சிறிய கவிஞர்சிலர் திருச்செந்தூர்க்கடவுள் திருமுன்பு மங்கலக்கவி பாடிவந்ததை—

"பண்டரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன
படி திண்டிம முழக்க" (சப்பாணி, 2).

1. "பகழிக்கூத்தர்" என்ற தலைப்பின்கீழ் யானெழுதிய இப் புலவர்வரலாறு காண்க (செந்தமிழ்த் தொகுதி, 6, பகுதி, 6).

"பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்து திண்டிம முழக்க" (சிறுபறை, 4).

என்ற பாடலடிகளாற் குறித்திருத்தலைக் காணலாம். இவற்றால் திண்டிமவாத்தியம், ஆசுகவி பாடவல்ல புலவரால் தம் புலமைக்குறியாகக் கொள்ளப்பட்டதொன்று என்பதும், அதனை அக்கவிபாடாநின்றே ஒலிப்பிப்பது அவர்தம் வழக்கமென்பதும் அறியப்படும். 'பண்தரு பெருங்கவி' என்றதனால் ஓசையின்பமும் நீட்சியுமுடைய சந்தக்கவிகளாக அவற்றைக் கொள்ளல் பொருந்தும். அத்தகைய திண்டிமகவியாகப் பகழிக்கூத்தராற் சிறப்பிக்கப் பெற்றோர், நம் அருணகிரிநாதரே எனலாம்.

இனி, ஷை முல்லண்டிரத்தில் உள்ள சிவாலயத்தின் தெற்குத் திருமதிலில் அமைந்த சாஸனமொன்றில் சகாப்தம் 1472 (கி. பி. 1550)ல், பார்ப்பனமாதொருத்தி தன் புண்ணியமாகவும் தன்கணவர் குமாரதிண்டிமர் என்பார் புண்ணியமாகவும் அச்சிவாலயத்துள் அண்ணாமலைநாதர்க்குச் சந்நிதியொன்று கட்டி அதற்குப் பூமியுந் தானஞ் செய்த செய்தி கூறப்பட்டுள்ளது.[1] இம்மாது, திண்டிமகவியான அண்ணாமலைநாதரின் வழியினள் என்று கூறப்படுகின்றாள். இவ்வாறு பெரியகோயிலுள் அமைந்த இச் சிறுசந்நிதி, தன் முன்னோரான அவ்வண்ணாமலைநாதரை வழிபட அப்பெண்ணால் நிருமிக்கப்பட்டதென்றும், அங்ஙனம் வழிபடப்பட்டவர் திருப்புகழாசிரியரே ஆகவேண்டும் என்றும், அப்பெரியார் வரகவியாய்த் தெய்வத்தன்மை யடைந்தவராதலின், ஏனையிடங்களிற் கோயிலெடுத்துப் பின்னோர் வணங்கியவாறே, அவரூரான முல்லண்டிரம் பெரியகோயிலுள் அவர் வமிசத்தவளொருத்தி அவர்க்குச் சந்நிதிகட்டித் தருமஞ்

1. I. M. P. NA. No. 209.

செய்தனள் என்றும் கருதப்படுகின்றன.[1] இவை ஏற்றுக் கொள்ளப்படின், அருணகிரிநாதர்க்கு அண்ணாமலை நாதர் என்ற பெயர்வழக்கும் உண்டென்றும், அவரூர் முல்லண்டிரமே என்றும் கொள்ள இடமுண்டு. இவற்றினுண்மை அறிஞர் ஆராய்ச்சிக்குரியது.

---

## 51 அரிகேசரி பராக்கிரமபாண்டியன்.



சோழவேகாதிபத்தியம் சிதறுண்டபின் பாண்டியர்கள் வலிபெருகி, 13-ம் நூற்றாண்டினும் 14-ம் நூற்றாண்டின் முற்பகுதியினும் தங்களாட்சியைத் தமிழ்நாடு முழுதும் பரப்பலாயினர். இக்காலத்தில் வடக்கே விஜயநகரஏகாதிபத்தியம் தலையெடுத்தோங்கினமையால், பாண்டியரதாற்றல் 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே குன்றியது. குன்றவும், டில்லியரசரின் தளகர்த்தன் மாலிகாபர் படையெடுப்பில் மதுரைச்சீமை கைப்பற்றப்பட்டு 70-ஆண்டுகள்வரை துலுக்கராட்சியில் அமைந்ததும், விஜயநகரவேந்தரின் தளபதி கம்பணவுடையார், அவ்வரசாங்கத்தை யொழித்தற்குத் தென்னாட்டிற் படையெடுத்து அன்னாரை அடியோடு ஓட்டி மதுரைச்சீமையை (1364 ல்) நன்னிலைமையில் நிறுவியதும், பாண்டியரது வலியின்மைகண்டு அச்சீமையை விஜயநகர அரசாங்கத்தார் மாவலிவாணர் என்ற தலைவராட்சியில்

---

1. இங்ஙனம் கருதியோர், ஸ்ரீ. C. V. நாராயணையர் அவர்கள் M. A. "திண்டிமகவிகளும் திருப்புகழ் அருணகிரிநாதரும்" என்ற தலைப்பெயரின்கீழ் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ள கட்டுரை காண்க (Dr. S. K. Aiyangar's Commemoration Volume, pp. 176-183.).

அமைத்துத் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கைக்கொண்டதும் சரித்திரமூலம் அறியப்பட்டவை.[1] அதனால் பாண்டியமரபினரா யிருந்தோர், அம்மதுரைச்சீமையை விட்டுவிலகித் திருநெல்வேலிப்பிரதேசத்தைத் தமக்குரிமையாகக்கொண்டு ஆண்டு வரலாயினர். இவ்வரசருள் முன்னோன், அரிகேசரி பராக்கிரமபாண்டியன் (கி. பி. 1422-62) என்பான். இவனே, தென்காசிநகரை அமைத்து ஆங்கு ஸ்ரீவிசுவநாதர்க்குப் பெரிய கோயிலெடுத்து, அந்நகரையே தன் இராஜதானியாகக் கொண்டு ஆட்சிபுரிந்தவன். "பூமிசைவனிதை"[2] என்று தொடங்கும் இப்பாண்டியனது மெய்க்கீர்த்தியால், மேற்கூறிய செய்திகளும், இவன் போர்வெற்றிகளும், பிற அறச்செயல்களும் நன்குவிளங்குவன. இவன் 1446-ல் கட்டத்தொடங்கிய விசுவநாதராலயத்தை முடித்தற்கு 17-ஆண்டுகள் சென்றன என்றும், இவன் தொடங்கிய அவ்ஆலய கோபுரத்தின் மேனிலைகள் இவன்காலத்தே முற்றுப்பெறவில்லை யென்றுந் தெரிகின்றன. இக்கோபுரநிலைக்கற்களில், இவனது அவ்வரியசெயலையும் பிறஉயர்குணங்களையும்பற்றி வரையப்பட்ட பாடல்கள் இனிமையும் உருக்கமும் உடையவை. இப்பராக்கிரம பாண்டியனே பாடியனவாகக் காணப்படும் கட்டளைக்கலித்துறைகளும் அவற்றுள் அமைந்துள்ளன.[3] அவை வருமாறு:—

"சேலே றியவயற் றென்காசி யாலயந் தெய்வச்செய
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்னம்
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்ரம பாண்டியனே.

1. The Pandyan kingdom, pp. 242-47.
2. பெருந்தொகை, 938.
3. T. A. S. Vol. i, pp. 95 - 101.

மனத்தால் வகுக்கவு மெட்டாத கோயில் வகுக்கமுன்னின்
றெனைத்தான் பணிகொண்ட நாதன்றென் காசியை யென்று
நினைத்தா தரஞ்செய்து தங்காவல் பூண்ட நிருபர்பதம்[மண்மேல்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தலைமீ தியானுந் தரித்தனனே.

பூந்தண் பொழில்புடை சூழுந்தென் காசியைப் பூதலத்தில்
தாந்தங் கிளையுட னேபுரப் பார்கள்செந் தாமரையாள்
காந்தன் பராக்ரமக் கைதவன் மான கவசன்கொற்கை
வேந்தன் பணிபவ ராகியெந் நாளும் விளங்குவரே.

ஆரா யினுமிந்தத் தென்காசி மேவும்பொன் னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா றறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே.

அரிகே சரிமன் பராக்ரம மாற னரனருளால்
வரிசேர் பொழிலணி தென்காசிக் கோயில் வகுத்துவலம்
புரிசேர் கடற்புவி போற்றவைத் தேனன்பு பூண்டிதனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார்பொற் பாதமென் சென்னியதே.

சாத்திரம் பார்த்திங் கியான்கண்ட பூசைக டாநடத்தி
ஏத்தியன் பால்விச்வ நாதன்பொற் கோயிலென் றும்புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்ர மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே"

எனக் காண்க. இப்பாண்டியன் சிவபதமடைந்ததுபற்றி முன்னோர் உருகிக்கூறிய சாஸனப்பாடல்கள் வருமாறு:—

"காண்டகு சீர்புனை தென்காசிக் கோபுரக் கற்பணியா
ரூண்டின் முடித்துக் கயிலைசென் றுனகி லேசர்பதம்
பூண்டுறை சிந்தை யரிகே சரிவிந்தைப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள் பராக்ரம பாண்டியனே.

கோதற்ற பத்தி யறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
நீதற்ற வெள்ளிச் சிலம்பகத் தோசெம்பொ னம்பலத்தோ

வேதத்தி லோசிவ லோகத்தி லோவிச்வ நாதனிரு
பாதத்தி லோசென்று புக்கான் பராக்ரம பாண்டியனே"

இப்பாடல்களால், இவ்வரிகேசரி பராக்கிரமபாண்டியனது சிவபத்தியின் மேம்பாடும் பிற அருங்குணங்களும் வெளியாவதோடு, பெருந்தமிழ்ப் புலமை உடையவன் இவன் என்பதும் நன்கு பெறப்படும். தமிழ்நாவலர் சரிதையுள்—

"எண்ணீர்மை நூலுக் ககத்திய ஞமிவ னென்பதெல்லாம்
வெண்ணீர்மை யன்றி விரகல்ல விகரம மாறன்செஞ்சொற்
பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்
தண்ணீர் குடித்தல்ல வோகும்ப யோனி தமிழ்கற்றதே"

என்று காணப்படும் அழகியபாடல் (147), இத் தென்காசி வேந்தனது புலமைத்திறம்பற்றியதாகத் தோற்றுகின்றது. இவனது புலமையையும் பிறவரலாறுகளையும் இவன் மெய்க்கீர்த்தி நன்குவிளக்குதலின், அதனைக் கீழே தருகின்றேன்.

பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசைக் கலைமக ணலமுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செங்கோ லோச்சி வெண்குடை நிழற்றி
வான வாரியு மன்னருள் வாரியும்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையி லனுரையி விராசையிற் செண்பையில்
விந்தையி லறந்தையின் முதலையில் வீரையில்

வைப்பாற்......மன்னரை வெங்கண்
டெப்பாற் றிசையு மிசைவிளக் கேற்றிப்
பதினெண் பாடைப் பார்த்திவ ரனைவரும்
திறையுஞ் சின்னமு முறைமுறை கொணர்ந்து
குறைபல விரந்து குரைகழ லிறைஞ்ச
அவரவர் வேண்டிய தவரவர்க் கருளி
அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
வித்தைமுத லகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரவர்க்கு மண்டப மமைத்து
முன்னொரு தூறு மூங்கில்புக் கிருந்த
சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை நடாத்தநின் மன்னரு ளதனல்
வற்றா வருவியும் வற்றி வற்கடம்
உற்றவிக் காலத் துறுபுன னல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்டரு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேணி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையு மெக்கோ யிலினும்
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ளுடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்

இம்மைப் பயனு மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய
ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம தேவர். எனக்காண்க.

---

## 52 அகிலகலாவல்லவன் சேரமான்பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன்



திருவிசைப்பா ஆசிரியர்களுள் வேணாட்டடிகளைப்பற்றிக் கூறுமிடத்து,[1] தென்திருவாங்கூர்ச் சீமையாகிய வேணாட்டுவேந்தர்கள் தமிழ்வல்லவராய் அம்மொழியை ஆதரித்து வந்தமை குறிக்கப்பட்டது. அந்நிலைமை 15 - ம் நூற்றாண்டினும் அதன்பின்னரும் மாறியதில்லை யெனலாம். சோணாட்டு மூவலூர்ச் சிவாலயத்தின் கோபுரவாயிலிலே சிலாலிகித மான பாடல்கள்சில உள்ளன. அவையொன்றனுள்[2]—

"அகிலகலாவல்லவன் சேரமான்பெருமாள் வஞ்சி மார்த்தாண்டன் திருப்பா மூத்ததிருவடி சொல்லிவரக்காட்டின பாகுடக்கவி" என்ற குறிப்புடன் அடியிற்கண்ட செய்யுட்கள் சிறிதுசிதைந்து காணப்படுகின்றன. அவை வருமாறு:—

தேமா வயக்குசெய் யா..மபாற்கடற் சேதிபர்கோன்
மாமால் புதுவைச் சடையன் [னனென்?] மங்கையுங்கே
ஆமா மனையர்த வாயிழை செந்த...தாசை யெல்லாம்
போமாறு கண்டுவிட் டாளென்று கூறுமப் பூங்கொடிக்கே.

"காவிரியைச் சோணாட்டைக் காராளர் தம்மரபை
நாவலரைக் காவலரை நல்லோரைப் - பூவலயம்
உள்ளத் தரும்புதுவை யூரைச் சிறப்பித்தான்
பிள்ளைப் பெருமாள் பிறந்து"

---

1. இந்நூல், பக். 37 2. செந்தமிழ், தொகுதி-4, பக். 251.

இதனால், வஞ்சிமார்த்தாண்டன் என்பார் கலைகள் பல வற்றிலும் வல்லவராகவும் தமிழ்ப்புலமையாளராகவும் விளங்கிய சேரவேந்தர் என்பது தெரியலாம். இவ்வேந்தரைத் 'திருப்பா மூத்ததிருவடி' என்று கூறுதலால் திருப்பாப்பூர்க் குடியைச்சார்ந்த வேணாட்டரசராகவும்[1], வஞ்சி என நகரும் சேரமான்பெருமாள் என மரபும் கூறப்படுதலின் பழைய சேரவமிசத்தின் கிளையினராகவும் விளங்கியவர் இவரென்பது அறியப்படும். இவ்வேந்தரது சாஸனம், தென்பாண்டிநாட்டுச் சேரமாதேவிப்பக்கத்தே கொல்லம் 624 (கி. பி. 1448)ல் அமைந்துளது.[2] இதனால்,15-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் இவ் வேணாட்டரசர் என்பது தெளிவாவதாம். இத்தகையோர், சேதிபர்குலத்தோன்றலும் புதுவைச்சடையன் என்பார் மகனுமான பிள்ளைப்பெருமாள் என்ற தலைவனைப் புகழ்ந்துகூறியவை மேற்கூறிய பாடல்கள். புதுவை என்பது புதுச்சேரி என்பதன் மரூஉ; இது சோணாட்டுள்ளதோர் ஊராகும். கம்பநாடரை ஆதரித்து இராமாயணம் பாடுவித்த சடையவள்ளல் இவ்வூர்த் தலைவர் என்பதும் இப்பிள்ளைப் பெருமானின் முன்னோர் என்பதும் அறியத் தக்கன. மேற்கூறிய மூவலூர்ச் சாஸனப்பாடல்களை அடுத்து—

"மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவேரி - பொய்கழுவும்
[போர்] வேற் சடையன் புதுவையா னில்லறத்தை
யார்போற்ற வல்லா ரறிந்து"

1. திருப்பா என்பது திருப்பாப்பூர் என்பதன் மரூஉவாம். 'திருப்பாப்பூர் மூத்தவர்' (540 of 1926), 'சிறைவாய் மூத்தவர்' (517 of 1917) என இவர்வழியரசர்களும் இங்ஙனமே குடிப்பெயராற் கூறப்படுவர். இக்காலத்துத் திருவனந்தபுர மன்னரும் இத்திருப்பாப்பூரம் சத்தவரே என்பது அறியத்தக்கது. 2. M.E.R.638 of 1916-B.

என்ற பாடலும் வரையப்பட்டுள்ளது. இவ்வெண்பா 'காவிரி எச்சிற்படக் கம்பர் பாடியது' என்று தமிழ்நாவலர் சரிதை (70)[1] முதலியன கூறும். இதனாலும், சடையவள்ளலின் வழியினனே பிள்ளைப்பெருமாள் என்பது புலனாம். அவ்வள்ளல் போலவே, அறிவுதிருவாற்றல்களுடையனாகவும், புலவர்க்கு பரமோபகாரியாகவும் வாழ்ந்தவன் இத்தலைவன் என்பது திருக்கோடிகா[2] முதலிய ஊர்களிற்கண்ட இவன் சாஸனங்களால் தெரிகின்றது. "செந்தமிழ்ச் சிகாமணி" என்று இவனைப் புகழ்ந்துகூறுந் தொடரும்,[3]

"பேரோசைப் பிள்ளைப் பெருமாளைச் சேதிபனைக்
காரோசைக் கையானைக் கண்டீரே - பாரோர்
விடுங்கோள் கொடுங்கோள் விழியருள்பூண் டன்னம்
இடுங்கோள் கொடுங்கே [டிற?]

என இவனைச் சிறப்பிக்கும் பாடலும்[4] பிற கல்லெழுத்துக்களினும் காணப்படுவன. இனி, புதுக்கோட்டைச் சீமைச் சாஸனத் தொகுதியுள் (பக்: 486) விராச்சிலை (விரையாச்சிலை)ச் சிவாலயத்தே, வீரப்பிரதாப தேவராய மகாராஜர் ஆட்சியில்—சக. 1365 (கி. பி. 1443)ம் வருஷத்தமைந்த இத்தலைவனது சாஸனமொன்றில்—

"சோழமண்டலத்துச் செயமாணிக்கவளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துப் புதுச்சேரிச் சோழமண்டலத் தாபனாசாரியன் புதுச்சேரியுடையான் பிள்ளைப்பெருமாள்"

என்பார் அறங்கள்சில செய்தசெய்தி கூறப்பட்டுளது. இப்பிள்ளைப் பெருமாளைச் 'சோழமண்டலத் தாபனாசாரியன்'

1. காவிரியே, போர்வேள், தன்புகழை—என்பன இச்சரிதை நூலிற் கண்ட பாடபேதங்கள். 2. M.E.R. 57-8 of 1930-1.
3. Ibid. 33 of 1925; p. 94.
4. செந்தமிழ், தொ-4, பக். 252.

என்று அது விசேடித்தலால், சோழராஜ்யத்துக்குநேர்ந்த இடையூறுநீக்கி அதனை நிலைநிறுத்திப் புகழ்பெற்றவன் இத்தலைவன் என்பதுதெரியலாம். 'காவிரியைச் சோணாட்டை.... சிறப்பித்தான்' என்று மேற்கூறிய பாடல் கூறுதலும் ஒப்பிடுக. இதனால், தென்னாட்டரசிபலில், விஜயநகரவரசர்காலத்தே பெருந்தலைமையும் அதிகாரமும் வகித்திருந்தவன் பிள்ளைப் பெருமாள் என்பது பெறப்படுதலின், அத்தகையோனது பேருதவியொன்றை வேண்டி அவர்க்குப் பாகுடக்கவி எழுதி விடுக்கலாயினர் இச் சேரமான்பெருமாள் என்க. [பாகுடக்கவி - கையுறையாகச் சமர்ப்பிக்கும் பாடல்; பாகுடம்[1] - கையுறை].

இவ்வேணாட்டரசர்வழியில், 100-ஆண்டுகட்குப் பின்பு கி. பி. 1541 - ல் 'சகலகலை மார்த்தாண்டவர்மன் சிறைவாய் மூத்ததிருவடி' எனப்பட்ட அரசரொருவர் ஆட்சிபுரிந்தாரென்பது, சுசீந்திரசாஸனமொன்றால் தெரியவருகின்றது.[2] இவர்காலத்தவராகப் பிள்ளைப்பெருமாளைக் கொண்டு அறிஞர்சிலர் எழுதினரேனும், அஃது, அத்தலைவற்குப் புதுக்கோட்டைச் சாஸனங்கூறும் காலத்துடன் இயைபாமையின், சேரமாதேவிக் கல்லெழுத்திற்கண்ட மார்த்தாண்டவர்மரே மூவலூர்ச்சாஸனப் பாடல்களின் ஆசிரியர் என்பது தேற்றமாம்.

இம் மலைநாட்டரசர் போலவே, இவர் வழியினரான பிற்காலத்துவேந்தர்களும், தமிழில் அறிவும் அபிமானமும் படைத்திருந்தனர். இலக்கணவிளக்கவாசிரியரான வைத்

1. பாகுடம் - ப்ராப்ருதம் என்ற வடமொழிச் சிதைவு; 'நரிப் படைக்கொரு பாகுடம்போல' (திவ். பெரியாழ்வார் திருமொழி, 4, 5, 8), 'காமன் பூவாகிய பாகுடத்தை யேந்தி' (சீவக. 2708, உரை) முதலியன காண்க. 2. T. A. S. Vol. i, p. 56.

தியநாத தேசிகர், ஆதிசரவணப்பெருமாட் கவிராயர் முதலி யோர் அவ்வரசர்களால் வரிசைமுதலியனபெற்றுச் சிறப் புற்றமை அறியத்தக்கது.[1]

## 53 காளமேகப்புலவர் காலம்.



மேற்கூறியபடி நிலைகுலைந்த சோழபாண்டிய ராட்சிக்குப் பின்பு, தென்னாட்டின் சநாதன தர்மங்களைக் காப்பதற் கென்றே தோன்றியது, விஜயநகர ஏகாதிபத்தியம் எனலாம். 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதிமுதல் அம் மகாராஜ்யத்தின் பலபராக்கிரமங்களால் தென்னாடுமுழுதும் நல்லாட்சியில் நிறுவப்பட்ட செய்தி சரித்திரப் பிரசித்தமானது. அவ் வேகாதிபத்தியத்தை அம்பி (Hampi) மாநகரிலிருந்து ஆட்சி புரிந்த அரசர்களும் அவர் பிரதிநிதிகளும் தமிழ்நாட்டவ ரிடத்தும் அந்நாட்டுத் தேவாலயங்களிடத்தும் அபிமானம் பெரிதுடையராயிருந்தனர் என்பதற்கு வேண்டிய ஆதாரங் கள் உள்ளன. அவ்வரசர் பெருமக்களிலே, மல்லிகார்ச்சுன ராயர் (1449 - 1465), விரூபாக்ஷராயர் (1466 - 1485) காலங் களில், தமிழ்நாட்டின் இராசப்பிரதிநிதியாக அனுப்பப்பட்டு ஆட்சிபுரிந்துவந்தவர், சாளுவத் திருமலைராயர் என்பார். தென்னாட்டிற் பல்லாண்டுகளாக அப்பதவியை நிர்வகித்து வந்த இவர், தமிழில் அறிவுடையரா யிருந்ததோடு, தமிழ்ப் புலவர்களிற் சிறந்தவர்களை ஆதரித்தும் வந்தனர். இவர் காலத்திற்றான் காளமேகப்புலவர் என்ற ஆசுகவிச்சிங்கம் விளங்கியது. இத் திருமலைராயரிடம் முதன்முதற் சென்ற போது, காளமேகம் பாடியனவாகத் தமிழ்நாவலர்சரிதையி னும் பிறவற்றினுங் கண்ட செய்யுட்களில்—

1. பெருந்தொகை, 1713, 1788.

"சீதஞ் செயுந்தொங்கன் மார்பினு னியலிசை
தெரிந்த திருமலை ராயன்" (தனிப்பா.)

"தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயு மென்னை நிலைசெய்கல் யாணிச்
சாளுவத் திருமலை ராயன்
மந்தர புயனுங் கோப்பய னுதவு
மகிபதி விதரண ராமன்
வாக்கினுற் குபேர னுக்கினுன்" (தமிழ்நா. 206)

எனவரும் தொடர்கள் குறிப்பிடத்தக்கன. இவற்றினின்று, சாளுவவமிசத்துக் கோப்பயன் என்பாரது புத்திரர் திருமலைராயர் என்பதும், இவர் தமிழின் இயலிசை தெரிந்தவராய்த் தமிழ்க்கவிஞரைத் தம் ஆஸ்தானத்துக்கொண்டு ஆதரித்து வந்தவரென்பதும் அறியப்படுவன. திருவானைக்கா ஜம்புகேசுவராலயத்தின் திருமதிலிற்கண்ட சாஸனமொன்று,[1] சக. 137...-ல் ஸ்ரீமுகவருஷம்—

"கட்டாரி சாளுவன் கோபராஜாவின் குமாரர் சாளுவ திருமலைராஜா, நாச்சியார் அகிலாண்டநாயகியார்க்குப் பதக்கம் பண்ணுவித்து ஸேவைபண்ணினர்"

என்றும், ஸ்ரீரங்கத்தில், சக. ௲ 1385-ல் அமைந்த சிலாலிகிதமொன்று—[2]

"சாளுவத் திருமலைதேவ மஹாராஜா"
"ஸாளுவ கோபதிம்ம ந்ருபதிர் ஹயாச்சிரம்"

என்றும் கூறுகின்றன. இவ்விரண்டு கல்லெழுத்துக்களும் முறையே கி. பி. 1453, 1463-வருஷங்களில் அமைந்தவை. "சாளுவத் திருமலைராயன் கோப்பயனுதவு மகிபதி" என்ற காளமேகப்புலவர் கூற்றின்படி, சாஸனத் திருமலைராசரே

1. M. E. R. 67 of 1903. 2. S. I. I. iv, p. 145.

அப்புலவராற் பாடப்பட்ட புகழுடையவர் என்பது இச்சாஸனங்களால் மிகத் தெளிவாம். ஆகவே, காளமேகப் புலவர் வாழ்ந்தகாலம் பதினைன்கா நூற்றாண்டின் பிற்பகுதியென்பது பெறப்படுதல் கண்டுகொள்க.

## 54. மணவைக் கூத்தன்.



இப்பெயர்கொண்ட புலமைவாய்ந்த தலைவரொருவரைப் பற்றி, அழகான தனிப்பாடலென்று வழங்குகின்றது; அஃதாவது—

"துளைபடு மாமர மோரேழு மெய்தவன் தூதுகவி
உளைபடு வாரிதி யொன்றே கடந்த தொளிர்தரள
வளைபடு வாவி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுட னேகட லேழையுந் தாண்டியதே"

எனக்காண்க. இச்செய்யுளால், மணவைக்கூத்தன் என்பார் சிறந்த கவியாக விளங்கியவர் என்பது புலனும். புதுக்கோட்டைச் சீமை, திருமெய்யஞ் சேகரத்துள்ள கோவிற்பட்டிச் சிவாலயத்தமைந்த சாஸனமொன்று[1]—

"சகஸ்ரு 1420 (கி.பி. 1498) ல், ஷெ கோயிலுள் திருவாதவூரரை ஏறியருளப்பண்ணி,[2] அவ்வடியார்க்கு மார்கழித் திருநாள் பத்துத்தினமும் திருவிழா நடத்திவைக்க நிபந்தஞ்செய்த இருவருள், கானநாட்டு இராஜசுந்தரபுரத்து மணவையூருடையான் பூமாலைக்கூத்தர் பாண்டிப்பெருமாள் என்பார் ஒருவர்"

1. புதுக்கோட்டைச் சீமைச் சாஸனத் தொகுதி. பக். No. 838.
2. மாணிக்கவாசக ஸ்வாமிகள் விக்கிரகத்தைப் புதிதாகப் பிரதிஷ்டை செய்து எ - று.

என்று குறிப்பிடுகின்றது. தலைப்பிற்காட்டிய கட்டளைக் கலித்துறையாற் சிறப்பிக்கப்பெற்றார், இச்சாஸனங் கூறும் மணவைப் பூமாலைக் கூத்தரோ என்று கருதற்கு, ஊர்பெயர்களுடன் திருவாதவூரடிகள்பாற் கொண்டிருந்த பத்தித்திறமும் இடந்தருகின்றது. இவர்க்குப் பாண்டிப்பெருமாள் என்பதும் பெயரென்று சாஸனங் கூறும். இப்பெயர் சிவஞானபோதத்துக்கு உரையிட்டவருள் ஒருவர்க்கும் உரியதாகும். இவரும் சாஸனங்கூறுமவரும் ஒருவரோ வேறோ தெரியக் கூடவில்லை.

## 55 அரிதாசர். *

சைவவைணவ சமயக்கொள்கைகளை ஆகமவல்லி, ஆரணவல்லி என்ற பெண்களிருவர் கூற்றில்வைத்து விளக்கி, முடிவில் திருமாலே பரம்பொருள் என்பதை நிலைநாட்டவெழுந்த இருசமயவிளக்கம் என்ற நூலின் ஆசிரியர் இவர். இப்பெரியார்வரலாறுகளை அறிதற்கு, இவர்தம் வாக்கும் இவரைப்பற்றியமைந்த சாஸனங்களும் பெருந்துணையாகின்றன. இவ்வாசிரியர் அரிவாசபுரம், அரிதை என்று வழங்கப்பட்ட நகரில் திருக்கோயில்கொண்ட திருமாலுக்குப் பல கைங்கரியங்களும் புரிந்துகொண்டு பரமபாகவதராய் அவ்வூரிலே வாழ்ந்தவர். [1] 'அரிதாதனென் றேதுநாமக் களப்பாளன்' என்று தம்மைக் கூறுதலால், களப்பாளர் குடியில் உதித்த வேளாண்மரபினர் இவர் என்பது தெரியலாம். இக்

* இவர்வரலாற்றைப் பல்லாண்டுகட்குமுன்பே கண்டு செந்தமிழ், அரிசமயதிவாகரம் முதலிய பத்திரிகைகளில் எழுதியுளேன். பின்புகண்ட செய்திகளும், இக்கட்டுரையிற் சேர்க்கப்பெற்றுள்ளன.

1. இருசமயவிளக்கம், நகரப்படலம், 4, 6.

குடியினரைப்பற்றி மேலே விளக்கியுளேன் (பக். 65-5). இவ் வாசிரியர், நூன்முகப்பில் தம்மூர்த் திருமாலின்வணக்கங் கூறுமிடத்து—

"கிரிபோல் விளங்கிக் கிளரும்புயக் கிருட்ணராயர்
தரைமீது சிங்காத் திரியிற்சயத் தம்ப நாட்ட
வரமா தரவா ளளித்தேவட கூவ மேவும்
கருமா மணிவண் ணனைநீடு கருத்துள் வைப்பாம்.

"படமா சுணமூ முதிராவிளம் பச்சை யாலும்
திடமா மறையந் தமுமாகிநற் செல்வ ஞன
வடமா மலையண்ணன துள்ளமும் வைக நாளும்
இடமா மொருவற் கடியோங்க ளியாங்கள் தாமே"

என்று பாடுகின்றார். இவற்றுள், கிருஷ்ணராயர் சிங்காத்திரி என்றவிடத்து ஜயஸ்தம்பம் நாட்டுதற்கு, வடகூவத்திற் கோயில்கொண்ட திருமால் வரமளித்தருளியவர் என்றும், வடமாமலையண்ணன் என்பார் அத்திருமால் பத்திமையுடையார் என்றுங் கூறப்பட்டிருத்தல் காணலாம். இவ்வாறு சிறப்பிக்கப்பட்ட கிருஷ்ணராயரும், வடமாமலையண்ணரும் யாவர் என்பதை நோக்குவோம்.

பரதகண்டத்தின் தென்பகுதியை நீதிதவறாது ஆட்சி புரிந்து, அதன் சநாதனதர்மங்களும் கோயில்முதலிய அறப்புறங்களும் பரசமயிகளாற் கேடுறாதபடி பலதலைமுறைகளாகக் காத்து ஆட்சிபுரிந்துவந்த விஜயநகரவேந்தர்களுள் தலைசிறந்துவிளங்கிய பெருந்தகையார், கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1497-1540) என்பது பிரசித்தம். கலிங்கதேசத்தைக் கடகம் என்ற தலைநகரிலிருந்து ஆண்டுவந்த கஜபதியாசனான பிரதாபருத்திரன் என்பான் தமக்கு அடங்காமையின், இக்கிருஷ்ணதேவர் உத்தேசம் 1520-ல் அவனாட்டின் மேற் படையெடுத்துச்சென்று போரில் அவனை வென்றடக்

இனர் என்பது அவர் சரித்திரவிசேடங்களுள் ஒன்று. இவ் வெற்றிக்குறியாகச் சிங்காத்திரியில் நாட்டப்பட்டதே அரிதாசர்கூறிய செயத்தம்பமாம். சிங்காத்திரி என்பது விசாக பட்டணத்தை அடுத்துள்ள சிம்மாசலம் என்ற விஷ்ணுஸ் தலமாகும். அவ்விராயர்பெருமானே பாடிய ஆமுக்தமால்யதாவும், அவரது ஆஸ்தானகவியாகிய அல்லஸானிபெத்தன்னு பாடிய மனுசரிதமும் ஆகிய காவியங்களில் ஷெ சிம்மாசல அடிவாரத்துள்ள பொட்டுநூரில் நாட்டப்பெற்றதென்று இச்சயத்தம்பம் சிறப்பிக்கப்பட்டுள்ளதென்பர். சிதம்பர சாஸனமொன்றும்—

"இந்தக்கோபுரம் ராஜாதிராஜன் ராஜபரமேசுவரன் ஸ்ரீ வீரப்பிரதாப கிருஷ்ணதேவ மஹாராயரின் தர்மம் ஆக சிம்மாந்திரி பொட்டுநூர்க்கு எழுந்தருளி ஜயஸ்தம்பம் நாட்டித் திரும்பிப் பொன்னம்பலநாதனையும் ஸேவித்து வடக்குக்கோபுரம் கட்டிவைத்த ஸேவை" (S. I. I. Vol. iv, No. 199.)

என்று கூறுதல் அறியத்தக்கது. சிம்மாசலத் திருமாலிடம் கிருஷ்ணதேவர் பெரும்பத்திபூண்டிருந்தவர் என்பது, கி. பி. 1516, 1522-ம் ஆண்டுகளில் பலகிராமங்களும் திருவாபரணங்களும் அவர் அம்மூர்த்திக்கு அளித்ததாக ஆங்குள்ள சாஸனங்கள் கூறுதலால் விளங்குவதாம். இங்ஙனம், சிம்மாத்திரிப்பொட்டுநூரில் நாட்டப்பட்ட செயத்தம்பமே அரிதாசராலும் கூறப்பெற்றதென்க.

இனி, 'வடமாமலையண்ணன்' என்று இவ்வாசிரியர் கூறிய தலைவரை நோக்குவோம். கிருஷ்ணதேவமகாராயர் அமைத்த கன்னடசாஸனம் ஒன்றிற்கண்ட பின்வருஞ் செய்தி குறிப்பிடத்தக்கது.

"சகாப்தம் 1445-ல், சுபானுஸு கார்த்திகைமீ திங்கட்கிழமை சுக்கிலபக்ஷம் உத்தானத்வாதசியில் துங்கபத்ரா தீரத்து, ஹேமகூட

பர்வதத்தால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீவிட்டலேச விரூபாக்ஷர் ஸந்நிதியில், ஹரிவாஸபுரேசராய் வேதாசலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ நீலமாணிக்க தேவருக்கு, சந்திரகிரிராஜ்யத்தில் கங்கைமரபிற் பிறந்தவரும், திருமாலின் திருவடிகளில் வண்டுபோன்றவரும், நீலமாணிக்க தேவர்க்குக் கைங்கரியங்கள் புரிவதையே புருஷார்த்தமாகக் கொண்டவரும், அப்பெருமானுக்குக் கோபுர மண்டப விமான ஆவரண ரதாதித் திருப்பணிகள் எல்லாஞ் செய்தவரும் வடமலை என்ற பெயருள்ள மந்திரிசிரேஷ்டரைத் தம் தமையனாராகக் கொண்டவரும் திருமால்பத்தருட் சிறந்தவருமான ஹரிதாஸரால் கேட்டுக்கொள்ளப்பட்டுப் பெருமாளுக்குத் திருவமுதுக்கும் நிர்த்தகீத மகாவாத்யாதிகட்கும் நாகலாபுரம் என்ற பிரதிநாமங்கொண்ட அரிகண்டபுரம் ஸர்வமான்யமாகக் கொடுக்கப்பட்டது'' [1]

என்பதாம். இச்சாஸனத்தினின்று, அரிதாசரது ஊர் மரபு முதலிய வரலாறுகள் தெரிவதோடு, வடமலை என்பார் மந்திரி சிரேஷ்டரும், இவ்வாசிரியர்க்குத் தமையனுமானவர் என்பதும் அறியலாகும். தமையனைப்பற்றி, வடமாமலையண்ணன் என இவராற் கூறப்பட்டாரென்க. இவ்வடமலையார் மந்திரிபதம் வகித்தது கிருஷ்ணதேவராயர் ஆட்சியில் ஆகும். திருவாரூரில் வாழ்ந்த தத்துவப்பிரகாசர் என்ற சைவத்துறவி யொருவர், அவ்வூர்ச் சிவாலயத்துநடந்த சில அதிக்கிரமங்களை முன்னிட்டு, ஆங்குத் திருவிழாவிற்காக ஏற்றிய கொடியை இறக்கவிடாமல் தகைந்தபோது,

''மருவுபுகழ்க் கிர்ஷ்ண மகராச ராணை
அரிய வடமலையா ராணை - திருவாரூர்ப்
பாகற் கொடியறுப்பார் பாதத் திருவாணை
த்யாகக் கொடியிறக்கா தே''

1. இச்சாஸனக்குறிப்பு, காலஞ்சென்ற ஸ்ரீ. A. ரங்கஸ்வாமி ஸரஸ்வதி B. A. அவர்களால் எனக்கு உதவப்பெற்றது.

என்று கூறினரென்பது தமிழ்நாவலர்சரிதையால் (225) அறியப்படுகின்றது. அம்முனிவர், அரசன் அமைச்சன் கடவுள் இவர்கள்மேல் ஆணையிட்டுத் தடுக்கும்போது, கிருஷ்ணமகாராஜர், வடமலையார், பாகற்கொடியறுப்பார்(ஸ்ரீதியாகராஜர்) என்பாரை முறையே கூறுவதினின்று, வடமலையார் அவ்விராயர்மந்திரியே என்பது விளக்கமாம். காஞ்சீபுரம் வரதராஜஸ்வாமிகோயிற் சாஸனமொன்றில், கிருஷ்ணதேவரது ஆணையால் ஷெ கோயிற்கு இம்மந்திரி பூமி அளித்ததும், அது, சக௵ 1472-ல் சதாசிவராயராணைப்படி நாகரசர் என்பாரிடம் ஒப்பிக்கப்பட்டதும் கூறப்பட்டுள்ளன.[1] கிருஷ்ணதேவமகாராயர் தமிழகமுழுதும் ஆட்சிபுரிந்த பேரரசர் ஆதலின், அவர்கீழ்த் தமிழமைச்சர் சிலரும் அமைந்திருந்தனர். அத்தகையோருள் தொண்டைநாட்டுச் செம்பூரினரான அம்பி அறம்வளர்த்த முதலியார் [2] என்பாரும் ஒருவர். ஆகவே, தமிழ்நாட்டை நன்கறிந்து ஆட்சிபுரிதற்கு உதவவல்ல தமிழமைச்சர்களை விஜயநகரவேந்தர்கள் உடையராயிருந்தனர் என்பதில் வியப்பொன்றுமில்லை. அவ்வமைச்சருள் ஒருவரே இவ்வடமலையாரும். இவரை "வடமலையண்ணக

1. M. E. R. 550 of 1919-B.

2. இவரை 'அம்பிகாமக்கிழான் அறம்வளர்த்தநயினர்' என்றும் சாஸனங் கூறும் (M.E.R 368 of 1927). இவர் நரசிங்கதேவராயர், மல்லிகார்ச்சுனராயர் காலங்களினும் பெரும்பதவி வகித்தவர் (450, 837 of 1921; 291 of 1928 - 9; 422 of 1955). இவர்மேற் பாண்டியன் பாடிய கலம்பகமும் உண்டு (தமிழ்நா. 136). விஜயநகரத்தின் ராஜஸ்தானமான ஹம்பி (Hampi) யில் வாழ்ந்தவராதலின் அம்பி எனவும், கிராமக்காணி (காமக்காணி) உடையராதலின் காமக்கிழான் (பக். 21) எனவும் விசேடிக்கப்பட்டார் என்க.

ளய்யன்" என்றும் அக்காலத்தார் வழங்கினர்.[1] திருக்கழுக் குன்றத்துச் சாஸனமொன்றில்—

"ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் குன்றவர்த்தனக் கோட்டத்து வடகூவத்துள்ள அரிகண்டபுரத்து ஹரிவாச புரமான நாகலாதேவிபுரம் என்ற ஊரினராய ஆவினிகளப் பாளர் திருவேங்கடமுடையார் என்பவரின் புத்திரர்களான வடமலையண்ணகள், தெய்வங்கள் பெருமாள் முதலியார், திருமலையப்பர் என்றமூவர் தம்தாயார் பெருமாள்முதலிச் சியார் புண்ணியமாகவும், அரசர் கிருஷ்ணதேவராயர் தன்ம மாகவும் குறுமுகையென்ற ஊரைக் கோயிற்கு உதவினர்" என்று கூறுகின்றது.[2] சோணாட்டுள்ள நாச்சியார்கோயில் என்ற திருநறையூரில் சகாப்தம் 1436 (கி.பி.1514)ல் அமைந்த கல்லெழுத்தொன்றனுள்,[3] மேற்கூறிய சகோதரரில் மூத்த வரை—"அரிகண்டபுரத்துக் காராளர் மரபினரான ஆவினி களப்பாளன் திருவேங்கடமுடையார் வடமலையண்ணகள்" என்றும் நாகலாபுரத்துச் செப்பிதழ்களில், அரிதாசரைப்பற் றிக் கூறுமிடத்துத் 'தங்கள் தமையனார் வடமலையண்ணகளய் யன்' என்றும் கூறப்பட்டுள்ளன. இவற்றால், மேற்கூறிய வடமலையார், தெய்வங்கள் பெருமாள், திருமலையப்பர் என்ற மூவர்க்கும் அரிதாசர் என்ற வேறு சகோதரரும் இருந்தனர் என்பது பெறப்படும். இவர்க்குக் கிருஷ்ணன் என்பது இயற் பெயரென்றும், அரிதாசர் என்பது தாஸ்யநாமமாகப் பின்பு வழங்கியதென்றும் அந்நாகலாபுரச் செப்பிதழால் அறியக் கிடக்கின்றன. இவ்வாறு, தம் மூத்தசகோதரராகவும் ராயர்

1. I. M. P. Ap. 189—திம்மய்யரண்ணகள் (313 of 1921), கெம்பதேவரண்ணகள் (194 of 1920) என இத்தகைய அதிகாரி களை வழங்கியிருத்தல் ஒப்பிடத்தகும்.

2. M. E. R. 130 of 1932 - 3.

3. Ibid. 133, of 1931 - 2; p.65.

மந்திரியாகவும் திருமாலடியாராகவும் பெரும்புகழுடன் விளங்கியவராதலின், இவரை—

"வடமாமலை யண்ணன தள்ளமும் வைக நாளும்
இடமா மொருவற் கடியோங்க ளியாங்கள் தாமே"

என்று கூறினர் அரிதாசர் என்க. இவர் அம்மூவர்க்கும் இளவல் என்று கருதலாகும். இவ்வரிதாசரைப்போலவே இவர் தமையனாரான வடமலையாரும் வித்வான்களில் ஒருவராக விளங்கியவர். ஆற்றுவான்பாடி என்பது இவாது பூர்வீக கிராமமென்பதும், அவ்வூரினரான இவர்முன்னோர்கள் வித்வத்பரம்பரையினரென்பதும் ஆரணித்தாலுகா தேவிகாபுரத்தில், கிருஷ்ணதேவராயரது காலத்தே சகஹு 1446 (கி. பி. 1523)ம் ஆண்டில் அமைந்த சாஸனமொன்றால் [1] தெரிய வருகின்றன. அதனுள்:—

"செயங்கொண்ட சோழமண்டலத்துப் பல்குன்றக் கோட்டத்து மேல்குன்றநாடு முருகமங்கலப்பற்று இராஜகம்பீரன்மலைக்கு அடுத்தபற்று செய்யாற்று இதன்பிரிவான தேவக்காபுரம் உடையார்...திருநாமக்காணியான சோரபூண்டியில்...தேவக்காபுரம் பிக்ஷாமடத்து விசுவேசுவர சிவாசாரியாரும், தானமயேசுரர் கைக்கோளமுதலிகளும் ஆற்றுவான்பாடி வித்வான்களில் திருவேங்கலநாதர் மகன் வடமலையார்க்கு இறையிலி காணிபாச்சி பண்ணிக் கொடுத்தபடி..." என்று கூறப்பட்டுள்ளது. திருவெங்கலநாதர் என்பது திருவேங்கடநாதர் என்பதன் சிதைவாய் அக்காலத்து மக்கள் பெயராக வழங்கிபதாம். [2] இத்திருவெங்கலநாதர், வடமலையாரின் தந்தையாகச் சாஸனங்களிற்கண்ட திருவேங்கடமுடையாராவர். உடையார் என்பதும் நாதர் என்பதும் ஒரு பொருளன. தம் இளவலான அரிதாசர்கட்டிய கோயிற்குக்

1. M. E. R. 365 of 1912. 2. I. M. P. NA. 663 A.

கிருஷ்ணதேவராயர் பூமிகள் உதவிய ஆண்டுக்கு அடுத்த வருஷம் வடமலையார் நிலம் பெற்றுள்ளமை இச்சாஸனத்தால் அறியத்தகும். அவ்விராயரது மந்திரியாயினும், தேவிகாபுரத்துப் பிரபலரான சிவாசாரியரும் பிறரும் இவ்வடமலையாரை இங்ஙனம் கௌரவித்திருப்பது, இவரது புலமைச் சிறப்புப்பற்றியும், செல்வாக்கை நோக்கியும் என்றே கொள்ளற்பாலது. தந்தை பெயரும், தம்பியர்பெயரும், இடங்காலங்களும் பெரும்பான்மை ஒத்தமைதலால் இவ்வடமலையாரை வேறொரு புலவராகக் கருதக்கூடவில்லை.

இனி, இவ்வரிதாசர் வாழ்ந்த அரிவாசபுரம் என்பது தொண்டைநாட்டுள்ள திருவெவ்வுளூர் (திருவள்ளூர்)க்கு வடக்கே 18 - மைலில் உள்ள நகரி நாகலாபுரம் என்ற ஊராகும். இவ்வூரில் மலையும் அம்மலைப்பக்கத்தே நதியும் திருமால்கோயிலும் உள்ளன. அத்திருமால் கோயிலில் அமைந்த சாஸனங்களிலே [1]—கிருஷ்ணதேவராயர் சக. 1445 (கி. பி. (1523)-ல், வடநாட்டிற்பெற்ற பெருவெற்றிக்குப்பின், மகாமகத்தின் பொருட்டுக் கும்பகோணஞ் சென்றுவந்தனர் என்றும், அங்ஙனஞ் சென்று திரும்புமிடையில் நாகலாபுரத்துக்கு விஜயஞ்செய்தனர் என்றும், அப்போது, அவ்வூர்த் திருமால் தம் கனவில்தோன்றி ஆணையிட்டருளியவாறு அரிதாசர் என்ற பெரியாரால் ஆங்குத் திருமால்கோயில் கட்டி முடிக்கப்பட்டதென்றும், அக்கோயிற் கைங்கரியங்கள் நடத்துவதற்கும் ஆங்குத் திராவிடவேதமும் வேதாந்தமும் ஓதுவதற்கும் அவ்வரசர் பலவூர்களை அளித்து அப்பெரியாரிடமே அக்கோயிலதிகார முழுமையும் ஒப்புவித்தனர் என்றும் கூறப்பட்டுள்ளன.

"முன்னாள் ஸ்வாமி கிருஷ்ணதேவமஹாராயர் நாகலாதேவியம்மன்புரத்தை எம்பெருமானுக்குக் கட்டளையிடுவதுக்கு முன்னே

தங்களுக்கு எம்பெருமான் ஸ்வப்னத்திலே ஸாக்ஷாத்காரமாய்த் திருவாய்மலர்ந்தருளித் திருக்கோயில் கட்டச்சொல்லித் திருவுள்ளம் பற்ற அந்தப்படியிலே தாங்கள் கரியமாணிக்கத் தெம்பெருமானுக்குத் தங்களுபயமாகக் கைங்கரியங்கள் பண்ணவேண்டிப் பெருமாள் திருக்கோயில் கட்டுகிறதற்கும்..."

என்றுள்ள அச்சாஸனப்பகுதி[1] இங்கு அறியத்தக்கது. இவ்வாறு முடிக்கப்பெற்ற திருப்பணியை அரிதாசரே தம் நூலுள்,

> "வளப்பார் புகழும் படிவாழுமிம் மாநகர்க்கண்
> பிளப்பா வொருதூ ணினில்வந்து பிறந்து ளானுக்
> குளப்பா வனைகூ ரரிதாசனென் றோது நாமக்
> களப்பாளன் தானத் தளங்கள் கரைகண்ட நாளில்"

என்று கூறுதல் காண்க. இப்பெரியார் வாழ்ந்த நாகலாபுரம், நாகலாதேவிபுரம் நாகலாதேவியம்மன்புரம் என்றும் சாஸனங்களிற் பயிலும். இது கிருஷ்ணதேவரால் தம் தாயாரான நாகலாதேவியின் பெயரிட்டு உண்டாக்கப்பட்ட ஊர் என்பர்.

கிருஷ்ணதேவராயர் ஸ்ரீவைஷ்ணவசமயத்தைத் தழுவியவர். ஆயினும், பிறவைதிகசமயக் கடவுளரை வணங்கியும், அறப்புறங்கள் பலவற்றை அளித்தும் பொதுநோக்கங்கொண்டு ஆட்சிபுரிந்தவர். ஸ்ரீ ஆண்டாள் வைபவம்பற்றி இவராற் பாடப்பட்ட ஆமுக்தமால்யதா என்ற தெலுங்கு காவியத்தில் ஆழ்வார் ஆசாரியர்களுடைய அவதார மகிமைகள் அழகாகக் கூறப்பட்டுள்ளன என்றும், ஆண்டாள் பாசுரங்களின் கருத்துக்களையெல்லாம் இவ்வரசர்பெருமான் தம் நூலுள் விளக்கியுள்ள மாதிரிகையினின்று திவ்யப்பிரபந்தங்களில் இவர்க்கிருந்த ஈடுபாடு தெரியவரும் என்றும் கூறுவர். திராவிடவேதம் ஓதுவதற்காக இவர் பூமிகள் அளித்திருத்த

1. M. E. R. 627 - 8 of 1904; C. P. No. 12 of 1905.

லாலும் இச்செய்தி புலனும். அன்றியும், தென்னாடுமுழுமை யும் ஆண்ட இவ்வேந்தர் தமிழ்ப்புலவர்பலரைத் தம் ஆஸ் தானத்துக் கொண்டு ஆதரித்துவந்தார். அவர்களுள் ஞானப்பிரகாசர், தத்துவப்பிரகாசர், மண்டலபுருடர், குமார சரஸ்வதி என்போர் சிறந்தவர்களாவர். இன்னோர் அவ்விரா யர்பெருமான் காலத்து விளங்கிய வரலாறுகளைத் "தமிழ ரும் ஆந்திரரும்" என்ற நூலுள் விளக்கியுள்ளேன். இவற் றால், திருமாலடியாராகவும், பெரும்புலவராகவும், தம் அரசிய லதிகாரிகளின் மரபினராகவும் விளங்கிய இவ்வரிதாசர் போன்ற பெரியாரை மேற்கூறியவாறு இவ்வரசர்பெருமான் கௌரவித்திருப்பதில் அதிசயமில்லை என்க.

---

## 56 பாண்டி கவிராசர்.

புதுக்கோட்டைச் சீமை ராங்கியம் என்ற ஊரிலுள்ள சிவாலயத்தமைந்த சிலாலிகிதமொன்றில்—

"ரௌத்ரி௵ தைமீ 30௳ ஸ்ரீமது வெங்களநாயக்க ரய்யன் காரியத்துக்குக் கர்த்தரான தீத்தாரியப்பநும் இராசிமஙகலம் ஊர வரும், புலவர் பாண்டிகவிராசர் வீரமாலை பாடுகையில் இவர்க்கு இறையிலியாக விட்டசிலம்...சந்திராதித்த வரைக்கும்பற்றி அனுப விக்கக் கடவராகவும்" [1]

என்று காணப்படுகின்றது. வெங்களநாயக்கர் என்பார், விஜய நகர வேந்தரான அச்சுததேவ மகாராயர் காலத்தே அவர் பிரதிநிதியாய்த் தென்னாட்டை ஆட்சிபுரிந்து வந்தவர். இந் நாயக்கர் சக௵ 1452 (கி. பி. 1530)ல், பாண்டிநாட்டுத்

1. புதுக்கோட்டைச் சீமைச் சாஸனத்தொகுதி, No. 966 பக். 621.

திருப்புத்தூர்ச் சிவன்கோயிற்குப் பூமிகள்சில உதவிய செய்தி ஷெ கோயிற் சாஸனத்தாலும்,[1] இவர்கீழ்த் தலைமையதிகாரி யாயிருந்த தீத்தாரியப்பபிள்ளை என்பார், காஞ்சீபுர நகரினராய் ஷெ மகாராயர் ஆட்சியில் பிரபல அதிகாரியாய் விளங்கியவர் என்பது தொண்டைமண்டலத்து நரசிங்கபுர சாஸனங்களா லும்[2] தெரியவருகின்றன. அந் நரசிங்கபுரத்தில், தம் அரசர் அச்சுததேவராயர் புண்ணியமாக ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்மஸ் வாமிக்குக் கோயில்கட்டி சக௵ 1455 (கி. பி. 1533)ல் இவர் பிரதிஷ்டை செய்துளார். தீத்தாரப்பிள்ளை, காருணிக் கம் தீத்தார்பிள்ளை என்றும் வழங்கப்பெறுவர். இப்பிள்ளை யாலும் ஊரவராலும் பாண்டிகவிராசரைக் கொண்டு இயற்று விக்கப்பட்ட வீரமாலை என்பது, அரசப்பிரதிநிதியான வெங் கள நாயகரின் விஜயத்தையோ, வீரப்பிரதாபர் என்ற சிறப் புப் பெயர்பெற்ற கிருஷ்ணதேவர், அவரிளவல் அச்சுததேவர் என்ற விஜயநகர மகாராயர்களின் வெற்றித்திறங்களையோ பற்றியதாக வேண்டும். பின்னவரான அரசர்களின் வெற்றிப் பெருமைகளைச் சாஸனங்கள் விசேடமாகப் புகழ்வனவாம்.[3] பெரும்புலவர்களால், வீரமாலை பாடப்பெறுதலை வெற்றி வேந்தர்கள் பெரிதும் விரும்பிவந்தவர்களாவர்.

"ஏடியன் மாலை யணிந்தாலும் வாடு மெனப்புலவோர்
பாடிய வீரவெண் பாமாலையைப் பொன்னின் பாண்டியன்
தேடிய வேற்செழி யன்குல சேகரத் தென்னனைப்போற்[போர்
சூடிய வேந்தருண் டோவொரு வேந்தரைச் சொல்லுகிலே"[4]

---

1. I. M. P. Rd. 250.
2. M. E. R. Nos. 101, 105, 108 of 1919.
3. Ibid 628 of 1804; C. P. 12 of 1004; S. I. I. Vol. Vii, pp. 21 - 2.
4. பெருந்தொகை, 954.

எனத் தென்காசிப் பாண்டியனொருவனும் இவ்வாறே சிறப்பிக்கப்படுவன். இதுபற்றியே, 'வீரமவண்பாமாலைத் திருநெல்வேலிப்பெருமாள்' [1] என்று இவன் பெயர்வழங்கப்பெற்றான். இங்ஙனம் அரசர் தலைவர்களது வீரச்செயலைப் புகழ்ந்து பாடிய பாண்டிகவிராசர் அன்னோராற் பெரிதும் பாராட்டப்பெற்றவராய், 16-ம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்தவர் என்பது அறியத்தகும்.

---

## 57 உத்தண்ட வேலாயுதகவி.



இப்பெயர்கொண்ட பார்ப்பனப்புலவரொருவர் திருவதிகை என்ற சிவதலத்தில் வாழ்ந்துவந்தவர் என்பது, அத்தலத்து வீரட்டானேசுவரர் கோயில் அலங்காரமண்டபத் திருமதிலிற்கண்ட சாஸனமொன்றால் அறியப்படுகின்றது. தொண்டைநாட்டுக் காலியூர்க் கோட்டத்துத் தனியூரான உத்தரமேரூரைச் சார்ந்த மகிபாலகுலகாலச்சேரி என்ற ஊரினர் இவரென்றும் வீரவல்லி தேவராசபட்டர், காசிநாதர், குப்பையன் எனவும் வழங்கப்பெற்றவர் என்றும் கௌண்டின்ய கோத்திரத்தவர் என்றும் இச்சாஸனங் கூறும். [2] இப்புலவர், 'திருவதிகை வீரட்டானமுடைய தம்பிரானார்' மேல் கலம்பகமொன்று பாடி, அதன்பொருட்டுச் சக ௵ 1458 (கி. பி. 1536) துன்முகி௵ ஆடி மீ 10௳ திருவதிகைக் கோட்டைக்குள் மனையும் நிலங்களும் பெற்றனரென்று அச்சிலாலிகிதத்தால் அறியப்படுகின்றது. இவற்றால், 16-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களுள் இவரும் ஒருவர் என்பது தெரியலாகும். இவர்பாடிய திருவதிகைக கலம்பகம் இப்போது கிடைத்திலது.

---

1. M. E. R. 540 of 1917. 2. Ibid. 376 of 1921.

## 58 வாமன முனிவர்.



மேருமந்தரபுராணம் என்ற சைனசரிதங்கூறுந் தமிழ் நூலை இயற்றிய ஆசிரியர் இவர்.

"ஆயிரத்து நானூற்றின் மேலு மிருமூன்றும்
பாயபுகழ் மேருக்கள் மந்தரர்பாற்—றாய
தவராச ராசன் குறுமுனிவன் றந்த
பவரோக மந்திரமாம் பாட்டு"

என்ற பாயிரவெண்பாவால் இப்புராணவரலாறும், இதனை இயற்றியவர் 'குறுமுனிவன்' என்ற வாமனமுனிவர் என்பதும் அறியலாம். இம்முனிவர், காஞ்சீபுரத்தை அடுத்த திருப்பருத்திக் குன்றம் என்ற ஊரினர் என்றும், அவ்வூரிலுள்ள ஜினலயத்தில் மல்லிஷேணர், புஷ்பசேனர் என்ற குருசிஷ்யர்களான இருவர் பாதங்கள் பாறையிற் பொறிக்கப்பட்டுள்ளன என்றும், அவற்றின்கீழ் வரையப்பெற்ற சுலோகமொன்றில் [1]—

"வந்தேஹம் வாமநாசார்யம் மல்லிஷேண முநீச்வரம்"

என்றுள்ள தொடரால், மல்லிஷேணர்க்கு வாமனாசாரிய ரென்னும் மறுபெயருண்டென்பது தெரியலாகுமென்றும், இவ்வாசாரியர்க்கு 'உபயபாஷா கவிசக்கரவர்த்தி' என்ற சிறப்புப்பெயருமுண்டு என்றும், நீலகேசி நூற்குச் சமய திவாகரம் என்ற உரையிட்ட வாமனமுனிவர் இவரேயாதல் வேண்டும் என்றும் அம்மேருமந்தர புராணப் பதிப்பின் முகவுரையில் ஆசிரியர் அ. சக்கரவர்த்தி எம். ஏ. அவர்கள் ஆராய்ந்தெழுதியிருப்பவை இங்கறியத்தக்கன.

இனி, ஷெ ஊர் ஜினலயமண்டபத்து வரையப்பட்ட வேறு சாஸனமொன்றினின்று இவ்வாமனாசாரியரின் சிஷ்யர்

1. M. E. R. 41, 42 of 1890.

புஷ்பசேனர், விஜயநகரவேந்தரான இரண்டாம் புக்கராஜனுடைய சேனுபதி இருகப்பதண்டநாதனுக்கு ஆசாரியர் என்பதும், அவ்வாசாரியரின் விருப்பின்படி அம்மண்டபத்தை ஷெ தண்டநாதன் கி. பி. 1387-ல் கட்டிவைத்தவன் என்பதும் தெரியவருகின்றன. இவ்வாறு புஷ்பசேனர் 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதியினனான இருகப்பனுக்குக் குருவென்பது தெளியப்பட்டமையின், அக்குருவின் ஆசாரியரான வாமனமுனிவர் அந்நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவரென்பது பெறப்படுகின்றது. இம் முனிவர்க்கு மல்லிஷேணர் என்பது இயற்பெயரென்றும், குறுகிய உருவினரானமைபற்றி வாமனாசாரியர் என வழங்கப்பட்டாரென்றும், 'உபயபாஷா கவிசக்ரவர்த்தி' எனப்படுதலால் தமிழினும் சிறந்த கவியாய் விளங்கியவர் என்றும் அறியலாம்.

இவ்வாறு, மேருமந்தரபுராண வாசிரியர், மல்லிஷேண வாமன்முனிவராதல் வேண்டும் என்றெழுதிய ஸ்ரீமாந். சக்கரவர்த்தியவர்கள்கருத்து ஏற்புடையதெனலாம். ஆயின், நீலகேசிக் குரையிட்ட சமயதிவாகர வாமனமுனிவரும் அவரே என்று கருதற்கு ஆதாரமொன்றும் அவர்கள் குறிப்பிடவில்லை. அந்நீலகேசியுரையுள், திருக்குறளை மேற்கோள் புரியும் இரண்டிடங்களிலும் (326, 353) "என்பது எம் ஓத்தாகலின்" என்று தம் சமயத்தார்செய்த நூலாகக் குறளைக் கொண்டுகூறியமுறையே மேருமந்தரப் பாட்டொன்றைப் பிரமாணங்காட்டுமிடத்தும் (95) "—என்பது எம் ஓத்தாகலின்" என்று அவ்வுரையாளரான வாமனமுனிவர் எழுதிச்செல்லுகின்றார். இதனால், வள்ளுவனார்போல அவர்சமயத்தாரொருவர் இயற்றிய முன்னூலே அம்மேருமந்தரபுராணம் என்று அவ்வுரைகாரர் கருதியவர் என்பது நன்கு பெறப்படுகின்றது. அவ்வுரைகாரரியற்றியதே மேருமந்தரபுராணமாயின்,

அதனை மேற்கோளாகமட்டுங் காட்டி வாளாசெல்வர் என்க. எனவே 14-ம் நூற்றுண்டினராகத் தெரியும் அப் புராண வாசிரியரான வாமனமுனிவர்க்குப் பின் வாழ்ந்தவரே, நீலகேசியுரைசெய்த வாமனமுனிவர் என்று கொள்வதுதான் பொருத்தமாகும். ஆயின், அம்முனிவர் யாவர்?

மல்லிஷேண வாமனுசாரியரது சாஸனமுள்ள அத்திருப்பருத்திக் குன்றத்துச் சினகரத்தே, விஜயநகர வேந்தரான கிருஷ்ணதேவராயர் ஆட்சியில் சக ஆ 1440 (கி.பி. 1518)ல் அமைந்த சாஸனமொன்று [1] உள்ளது. அதனுள், அக்காலத்தே அச்சினுலயஸ்ரீபண்டாரம் நிர்வகிப்பவராகவும் ஆசாரியத் தலைவராகவும் விளங்கியவர் அனந்தவீரிய வாமனமுனிவர் என்ற பெரியார் என்று கூறப்பட்டுள்ளது.

"திருப்பருத்திக்குன்று நாயனுர் திரைலோக்ய நாதர்கோயில் ஸ்ரீபண்டாரத்துக் குருக்கள் அனந்தவீரிய வாமனமுனிவரும், தானதீதார் பொற்குன்றங்கிழாரும்"

என்பது அச்சாஸனத்தொடர். இதனுட் குறிக்கப்பட்ட வாமனமுனிவர், மேருமந்தர புராணவாசிரியராகக் கருதப்படும் மல்லிஷேண வாமனர்க்கு ஒன்றரை நூற்றுண்டு பிற்பட்டவர்; அம் மல்லிஷேணர் வாழ்ந்த ஜைனஸ்தலத்திலே கோயிலதிகாரமும் ஆசாரியபதமும் வகித்து விளங்கியவர்; அனந்தவீரியரென விசேடிக்கப்பெற்றவர்; நீலகேசி உரைகாரரான வாமனமுனிவர் இவர்போலும். அகளங்க சூத்திரம் என்ற ஜைனசமயசாஸ்திரத்துக்கு விருத்திசெய்த பெரியார் அனந்தவீரியர் என்பாராவர். [2] அவர்போல, நீலகேசி விருத்தி இயற்றிய இவர்க்கும் அச்சிறப்புப் பெயருள்ளமை

1. S. I. I. Vol. iv, p. 104.
2. Mysore and Coorg from the Inscriptions, p. 199.

ஒப்பிடத்தகும். இவற்றால், இச்சாஸனங்கூறும் வாமன முனிவரை நீலகேசிவிருத்திகாரராகக் கொள்வதற்குரிய பொருத்தம், மல்லிஷேணவாமனாசாரியர்க்கு இல்லை என்பது அறியலாகும்.

---

## 59 மருதவனகவிராசன் இராமநாதன்



திருநெல்வேலி ஜில்லா, திருப்புடைமருதூர்ச் சிவாலயத்தே கோமதியம்மன் சந்நிதிமண்டபத்து அமைந்த சிலாலிகிதங்களால், இராமநாதன் என்பார் 16-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்க்கவிகளுள் ஒருவர் என்று தெரிகின்றார். இச்சாஸனமுள்ள ஊர், திருப்புடைமதில், மருதவனம் என்றும் வழங்கும். அவ்வூரார் இக்கவிஞரின் புலமைத்திறத்தையும் பத்திமையையுங் கருதி, இவர்க்கு மருதவனகவிராசன் என்ற சிறப்புப்பெயரும், திருப்புடைமருதூரில் நிலமனைகளும், கோயில் விழாக்காலங்களிற் கவிபாடும் உரிமையும், நித்தியப் பிரசாதமும் அளித்துக் கௌரவித்தனர் என்று ஆங்குள்ள சாஸனங்கள் கூறுகின்றன.[1] இவ்வாறு கவிராசரைச் சிறப்பித்தது கொல்லமாண்டு 731 (கி. பி. 1554) ஆகும். திருப்புடைமருதூர் புடார்ஜுனேசுவரர்கோயில் முன்மண்டபத்திற் செய்யுளாக அமைந்த மற்றொரு சிலாலிகிதத்தில் பெருமாள் மார்த்தாண்டபணிக்காரன் என்ற அரசரால், கொல்லமாண்டு 735, சக. 1481 (கி.பி.1559)ல், சடையமாங்குளம் என்ற மற்றோர் ஊரினும் ஒருமாநிலம் இம்மருதவனகவிராசர்க்கு அளிக்கப்பட்டது என்று காணப்படுகின்றது.[2] இங்

1. M. E. R. 613, 421 of 1916.
2. Ibid. 412 of 1916.

னம் உதவிய அரசர் திருவாய்கூர்வேந்தராகவே தோற்றுகின்ருர். வேணுட்டரசர் தமிழ்மொழியை ஆதரித்துவந்தவர் என்று மேலேகூறியதற்கு இச்சாஸனமும் ஒரு தக்க சான்ருகின்றது. இவ்வாறு, அரசராலும் தமிழ்மக்களாலும் சிறப்பிக்கப்பட்ட இப்புலவரை—"ரவிவர்மன் வேணுடு மருதூர்க் கவியாகிய இராமநாதன்" என்று வேறுசாஸனமொன்று குறிப்பிடுகின்றது. இதனல் இவர் வேணுட்டைச் சார்ந்தவர் என்பது தெரியலாம்.

---

## 60 திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரம்.



கமலை ஞானப்பிரகாசர், சத்தியஞானபண்டாரம் என அழைக்கப்பெறும் இப்பெரியாரைப்பற்றிச் சைவநன்மக்கள் நன்கறிவர். இவர் திருவாரூரில் அபிஷிக்த ஆசாரியபரம்பரையிற் பிறந்தவர். சிவஞானச்செல்வம் நிரம்பப்பெற்றவராய்ப் பலருக்கு உபதேசம்செய்தும், சைவநூல்களும் புராணங்களும் பலவியற்றியும், அற்புதங்கள் பலபுரிந்துகொண்டும் 16-ம் நூற்ருண்டில் மிகப் பிரபலராய் வாழ்ந்தவர். இவரியற்றிய நூல்கள்:—சிவானந்தபோதம், பூட்பவிதி, அத்துவாக்கட்டளை, திருவாரூர்ப்பள், மழுவாடிப்புராணம் முதலியனவாம். இவர் சீடர்களாய் விளங்கியவர் பல்லோராவர். இம்முனிவரது அருமைபெருமைகள் இவர்மாணுக்கர்கள் பாடியுள்ள பண்டாரக் கலித்துறை முதலியநூல்களிற் சிறப்பிக்கப்பட்டுள்ளனவாம்.

"ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஒய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்பிரகாசன்மெய்த்தொண்டர்களே."

இத்தகைய பெரியாரைப்பற்றிச் சோணாட்டுச் சிக்கல் என்ற ஊரிலுள்ள சிவன்கோயிற் சாஸனமொன்றும்[1] குறிப்பிடுதல் அறியத்தக்கது.

"ஸ்வஸ்திஸ்ரீ மஹாமண்டலேசுவரன் சதாசிவதேவ மஹாராயர் பிருதிவிராஜ்யம் பண்ணியருளாநின்ற சகாப்தம் ௧௪௮௨ - ன் மேல் செல்லாநின்ற இரவுத்திரிஸூ ஆனிமீ ௨௨ அளிய ராமராசையகுமாரர் கிருஷ்ணமராசையன் உத்தாரப்படிக்கு அவசரம் விருபாக்ஷி நாயக்கர் - சிக்கல், வடகுடி, ஒடாச்சேரி முதலான தேவஸ்தானங்களுக்கு திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தைப் பரதேசி முத்திரையும்[1] கணக்கு எழுத்தும் அடைத்துக்கொள்ளும்படியும் பரதேசிமுத்திரைக்கு...ஸ்வதந்திரமும் பற்றிக்கொண்டு கொற்றிலக்கை கடைக்கூட்டிலக்கை நீங்கலாக ஸர்வமான்யமாகக் கட்டளையிட்டபடியாலே, சந்திராதித்தவரையும் பூசைதிருப்பணி நன்றாக விசாரித்துக்கொண்டு வரக்கடவாராக..."

இதனால் கி. பி. 1560-ல் அரசராலும் மதிக்கப்பெற்று இம்முனிவர் பிரபலராய் வாழ்ந்தமை தெரியலாம். திருமழுவாடிப்புராணம் இவரால் சகாப்தம் 1487(கி. பி. 1565)ல் இயற்றப்பட்டதென்று, அதன் பாயிரச்செய்யுள் கூறுவது இச்சாஸனகாலத்தை அடுத்திணங்குதல் காண்க. மற்றும் இவரது வரலாறுகளை விரிந்த நூல்களிற் கண்டுகொள்க.[2]

---

1. I. M. P. Tj. 898

2. இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை; ஸ்ரீ. சோமசுந்தர தேசிகர் அவர்கள் எழுதிவெளியிட்ட "பதினாறு நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர் வரலாறு"என்ற நூலால் இம்முனிவர்சரிதங்களை அறியலாம்.

## 61 காலிங்கராயன்
## உண்ணாமுலை எல்லப்பநயினார்.



திருவண்ணாமலை அருணாசலேசுவரர்கோயிற் கீழைக்கோபுரத்தில், வடமொழிச் சுலோகங்களும் தமிழ்ப்பாடல்களுமுடைய சாஸனங்கள் [1] காணப்படுகின்றன. வடமொழிப் பகுதி, சக்திமங்கலம் ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் என்பாரால் இயற்றப்பட்டது. இந்த தீக்ஷிதர், தஞ்சையரசரான இரகுநாத நாயக்கரது ஆஸ்தானகவியாக விளங்கியவர். இவர்சுலோகங்களால், சக. 1494 (கி. பி. 1572)ல், திம்மைய சின்ன செவ்வ நிருபதி, மேற்படி கோயிலின் பதினொருநிலைக் கோபுரத்தைக் கட்டிமுடித்தவர் என்பதும், அக்கோபுரம் சிவநேசர், லோகநாதர் என்ற தபஸ்விகளிருவரின் விருப்பிற்கிசைந்து, அரசர் கட்டியதென்றும் தெரியவருகின்றன. இவ்வரிய திருப்பணி செய்வித்த மன்னர், தஞ்சையிலிருந்து ஆட்சிபுரிந்த நாயக்க வரசருள் தலைவரும், திம்மையராஜருடைய இரண்டாம் புத்திரருமான செவ்வப்பநாயக்கர் ஆவர். இனி, தமிழ்ச்சாஸனம் மூன்று வெண்பாக்களால் ஆனவை. அப்பாடல்கள் வருமாறு:—[2]

"தானேற்ற மாகச் சகாத்தங்க ளாயிரத்து
நானூற்றுத் தொண்ணூற்று நாலின்மேல் - மானேற்ற
தென்னருணை நாதருக்குச் செவ்வமகி பன்கயிலை
யன்னதொரு கோபுரங்கண் டான்.

---

1. M. E. R. 419 of 1928 - 29; p. 86.

2. இவ்வெண்பாக்களும் பிரசாஸனப்பாடல்களும், ஸ்ரீ சோமசுந்தரதேசிகர் அவர்கள் வெளியிட்டுள்ள "16-ம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் வரலாறு" என்ற நூலினின்று கொள்ளப்பட்டன.

"மருவுசிவ நேசன் மகிழுலக நாதன்
இருவரும்பே ரன்பா லியற்ற—அருணையிலே
மானபரன் செவ்வ மகிபால [னப்] பதினொன்
றானநிலைக் கோபுரங்கண் டான்.

எல்லப்பநயினார் சொன்னவை.

"இருபுறமு மீன மெழுது புலியிட்
டருவரையிற் பேரெழுத வைத்—தொருவரையை
வைத்ததெனச் செவ்வ மகிபாலன் தென்னருணை
அத்தருக்குக் கோபுரங்கண் டான்.
காலிங்கராயன் உண்ணாழிலை எல்லப்பநயினார் சொன்னது."

இவ்வெண்பாக்களின் அடிக்குறிப்புக்களினின்று, இவை பாடியவர் எல்லப்பநயினார் என்ற புலவர் என்பது தெரியலாம். கோபுரத்தை அன்பாலியற்றியவராக இப்புலவர் கூறும் சிவநேசர் லோகநாதர் என்ற இருவரும் துறவிகள் என்பது வடமொழிச் சுலோகத்தால் அறியப்படுகின்றது. அவ்விருவருமே அரசரைக் கோபுரங்கட்டுவிக்கத் தூண்டியவரும் அக்கோபுர வேலையை நேரில் மேற்பார்த்து முடித்தவரும் ஆவர். சிவநேச பண்டாரம் ஆனையப்பபிள்ளை என்ற இருவரும் ஷை கோயில் ஸ்ரீபண்டார அதிகாரிகள் என்றும் அவ்விருவரும் அரசர் செவ்வப்ப நாயக்கரதுபுண்ணியமாக கி.பி. 1574 - ல் செய்த அறச்செயல்கள் இன்னவென்றும் மற்றொருசாஸனங் கூறுகின்றது.[1] இதனுட்கண்ட சிவநேச பண்டாரம், வடமொழிதமிழ்ப் பகுதிகள்கூறும் சிவநேசரே என்பது தெரியலாம். மற்றொரு துறவியான லோகநாதரை "ஸர்வதபஸ்வி லோகமஹித"[2] என்று வடமொழிப்பகுதி சிறப்பிக்கின்றது. கோயில் ஸ்ரீபண்டாரமுதலியவற்றின் மேற்பார்வை

1. M. E. R. No. 423 of 1928 - 9; p. 86.
2. Ibid. No. 425.

இத்தகைய துறவிகளிடமே அரசரால் ஆதியில் ஒப்புவிக்கப் பட்டிருந்ததாம்.[1]

இவ்வாறு, திருவண்ணுமலைப் பெரியகோபுரங்கட்டி முடிந்த செய்தியை, எல்லப்பநயினர் நேரிலறிந்து பாடியிருத்தலால், அவர்காலமும் 16-ம் நூற்றுண்டின் பிற்பகுதியே என்பது தெளிவாம். இவ்வெல்லப்பரே, வீரைக்கவிராச பண்டிதரியற்றிய சௌந்தரியலகரிக்குச் சிறந்த உரையொன்றும், திருவாரூர்க்கோவை,[2] அருணுசலபுராணம், திருவருணையந்தாதி முதலிய நூல்களும் இயற்றியவர்.

"கவிராசபண்டிதன்றன் நிறைமனங்கருதித்
தாழைமாநகரி னிலைபெற வாழ்கவி எல்லான்...
உரைதேர்ந் தெழுதினன்"

என இவ்வாசிரியரது உரைப்பாயிரங் கூறுதலால், அக்கவிராசபண்டிதரைக் காலத்தால் அடுத்துவாழ்ந்தவர் இவரென்றும் கருதலாம். இவரது பொருள்விரிக்குந் திறமும், வடமொழி தென்மொழி வன்மையும், யாமளதந்திரங்களிலுள்ள ஞானவிசேடமும் இவருரையால் வெளியாதலோடு, சிறந்த தேவியுபாசகர் இப்புலவர் என்பதும் தெளிவாகும். "வடசொற்கடற்கும் புணையானவன்...எல்லபூபதியே" என, இவரது திருவாரூர்க்கோவைப்பாயிரங் கூறுதல் காண்க. திருவண்ணுமலைக் கல்லெழுத்தொன்றில்[3] —

1. அருளுடைய தேவபண்டாரம் என்பாரும் ஷ கோயிற் பாரபத்தியம் நிர்வகித்தவர் (M. E. R. 423 of 1928 - 9).

2. இக்கோவை, மகாமகோபாத்தியாய: டாக்டர் ஐயரவர்களால் அரும்பதவுரையுடனும் ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும் சிறக்க அச்சிடப்பெற்றுச் சமீபத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

3. M. E. R. 420 of 1928 - 9.

"காணரிய தில்லை கடவூரை யாறுகச்சி
சோணகிரி வேளூர் துவாரசத்தி - கோணகிரி
தண்டாத [கா] சித் தலத்துவிடை பஞ்சசத்தி
கண்டானெல் லன்காலிங் கன்"

என்ற வெண்பாவொன்றும் உள்ளது. இஃது இவர் பலதலங்களிலும் புரிந்த சக்திப்ரதிஷ்டைகளைக் குறிப்பதாம். "அண்ணாமலையார் தம்பாகத் தம்மையு மம்மையைச் சூழ்பஞ்ச சத்தியுமே" என இவரைப்பற்றியுள்ள சாஸனப்பாடற் றொடரால், பஞ்சசத்தி திருவண்ணாமலையில் அம்மன்சந்நிதிக்குள் அமைந்துள்ளமை தெரியலாம். இவரூரான தாழைநகர் அவ்வண்ணாமலைக்கு மேற்கே 25-மைலில் உள்ள தாழையூராகும். இவ்வூரிற் பிறந்து அத்தலத்தில் வாழ்ந்தவராதலின் "திருவண்ணாமலை எல்லபூபதி" எனவும் கூறப்படுவர். இப்புலவர் எல்லன், எல்லான், எல்ல நயினன், எல்லப்ப நயினர், எல்லான்காலிங்கன் என வழங்கப்பட்டா ரென்பது, சாஸனங்கள் பாடல்களிலிருந்து அறியலாகும். உண்ணாமுலை நயினர் என்பாரை இப்புலவரின்தந்தை என்றுகூறுவர். சதாசிவதேவமகாராயர் காலத்தமைந்த திருவண்ணாமலைக் கல்வெட்டொன்றில்[1] உண்ணாமுலைநயினர் என்று கூறப்படுவார் இவரென்றே தெரிகின்றார். எல்லன், எல்லப்பன் என்பன அக்காலத்துத் தலைமக்கள் சிலர்க்கும் வழங்கிய பெயராதலின்[2] அவர்க்குள் வேறுபாடு தெரியத் தந்தைபெயரையும், அதற்குமுன் தங்கோத்திரப் பெயரையும் விசேடணங்களாகக் கொண்டு இவர் காலிங்கராயன் உண்ணாமுலை எல்லப்பநயினர் எனப்பட்டார் என்க. தென்னார்க்காடு ஜில்லா, கள்ளக்குறிச்

1. I. M. P. S. A. No. 591.

2. "எல்லப்பனம்மையப்பன்" "ஆறைநகரெல்லன்" (பெருந்தொகை, 1729, 1228) எனக் காண்க.

கியைச் சார்ந்த வடதிருவரங்கம் திருமால்கோயிற் சாஸன மொன்றில் [1] —

"தென்னன் தமிழ்வளருந் தென்னரங்க ராசனுர்
மன்னுங் கரியமுகில் வண்ணனுர் - அங்கணேந்து
வெண்ணேயாற் ருர்கிலவா? லுருகி மடலேந்து
பெண்ணேயாற் ருரிவர்...

—காலிங்கராயன் உண்ணுமுலை எல்லப்பர் சொன்னது"

என்ற பாடல் உள்ளது. இதனுல், திருமால்பத்திமையும் இவர்பாலுண்டு என்பது தெரியலாம். இப்புலவர் காலத்தில், சேறைக்கவிராசர் என்ற ஆசுகவியொருவரும் விளங்கினர் என்பது தமிழ்நாவலர்சரிதையால் அறியப்படுகின்றது. இவ் வாசுகவி, திருக்காளத்திநாதருலா, சேயூர் முருகனுலா முதலியன இயற்றியவர். தொண்டைநாட்டுக் கருணீகர்மரபிற் கடிகையார் [2] குடியினரான இப்புலவர் தென்பாண்டிநாடாண்ட சீவலமாறன் என்ற பாண்டியனை—

"இந்தத் தேசப் புலவர் மனத்துக்
கிடியென வந்தேன்காண்
இராமா [3] சீவல மாற பாண்டிய
ராச வரோதயனே" (தமிழ்நா, 239)

என்று பாடியிருத்தலின், அப்பாண்டியன் காலத்தவர் இவர் என்பது தெரியலாம். அவ்வரசன் பட்டம்பெற்றது, கி. பி. 1564-ம் ஆண்டாகும். கி. பி. 1572-ல் திருவண்ணுமலைக்

---

1. M. E. R. 131 of 1918-C.

2. கடிகையாரைப்பற்றி 'முத்தமிழாசிரியர் பெருநம்பி' யின் வரலாற்றுட்காண்க.

3. 'சீவிலிமாறு' என்றும் பாடம். சீவலன், சீவிலி என்பன 'சீவல்லபன்' என்பதன் திரிபு.

கோபுரங் கட்டிமுடித்ததை எல்லப்பநயினர் பாடியதற்கேற்ப, சேறையாசுகவி பாடிய அப்பாண்டியன்காலம் அமைதலும் அறியத்தகும்.* இவ்வாசுகவிராசர், அண்ணுமலைநாதர்மேல் வண்ணப்பிரபந்தமொன்று பாடி அத்தலத்தில் அரங்கேற்ற அதற்கு உவந்த தலத்தார், அப்புலவரைச் சிவிகையில் வைத்து ஊர்வலஞ் செய்வித்துச் சிறப்பித்தனர் என்றும், அப்போது எல்லப்பநயினர் அதனைப் பொருட்படுத்தாது ஒதுங்கியிருந்தனராக அதுபொருத பரமேச்சுரப்புலவர் என்பார்—

"கண்ணுர்[1] மதிக்குங் கவிராச சிங்கங் கடந்திரு
வண்ணு மலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணு யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தான்
உண்ணு முலையெல்லன் மூலைக ளோறு மொதுங்கினனே"
(தமிழ்நா. 240)

என இழித்துப்பாடினர் என்றும், அதற்கு வெகுண்டு எல்லப்பநயினர்—

"பாழ்ப்பா மடத்துப் பரமாவுன் பாழ்ங்கவிதை
கேட்பாரெல் லாம்புத்தி கெட்டபேர் - தோட்பாவும்
ஓணன் விழுந்தாலு மூண்டுபரி காரமிது
வாணு ளளவே வரும்" (ஷை. 241.)

என்று வசைபாடினர் என்றும் தமிழ்நாவலர்சரிதை வரலாறு கூறுகின்றது. இப்பாடல்களால் ஆசுகவிராசரது புலமையில் இவ்வெல்லப்பர்க்கு மதிப்பில்லை என்பதும், அது பற்றி அக்கவிராசரைச் சார்ந்தோர்க்கு இவர்பால் வெறுப்பு மிக்கிருந்த தென்பதும் புலனும்.

1. கண்ணுர் என்பது அருணசலேசுரர் திருநாமம்; 'கண்ணுரண்ணு' என்பது தேவாரம். 'கண்ணு மதிக்கும்' என்றும் பாடம்.

திருவண்ணுமலையில், தாண்டவவாணன் என்ற செல்வர் செய்த திருப்பணிகளைப் புகழ்ந்து—

"அண்ணலரு ணசலருக் காவணிமூலத் திருநாட்
பண்ணிமணி மண்டபமும் பண்ணுவித்தான் - மண்ணிலிசை
தீட்டினன் காவுந் திருவீதி யுங்குளமும்
நாட்டினன் தாண்டவவா ணன்"

என்ற வெண்பாவொன்று இவரைாற் பாடப்பட்டதென்று கல்லெழுத்தால் தெரிகின்றது [1]. இத்தாண்டவவாணன் திருக்கோவலூரினராகத் தோற்றுகின்றார். இவரைப்பற்றிய தனிப் பாடல்களுஞ் சிலவுள (பெருந்தொகை, 1277 - 8).

இனி, சைவ எல்லப்பநாவலர் என்பார், இவ்வெல்லப்ப நயினர்க்குப் பிற்பட்டவரும், தஞ்சைஜில்லா இராதாநல்லூரினரும், திருவெண்காட்டுப்புராண முதலியவற்றின் ஆசிரியருமாவர் என்பர். ஆதலின், அவ்விருவரையும் ஒருவராகக் கொள்ளுதல் தவருகும். அருணையில்வாழ்ந்த இவ்வெல்லப்பரை, எல்லபூபதி என்றும் திருவாரூர்க்கோவை யிறுதிப் பாயிரச்செய்யுள் கூறும். இருவகைச் செல்வங்களும் நிரம்பியவராய்க் கொடைமுதலிய பெருங்குணங்களுடன் வாழ்ந்தவர் இப்புலவர் என்பது, தஞ்சைஜில்லா பந்தணைநல்லூர்ச் சிவாலயத்து அமைந்த பாடல்கள்சில இவரைப் பெருஞ் செல்வரைப்போலவே புகழ்ந்து கூறுதலினின்று அறியப் படுகின்றது. அப்பாடல்கள் வருமாறு:—[2]

"நன்காவி வாடுவள நாட்டமெனுங் காவியினி
யுன்காவி கண்டா லுறங்காதோ - தென்கலைபா
ராட்டியமூ தண்டமெலா மன்னைமுன்னே வாய்திறந்து
காட்டியவெல் லாகாவிங் கா"

1. M. E. R. 420 of 1919.
2. Ibid. 117, 118 of 1831 - 2; p. 68.

"எம்பார காலிங்க னெல்லனைக் காப்பவ ரெண்ணிலொற்றைக்
கொம்பாருந் தம்பி குகனுரு மக்குக னுரைப்பெற்ற
வம்பார் சடையரண் ணுமலை யாருமண் ணுமலையார்
தம்பாகத் தம்மையு மம்மையைச் சூழ்பஞ்ச சத்தியுமே"

"நாலங்க வாளிபொற்றுள் நாரியரே பாரியிலும்
மேலங்க மானகொடை வேளாளன் - காலிங்க
னெல்லன்கைக் கேபெறுமோ விந்திரசீ லங்கருப்பு
வில்லன்கைக் கேபெறுமோ மின்"

"கதையா யிதுசொல்லப் போதுநங் காவிற் களிறுபுக்காற்
சிதையா தனதழை கண்டறி யேஞ்செங்கை வேலர்பொற்று
ளிதையார விந்தத் திருத்திய காலிங்க னெல்லன்வெற்பில்
மதயானை யைத்தழை யேசெற்ற தாமிவர் வல்லபமே"

## 62 அதிவீரராமபாண்டியன்.



நைடதம், கூர்மபுராணம் காசிகண்டம், முதலிய நூல்களை இயற்றிப் புகழ்பெற்ற பாண்டியர் வழித்தோன்றல் அதிவீரராமரைப்பற்றி அறியாதாருண்டோ? இவர் தென்காசியிலிருந்தாண்டவருள், வீரவெண்பாமாலைத் திருநெல்வேலிப்பெருமாள் குலசேகரபாண்டியனது மூத்தமகனாராய், சக. 1486 (கி. பி. 1564)ல் பட்டமெய்தினர்.

"சகன்கால மாயிரத்து நானூற்றெண் பத்தாறிற் சலதி சூழ்ந்த
செகங்காண விரத்தாக்கி சித்திரையி லிருபதாந் தேதி வேந்தர்
புகழ்ந்தேவல் செய்பூர்வ திதியாறில் முதல்வாரம் புனர்பூ சத்திற்
சுகந்தாதி புனையழகன் சீவலவே ளனமகுடஞ் சூடி னனே"[1]

1. T. A. S. Vol. i, p. 106.

"கோ ஜடிலவர்மரான திரிபுவனசக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பாமாலையான் தன்மப்பெருமாள் குலசேகரதேவர் நந்தனரான அழகம்பெருமாள் அதிவீரராமரான ஸ்ரீவல்லபதேவர்" [1]

என்பன இவரைப்பற்றிய சாஸனப் பகுதிகள். சீவலவேள் என்பது ஸ்ரீவல்லபவேள் என்பதன் திரிபாம். இவர் தந்தை வீரவெண்பாமாலை சூடியவர் என்பதனால், அவர், புலவர் பாடிய புகழுடையார் என்பது விளங்கும். அத்தகையோரது மகனாகிய இவரும், புலவரைப்போற்றியும் தாமே பெரும் புலமைவாய்ந்தும் விளங்கினர். சேறை ஆசுகவிராசர் என்ற பெரும்புலவர் இச் சீவலவேளாகிய அதிவீரராமரது புலமை யையும் கொடைத்திறத்தையுங் கேட்டு நெடுந்தூரத்தினின்று இவ்வேந்தரை அணுகிப்பாடிய செய்தி, எல்லப்பநயினார் வர லாற்றுட் கூறப்பட்டது. "ஆசிலுரைக்குங் கவிதைகள் கேட் டென்பால் வரிசைகள் பரிசில்கள் நல்கி" (தமிழ்நா. 239) என இவர் இப்பாண்டியரை வேண்டியிருத்தலால், ஆசுகவிகளின் திறமையை அளந்தறியவல்லவர் இவ்வரசரென்பது தெரி யலாம். 'திருவண்ணாமலைப் புலவன் சிதம்பரநாதன்' என் பார்க்கு இவ்வதிவீரராமன் கோயிலில் திருப்பாட்டுக் காணியாட்சி அளித்தனர் என்று ஒருசாஸனங் கூறும். [1] இதனாற் புலவர்கள்குடும்பத்தில் இவர் வைத்திருந்த அபி மானம் புலனாகின்றது. இதனுடன் சிவபத்தியினுஞ் சிறந் திருந்தனர் இப்பாண்டியர். தென்காசிப் பெரியகோயிற்கு மேல்பால் தம் தந்தைபெயரால் இவர் கட்டிய சிவாலயத் தாலும் இஃது அறியப்படும். இப்பாண்டியன் 40-ஆண்டு கட்குமேல் ஆண்டனன் என்பர். தமிழ்நாவலர் சரிதையில், ஆறை ஏகம்பவாணன் "நாலு தாதியரைப் பாண்டியன்மாலை

1. T. A. S. Vol. i, p. 279—280.

வாங்கிக்கொண்டுவர அனுப்ப அவர் பாடியவை'' என்ற தலைக்குறிப்புடன் அடியில் வரும் வெண்பாக்கள் காணப் படுவன:—

"தென்னவா மீனவா சீவலமா றமதுரை
மன்னவா பாண்டி வரராமா - முன்னஞ்
சுரும்புக்குத் தாரளித்த தூயதமிழ் நாடா
கரும்புக்கு வேம்பிலே கண.

"மாப்பைந்தார்க் கல்லமுத்து வண்ணத்தார்க் கல்லவஞ்சி
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே—பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சீவலமா றதமிழை
ஆய்ந்திருக்கும் வீரமா ற.

"வேம்பா கினுமினிய சொல்லிக்கு நீயந்த
வேம்பா கினுமுதவ வேண்டாவோ - தேம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள் மான்.

இந்தமூன்றுகவிக்கும் மாலைகொடாமலுகப்
பின்னேநுத்தி பாடியது.

இலகு புகழாறை யேகம்ப வாண
னலகை [1] வரும்வருமென் றஞ்சி—உலகறிய
வானவர்கோன் சென்னியின்மேல் வண்ண வளையெறிந்த
மீனவர்கோன் கைவிடலன் வேம்பு.

இதுகேட்டு மாலைகொடுத்தான்.''

என்ற பாடல்கள் வரலாற்றுடன் கூறப்பட்டுள்ளன. [2] இவற் றிற் சீவலமாறன், ராமன், வீரமாறன் என்ற பெயர்கள்கொண்

1. 'பூதத்துணைகொண்ட போர்வாணன்''(பெருந்தொகை, 1344) எனப்படுதலால், வாணனது போர்வெற்றிக்குப் பூதமொன்று துணை புரிந்துவந்ததாக அக்காலத்துக் கருதப்பட்டது என்பது தெரியலாம். அக்கருத்தேபற்றி 'ஏகம்பவாண னலகை வரும்வருமென் றஞ்சி' என ஈண்டுக் கூறப்பட்டதென்க. 2. தமிழ்நா. 179 - 82.

டுள்ள பாண்டியன் ஸ்ரீவல்லபனாகிய அதிவீரராமனாகவே தெரிதலால், ஏகம்பவாணன் இவற்குப்பகைவன் என்பது அறியப்படும். மாவலிவாணர்கள் பாண்டிநாட்டில் தலைமைவகித்து வந்தனரென்பதை முன்னரே குறிப்பிட்டுளேன் (பக்131). நடுநாட்டு ஆறகழூரை (ஆறையை)த் தன் தலைநகராகக்கொண்டவனாதலின் ஆறையேகம்பவாணன் எனப்பட்டான். இவன், தன் தாசிகளை ஒற்றர்களாக அனுப்பிப் பாண்டியன்மேற் கவிபாடச்செய்திருத்தலாலும், 'தமிழை ஆய்ந்திருக்கும் [1]வீரமாறு' எனவருந் தொடராலும் இப்பாண்டியன் செந்தமிழிற் புலமையும் அதன்பால் அபிமானமும் மிக்கவன் என்பது தெரியலாகும். இவனால் புதுக்கோட்டைத் தானசாஸனம் பெற்ற அந்தணருள், நைஷதம் ராமகிருஷ்ணர் என்பாரும் ஒருவர். இதனால், இப்பாண்டியர் நைடதம்பாடியதற்கு இவ்வந்தணர் துணைபுரிந்தவர்போலும் என்று கருதப்படுகின்றது. [2]இவ்வரசர்க்கு அழகசொக்கனார் அபிராமபாண்டியன் என்ற மகனார் ஒருவருண்டென்பதும், அவரும் தமிழ்ப்புலவர்களிடம் ஆதரவுடையராயிருந்தவர் என்பதும்—

"சோழவளநாட்டு நடுவுமண்டலத்துப் பெரும்பற்றப் புலியூர் நயினார் திருவம்பலமுடையநயினார் திருப்பூ மண்டபத்தாரில் திருவண்ணாமலைப்புலவர் சிதம்பரநாதன் திருமூலநாதமுதலிக்கு பண்டை மனையும் பழம்பேரையுந் தவிர்த்துத் திருப்பாட்டுக்காணியாட்சையாகக் கற்பிக்கும்படிக்கு நம்குமாரன் அழகசொக்கனார் அபிராமபாண்டியன்...ஓலையும் விடுகையில்"

எனவரும் இவ்வதிவீரராமரது சாஸனப்பகுதியால்[3] அறியப்படுகின்றன. இவ்வபிராமன், அடுத்துக்கூறப்படும் அபிராமன் வரதுங்கராமபாண்டியனின் வேறானவன் என்றே தெரிகின்றான்.

---

1. 'அதிவீரன்' என்பது பெயராதலின், வீரமாறன் எனப்பட்டான் என்க. 2. T. A. S. Vol. i, p. 58. 3. Ibid. 279 - 80.

## 63 வரதுங்கராம பாண்டியன்.



மேற்கூறிய அதிவீரராமற்குப்பின் பட்டமெய்தி, அவனைப்போலவே தமிழிற் பெரும்புலமைவாய்ந்து விளங்கியவன் வரதுங்கராமபாண்டியன் ஆவன். அதிவீரராமனுடைய பெரியதந்தையாய் ஆட்சிபுரிந்த பராக்கிரமபாண்டியனுடைய திருமகன், இவ் வரதுங்கன். தன் தந்தை இறந்தபோது இவன் சிறுகுழந்தையா யிருந்தமையால், இவனுடைய சிறியதந்தையான திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரபாண்டியன் அரசியலையேற்று ஆட்சிபுரிவா னாயினன். அக்குலசேகரற்குப் பின் பட்டமெய்திய அவன்மகன் அதிவீரராமபாண்டியனது ஆட்சிக்காலத்தே இவ்வரதுங்கன் இளவரசாய் இராஜகாரியங்களை அப்பாண்டியனுடன் சேர்ந்து நிர்வகித்து வந்தான்.[1] இவன் சிங்காதனமேறிய காலம் சக. 1510 (கி. பி. 1588) ஆகும். இவன் பட்டமெய்தற்கு முன், அழகிய சொக்கனார் அபிராமன்[2] வரதுங்கராமன், அபிராமசுந்தரேசுவரன் என்றும், பட்டமெய்தியபின் வீரமாறன், அபிஷேக வீரபாண்டியன் என்றும் பெயர்பெற்றனன். இவன் தன் முன்னோனைப் போலவே, நல்லிசைப் புலமைவாய்ந்த கவியாக விளங்கினான். பிரமோத்தரகாண்டம் என்ற நூல் இப்பாண்டியனாற் பாடப்பெற்றதாகும். இவற்கு ஞானாசிரியராயிருந்தவர் நிம்பை ஈசான முனிவர் என்பார். இப்பாண்டியனது கவித்திறமையைப் பற்றி முன்னோர் பாடிய அழகிய செய்யுளொன்று அடியில்வருமாறு:—

1. T. A. S. i, pp. 57-59; M. E. R. p. 93, 1906-6.
2. M. E. R. 594 of 1915; 343 of 1929-30.

"பூணித் திலத்துப் புயல்வீர மாறன் புகல்கவிக்கு
நாணிப் புலவர்செல் லாதென்செய் வாரிந்த நானிலத்தே
ஆணிக் கனக மணந்தரிற் பூமணம் யார்கொள்ளுவார்
மாணிக்கந் தித்திக்கி லென்னுகு மற்றை மதுரங்களே" [1]

(பெருந்தொகை, 968)

இப்பாண்டியன் தேவியும் சிறந்த தமிழ்ப்புலமை வாய்ந்திருந்தவள் என்பது, தமிழ்நாவலர்சரிதையுள் அவள் பாடியனவாகக் காணப்படுஞ் செய்யுட்களால் (165-7) அறியப்படுவதாம். அவை வருமாறு:—

"பாண்டியன்தேவி பணியாரக்கூடத்துள் மதுரைக்கு விடுத்த கவி"

"என்னையவ ரமறந்தும் யானவரை
மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்றானே விப்பிறப்பிற்
செய்ததவ முடிந்த வாறோ
கன்னன்மத னபிராமன் வரதுங்க
ராமனியற் காசி நாட்டில்
அன்னவயற் குருகினங்கா ளினியெவ்வா
றுயிர்தரித்திங் காற்று வேனே"

"செப்பாரு முகிழ்முலையா ரெல்லாருங்
கணவருடன் சேர்ந்து வாழ
ஒப்பாரு மில்லாவென் கணவருடன்
யான்கூடி யுறவா டாமல்
வெப்பாலு மிகுகாமத் துயராலும்
நாடோறு மெலிந்து வாடி
இப்பாடு படவென்றோ விறையவனென்
றலையேட்டி லெழுதி னானே"

"எண்டிசா முகமுந் திங்க ளிளநிலா வெள்ளங் காலக்
கொண்டமால் பெருகுந் தோறுங் கொழுங்கணீர் முலையிற் கோப்பப்
பண்டுநா மறியாக் காமத் துயரினுற் படுவ தெல்லாம்
வண்டுகா ளுரையீ ரந்த வரதுங்க ராமனுக்கே"

---

## 64 காசிக்கலியன் கவிராயர்.



மேற்கூறிய வரதுங்கராமனது ஆஸ்தானத்தை அலங்கரித்து விளங்கிய புலவர் இவர். அப்பாண்டியன் பட்டமெய்திய காலத்தில் இக்கவிராயர் பாடிய பஞ்சரத்னமாலை ஆகிய வெண்பாக்கள், தென்காசி ஸ்ரீவிசுவநாதராலயத்தின் கோபுர நிலைக்கல்லில் வரையப்பட்டுள்ளன. அவற்றுள்ளே முதல் வெண்பா, அபிராமன் என்ற அரசன் வீரபாண்டியன் என்ற அபிஷேகநாமம் பெற்று மகுடஞ்சூடியதையும், 2, 3, 4-ஆம் வெண்பாக்கள், முறையே குடைமங்கலம் வாண்மங்கலம் நாண்மங்கலம் என்ற புறத்துறையமைய அவ்வரசன் சிறப்புக்களையும், ஐந்தாம் செய்யுள், பாடப்பெற்ற விஷயத்தோடு பாடிய புலவரின்னர் என்பதனையும் குறிப்பன. அப்பாடல்கள் வருமாறு:—

"சீர்கொண்ட செங்கமலை வாழத் திரையாடைப்
பார்கொண்ட வேள்வீர பாண்டியனென்—றேர்கொண்ட
கானுலா மாலைக் கனகமகு டம்புனைந்தான்
மனவே லானபிரா மன்"

"சேனுலவு வெண்டிங்கட் செல்வனெனத் தண்ணென்று
நீணிலமோ ரேழு நிழற்றுமே—பேணிவந்து
பூவேந்த ரேத்தும் புகழ்வீர பாண்டியனங்
கோவேந்தன் கொற்றக் குடை"

"பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்கும்
கொற்ற முயர்க்குமறங் கூருமே - விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்"

"நண்புற் றெதிர்ந்தகலி நாலா யிரத்தறுநூற்
றெண்பத்தொன் பானி லிருங்கடல்சூழ் - மண்பெற்று
மின்னுமகு டம்புனைந்தான் வேல்வீர மாறனென
மன்னவர்கோ மானபிரா மன்"

"கற்றுணர்ந்தோன் காசிக் கலியன் கவிராயன்
மற்றடந்தோள் வேல்வீர மாறனுக்குச்—சொற்புனைந்தா
[1] ணுண்மங் கலமு நவிற்று [2]குடை மங்கலமும்
[3] வாண்மங் கலமும் வகுத்து"

இவற்றால், தென்காசி நகரினரான கலியன் கவிராயர் என்பார், வரதுங்கராமன் ஆகிய வீரபாண்டியன் பட்டாபிஷேகம்பெற்றகாலத்து, அவனதுவாயிற் றலைமைப்புலவராய் இம்மங்கலப் பாடல்களை இயற்றியவரென்பது பெறப்படும். நாண்மங்கல மென்பது, அரசனது பிறந்தநாட்சிறப்புரைப்பதாயினும் இவனது ஆட்சிதொடங்கிய நாளைச் சென்மதினத்துக் கொப்பக்கொண்டு இக்கவிராயர் பாடியுள்ளார். இப்பாண்டியன் வில்லவனை (சேரனை) வென்றதும், வல்லமெறிந்ததும் இவன்பட்டமெய்தியதற்கு முன்னிகழ்ந்தவை என்பது இப்பாடல்களாற் பெறலாகும். இவற்றுள் பாண்டியன் வல்லத்துப்போர் வென்றதைப் புதுக்கோட்டைச் சாஸனமும் கூறுவதாம். [4] இவ்வரசனால் வெல்லப்பட்ட வில்லவன் என்

1. நாண்மங்கலமாவது—"அறந்தருசெங்கோ லருள்வெய்யோன், பிறந்தநாட் சிறப்புரைத்தன்று"

2. குடைமங்கலமாவது—"நாற்றிசையும் புகழ்பெருக, வீற்றிருந்தான் குடைபுகழ்ந்தன்று."

3. வாண்மங்கலமாவது—"கயக்கருங் கடற்றானை, வயக்களிற்றான் வாள்புகழ்ந்தன்று" (பு. வெ.)

4. T. A. S. i, p. 84—வல்லத்தை, வல்லப்ராகாரம் என்று இவ் வடமொழிச் சாஸனங் கூறும்.

பான், திருவாங்கூர் அரசன் என்பர். இங்ஙனம் பாடிய கவி யன்கவிராயர் வாக்கினின்று, இவரது நல்லிசைப்புலமையும் சொல்லிசைத்திறமும் நன்குவிளங்குவனவாம்.

## 65 அனதாரியும் திருவிருந்தானும்.



“கம்பனென்றுந் தாதனென்றுங் காளியொட்டக் கூத்தனென்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ-அம்புவியில் [றுங்
மன்னு வலர்புகழும் வாயலன தாரியப்பன்
அங்நாளி லேயிருந்தக் கால் (தொண். சத.)

என்ற பாட்டொன்று தொண்டைமண்டலசதகத்துள் மேற்கோள் காட்டப்பட்டுளது. இதனால் அனதாரியப்பர் என்பார் கூத்தர், தாதன், காளி,[1] கம்பன் என்ற பெருங்கவிஞர்க்குப் பிற்காலத்தே, அன்னோரையொப்ப விளங்கிய புலவர் என்பது விளங்கும். இவரூராகிய வாயல், தொண்டை நாட்டதாம். இவர் இளமையிற் சோணாட்டுக்குவந்து, அங் நாட்டு உறத்தூரிலுள்ள தண்டமிழ்மேகமாகிய வேதியரொருவர்க்கு அடிமையாகி, அவரால் தமிழ்ப்புலமையில் தக்கோராய் விளங்கினர் என்றும், அக்காலத்துக் கன்றுப்பூர்த் தலைவரான சிங்கராயன் என்பார் இவரருமையறிந்து, தக்க விலைப்பொருளை அவ்வேதியர்க்கு அளித்து இவரைத் தம்பாற்கொண்டு ஆதரித்துவந்தனரென்றும், அங்நாளில் இவரது புலமைச்சிறப்பு, அச்சிங்கராயற்குப் பகைவனான கன்னைத் தண்டாயுதனாலும் பெரிதும் மதிக்கப்பட்டதென்றும், தொண்டைமண்டலசதகம் (51) சோழமண்டலசதகங் (52)

1. தாதன் என்பான் கம்பர்காலத்தவனாய் அவருடன் பகைமை பூண்ட வாணியன்தாதன் என்ற புலவனாவன் (தமிழ்நா. 102). காளி-நம்பிகாளி என்ற பெரும்புலவர் ஆவர் (இந்நூல், பக். 63).

களால் தெரியவருகின்றன. இப்புலவர்பெருந்தகையாற் பாடப்பெற்ற நூல் சுந்தரபாண்டியம் என்பதாம். இது, மதுரைமாதேவியான தடாதகைப் பிராட்டியின் அவதாரம் திக்குவிசயம் திருமணமுதலிய வரலாறுகளை, அப்பெயரே பெற்றுவழங்கிய வடநூலொன்றைத் தழுவி, 3000-பாடற்கு மேலாக விரியவுரைக்கும் பெருங்காப்பியமாகும் என்பதும், அதனாசிரியர் வரலாறுகளும் மகாவித்வான்: இராகவையங்கார் அவர்களாற் கண்டு பல்லாண்டுகட்கு முன்பே வெளியிடப்பெற்றுள்ளன.[1] இக்காப்பியம் கல்லூர், மன்றை என்ற ஊர்களின் தலைவனும் 'கச்சி வீரப்பன்' என்ற அரசற்கு அமைச்சனுமான திருவிருந்தான் என்பாரது வேண்டுகோட்படி இப்புலவராற் பாடப்பெற்று, அவரதவையில் அரங்கேற்றப்பெற்றதாம்.

"அன்னவ னரசர் சூழுங் கச்சிவீரப்ப னென்னும்
மன்னவ னருள்சேர் மன்றைச் செவ்வந்தி துணைவன் வாய்மைத்
தென்னவன் திருவிருந்தான் சவுந்தரன் தேவ பாடைத் [தேன்
துன்னிருங் கதைதென் னூலாற் சொல்கெனச் சொல்லலுற்
(நகரச்சருக்கம். 47)

"குடக்கொடு குணக்குநிறை யத்திறை கொடுப்ப
வடக்கரச ரிற்கரு நடப்படையை மாறுய்த்
திடத்தொடுசெ வந்திதுணை வன்றிரு விருந்தான்
அடர்த்தசெய விற்பொரு தடாதகை யடர்த்தாள்" (விசய. 23)

"மதுரை நாயகன் சுந்தர பாண்டிய வடநூல்
கதிரு லாமணி யாறுகாற் பீடத்திற் கல்லூ
ரதிப னச்சிரு விருந்தவ னவையினில் வாயற்
பதியில் வாழன தாரிசெந் தமிழினிற் பகர்ந்தான்" (பாயிரம்)

1. செந்தமிழ், தொகுதி - 4, பக். 371--75.

இவற்றால், திருவிருந்தான் என்பார் செவ்வந்தியின் சகோதரர் என்பதும், கச்சி வீரப்பர் என்ற அரசரின் தள பதியாய்க் கன்னடப்படையை வென்றவர் என்பதும் விளங் கும்.[1] கச்சி வீரப்பர் என்பார், மதுரை ஆண்ட நாயக்கவரச ருள் முத்து வீரப்பநாயக்கர் (கி. பி. 1609-23) ஆவர். இவர் முதல் வேங்கடபதிராயர் என்ற விஜயநகரவேந்தர் காலத்து மதுரைச் சீமையை ஆண்டவர்.[2] விசுவநாத வீரப்பநாயக்க ரெனவும் வழங்கப்பெறுவர். கன்னடப்படையை இந்நாயக்கர் வென்றார் என்பது, மைசூரரசரான ராஜவுடையாருடன் நடத்திய திண்டுக்கற்போரின் வெற்றியை என்றும் அவ் வுடையாரது படையெடுப்பை எதிர்த்துவென்ற தளபதி திருவிருந்தான் என்றும் தோற்றுகின்றன. இவரூராகிய மன்றை ஸ்ரீரங்கத்துக்கு வடக்கிலுள்ள தென்பது—

"உருவந்திக ழரங்கக்கரு மணியுத்தரத் தோருபால்
மருவுந்திரு விருந்தான்வரு மன்றைப்பதி யிதுவே"

(நகர்புகுசருக்கம்-20)

என்னும் சுந்தரபாண்டியச் செய்யுட்பகுதியால் அறியலாம். திருவிருந்தான் தமையனாராக அக்காப்பியங்கூறும் செவ் வந்தி என்பாரும் நாயக்கரது தலைமையதிகாரியாய் வாழ்ந்த வர் என்பது 'செவ்வந்திதுணைவன் திருவிருந்தான்' என அவர் விசேடிக்கப்படுதலாற் பெறப்படும். "செவ்வந்திதம்பி திரு விருந்தான் மன்றை"[3] என்று வேறு புலவரொருவரும் இவ்

---

1. நாயக்கவரசரின் முன்னோர் காஞ்சீநகரத்தினராவர். 'காஞ்சீ புரத்து விசுவநாத கிருஷ்ணப்ப நாயக்கரய்யன்' என்பது சாஸனத் தொடர் (255 of 1929-30; p. 87).

2. History of the Nayaks of Madura, pp. 98—106.

3. பெருந்தொகை, 1268.

னமே பாடுவர். இச்செவ்வந்தி மதுரையிற் செவ்வந்தியீசர்க்குக் கோயிலொன்று சக. 1486-ல் அமைத்தவர் என்று, அந்நகர்த்திருப்பணிமாலை கூறுகின்றது. இவ்விருவரும் கல்லூர்ச் சனிப்பெருமாள் என்பவரின் புதல்வர்கள் என்பது, "திருவளர்கல்லூர்ச் சனிப்பெருமாள் தந்த செவ்வந்தியே" என்ற அத்திருப்பணிமாலைத் தொடராற் புலப்படுவதாம். இனி, திருநெல்வேலி ஜில்லா, கூடற்குடியாகிய கோலவார்பட்டிச் சொக்கநாதர் கோயிலில் உள்ள சாஸனமொன்று—[1]

சகாப்தம் 1534 (கி. பி. 1612)-ல் தொண்டைமண்டலத்துப் பழுவூர்ச் சேக்கிழார் அரியநயினார் என்பார், ஜடிலவர்மன் அழகியசொக்க வரதுங்கராம வீரபாண்டியன், வேங்கடபதிராயர், விசுவநாதநாயக்க முத்துவீரப்ப நாயக்கர், செவ்வந்திநாதபிள்ளை, திருவிருந்தபெருமாள்பிள்ளை இவர்கள் புண்ணியமாக ஷ சிவாலயத்துக்குப் பூமியளித்தனர்—

என்ற செய்தி கூறுகின்றது. இக்கல்லெழுத்தினின்று, செவ்வந்திநாதரும் திருவிருந்தானும் வேளாண்மரபினராய் முத்துவீரப்பநாயக்கர் ஆட்சியில் தலைமைவகித்து விளங்கியவர்கள் என்பதும், மேலேகூறிய வரதுங்கராம பாண்டியன்காலத்தும் வாழ்ந்தவர்கள் என்பதும் பெறப்படுவன. இவருள் திருவிருந்தான் என்பார் திருவிருந்தபெருமாள் பிள்ளை என வழங்கப்பட்டமையும் அறியத்தகும்.. இத்திருவிருந்தானும் இவர்சகோதரரும் முத்துவீரப்பரது முன்னோர் காலத்தினும் பெரும்பதவி வகித்தவர்கள் என்பது மதுரைத் திருப்பணிவரலாறுகளால் தெரியவருகின்றது. மேற்கூறிய சாஸனஞ் செய்த அரியநயினார், நாயக்கராஜ வமிசத்தைத்தாபித்துப் பிரபலம்பெற்ற தளவாய் அரியநாதமுதலி

1. M. E. R. 348 of 1929-30.

யாரின் வழியினர் போலும். இவற்றால், அனதாரியப்பராற் புகழப்பட்ட தலைவரின்வரலாறு சாஸனவாதரவு பெறுதல் அறியத்தகும்.

---

## 66 குருநமச்சிவாய தேசிகர்.



இவர், அருணகிரியந்தாதி தனிவெண்பாமாலை முதலியவற்றின் ஆசிரியரும், திருவண்ணாமலைக் [1]குகை-நமச்சிவாயர் என்று பிரசித்திபெற்ற பெரியாரின் சிஷ்யருமாவர். பரமராசியமாலை, சிதம்பரவெண்பா, அண்ணாமலைவெண்பா முதலிய நூல்களின் ஆசிரியர் இவர். சிதம்பரமாகிய தில்லைச்சிற்றம்பலத்திற்குத் தம்குருவின் ஆணைப்படி பல திருப்பணிகளும் புரிந்தவர். வட ஆர்க்காடு ஜில்லா விரிஞ்சிபுரம் சிவாலயத்தின் சந்நிதிமுகப்பிற்கண்ட சாஸனமொன்று—

விஜயநகர வேந்தரான வேங்கடபதிதேவராய ராட்சியில் சகாப்தம் 1514 (கி. பி. 1592)நந்தன ஆ புன்னூற்றார் பெரிய எறம்ம நாயக்கரென்பார் சிதம்பரம் குருநமசிவாயர் அடியார் ஆனந்தநமசிவாய பண்டாரம் அவர்களுக்கு மடமொன்று உதவினர்—

என்ற செய்தி கூறுவதாம்.[2] இதனால், குருநமச்சிவாயர், வேங்கடபதிராயர்காலத்தை யொட்டிச் சிதம்பரத்தே

1. குகை என்பது பிராமணரல்லாத சைவத்துறவிகள் வாழ்ந்த மடமென்பர் (M. E. R, 471 of 1917-B). "திருநாவுக்கரசு திருக்குகையில் அபூர்விகள்"என்பது சாஸனத்தொடர் (219 of 1917-B). குகை ஈஶ்வரஸ்வாமியார் என்ற பெரியாரொருவர் வடகொங்கில் 300-ஆண்டுகட்குமுன் பிரபலராயிருந்தனர் என்று தெரிகின்றூர் (509 of 1929-30; 1 of 1930-1). 2. S. I. I. Vol. i, No. 58.

வசித்துவந்தவர் என்பது தெரியலாம். அத்தலத்தின் தெற்குக் கோபுரவாயிலிற் கண்ட சாஸனமொன்றும்—சகஸூ 1510 (கி. பி. 1588)ல், ஷை இராயரே, பரதேசிகள் இருபதின்மருக்குக் கோயிலில் நித்தம் உணவளித்தற்கு வேண்டிய நிபந்தஞ்செய்து, அத்தர்மத்தைக் கண்காணித்து நடத்தி வரும் உரிமையை, சிதம்பரக் கட்டளைகளையெல்லாம் மேற்பார்த்துவந்த நமச்சிவாய உடையாரிடம் ஒப்படைத்தனர் என்று கூறுகின்றது.[1] இவற்றால், சகம் 1510, 1514-ஆம் ஆண்டுகளில் அமைந்த சாஸனங்களிரண்டும் அரசரொருவரது ஆட்சிக்காலத்தனவாய் நமச்சிவாயதேசிகரது தொடர்பு கொண்டுள்ளமை கண்டுகொள்க. இப்பெரியார் திருப்பணி பற்றி அவர் வரலாற்றுட்கண்ட சாஸனப்பாடலொன்று அடியில்வருமாறு:—

"தென்னருணை மருவுகுகை நமச்சிவாய
தேவர்சிஷ்யன் குருநமச்சி வாயன் செய்யும்
மன்னுபணி விடையாகப் புலியூர்ச் செம்பொன்
மன்றுடையான் பூசைகொண்டு மகிழ்ந்து காண்க
இந்நிலமெ லாந்தழைக்க வரஞூர்ப் பற்றும்
இலிங்கபுர சாதனக்கல் லெழுதி நாட்டி
நன்னெறிசேர் காலாட்கள் தோழன் [2] சின்ன
நல்லநயி னான்கொடுத்து நடத்தி னானே"

குருநமச்சிவாயர், ஈசுவரஸூ வைகாசிமீ 9உ சிவபதம் அடைந்தார் என்பர்.

---

1. M. E. R. 349 of 1913.—உடையார் என்பது மடாதிபதிகட்குப் பண்டுவழங்கிய சிறப்புப்பெயராகும்.

2. காலாட்கள் தோழன் - தலைவர் சிலர்க்கு வழங்கிய ஒருபட்டப் பெயர் (I. M. P. Tp. 786). நல்லப்பக் காலாட்கள் தோழர் என்ற தலைவர் ஒருவர் உளர் (Ibid. Tp. 785).

"வந்தீச் சுரவருடம் வைகாசித் தேதிநவம்
இந்துநா ணாழிகை யேழரைமேல் - வந்தகுரு
தாண மருணகிரித் தாணுசிவ லிங்கத்து
ளாண னமச்சிவா யன்" (பழம்பாட்டு.)

சகாப்தம் 1514, நந்தனஹூ-ல் இவர் மாணாக்கரது சாஸனம் பிறந்திருத்தலால் அதனிலிருந்து 15-ம் ஆண்டில்—அஃதாவது சக. 1529 (கி. பி. 1607)ம்ஹூக்குச் சரியான ஈசுவரவருஷம் இப்பெரியார் ஐக்கியம் பெற்றவராதல் தெரியலாகும். குருநமச்சிவாயதேசிகரது சிதம்பரமடத்துத்தலைவர்க்குத் திருவிழாமுதலியகாலங்களில் சுவாமியுடன் பல்லக்குமுதலிய விருதுமரியாதைகள் இன்றும் அத்தலத்து நடந்துவருகின்றன என்பர். இப்பெரியாரது பிறவரலாறுகளை, அருணாசலபுராணப் பதிப்பின் முன்னுரைகளுட் (59-82-ம் பக்கம்) கண்டுகொள்க.

---

## 67 துறைமங்கலம் சிவப்பிரகாசமுனிவர்.



இவர், திருச்சிராப்பள்ளிஜில்லாவில் வெங்கை, பழமலை என்ற பெபர்கள்பெற்ற வெங்கனூர்க்கு அந்தாதி, கலம்பகம், கோவை, உலா முதலிய பிரபந்தங்களும், பிரபுலிங்கலீலை, வேதாந்தசூடாமணி, கூவப்புராணம், நன்னெறி முதலியபல நூல்களும் இயற்றிய பெருங்கவிஞராகவும் வீரசைவ முனிவராகவும் விளங்கியவ ரென்பது யாவரும் அறிவர். துறைமங்கலத்தின் தலைவரான இலிங்கசெட்டியார் என்ற பிரபு ஷை வெங்கனூரிற் சிவாலயமொன்று புதியதாகக் கட்டிப் பிரதிஷ்டை செய்தகாலத்தே அத்திருப்பணியை உடனிருந்து நடத்தியும் அவர்க்குப்பின் அதனைச் சிறப்பித்தும் போந்தவர்

அவர் குமாரர் அண்ணாமலை ரெட்டியார் என்ற செல்வர் ஆவர். சிவப்பிரகாசமுனிவர் தம் வெங்கையுலாவில்:—

"பண்டை யறத்தின் படிவமிது வென்னவுருக்
கொண்டவிலிங் கையன் குலமைந்தன் *
* * *
கண்ட குலத்திற் கருதி னிரட்டியாம்
பண்ட குலத்தின் பயனானன் - மண்டலிகர்
நல்லகோ லின்று நவைக்கோ லெனச்செங்கோல்
வல்லகோ லண்ணா மலைவள்ளல் - மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழப் புதவணித்தா - முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
பையுள்போக் கிற்கும் பரஞ்சோதி"

என அணிபெறப்பாடுதல் அறியத்தகும். இதனால், அண்ணாமலை ரெட்டியார், தெலுங்கரான ரெட்டிகுலத்துள் பண்டக் குடியினர் என்பதும், வெங்கனூர்ச் சிவாலயத் திருப்பணியை முற்றுவித்துப் புகழ்பெற்றவ ரென்பதும் பெறப்படும். அவ் வெங்கனூர் ஆலயகோபுரத்துக் கண்ட சாஸனமொன்று—

விஜயநகர வேந்தரான இரண்டாம் வேங்கடபதிராயர் ஆட்சிக்காலத்தே, சகாப்தம் 1545-ம் ஆண்டு ருத்ரோத்காரி வருஷம் வைகாசிமீ 12௳ (கி. பி. 1623, மேமீ 1௳) பண்ட குலத்தவரான லிங்கரெட்டியார் வெங்கனூரில் கோபுர மண்டபாதிகளுடன் கோயில் நிருமித்து, ஸ்வாமியையும் அம்பிகையையும் ஆங்குப் பிரதிஷ்டைசெய்வித்து நித்த நைமித்திகங்களுக்கு வேண்டிய நிலங்களும் அமைத்தனர்—

என்று கூறுகின்றது.[1] இதனால், அச்சிவாலயத்தை அமைத்துப் பிரதிஷ்டித்தவர் இலிங்க ரெட்டியார் என்பது

1. M. E. R. 1, 2 of 1913

தெரியலாம். ஆயின், அஃதமைத்தவர் அவர்குமாரர் அண்ணு மலைரெட்டியார் என்று சிவப்பிரகாச முனிவர் தம் நூலுட் சிறப்பித்துள்ளாரே எனின், தம் தந்தையார் நடாத்திய திருப்பணியை உடனிருந்து நிறைவேற்றியும், அத்தந்தைக் குப் பிற்காலத்தில் அதனைத்திகழ்வித்தும் போந்தவர் அவ் வண்ணுமலையார் என்றே, சாஸனச்செய்தியோடியைய அம் முனிவர்கூற்றைக் கொள்ளத்தகும். சிவப்பிரகாசர் அல்ல மப்பிரபுவின் சரித்திரங்கூறும் பிரபுலிங்கலீலை என்ற நூலினை இயற்றிய காலம் சகவாண்டு 1574 (கி. பி. 1652) என்பது, அந் நூலிறுதிப் பாயிரச்செய்யுளால் அறியப்படுகின்றது. படவே, வெங்கைக்கோயிலின் பிரதிஷ்டாகாலம் கி.பி.1623 ஆதலின், பிரபுலிங்கலீலை பாடப்பெற்றதற்கு 29-வருஷங்கட்குமுன் இலிங்கரெட்டியார் அக்கோயிற்றிருப்பணியை முடித்தவர் என்பது விளங்கும். இதனினின்று, தந்தைசெயலினும் மைந் தர் செயலே பல்லாண்டுகட்குப்பின்னர்ச் சிவப்பிரகாசராற் பாராட்டப்பெற்றதென்பது பெறப்படுகின்றது. இம்முனிவ ரது பிறவரலாறுகளை அவர் பிரபந்தத்திரட்டுப் பதிப்பின் முன்னுரையால் அறிக.

## 68 இரசை வடமலையப்பபிள்ளை

சோணுட்டுள்ள இரையூர்[1] என்ற இரசையிற் கார் காத்த வேளாளர் மரபில் எளியகுடும்பமொன்றிற் பிறந்து, நாயக்கவரசரின் குலகுருவான வைஷ்ணவாசாரியரால் அபி மானித்து வளர்க்கப்பெற்றவராய்த் தம் அறிவாற்றல்களால் அவ்வரசரது ஆஸ்தானத்திற் பெரும்பதவிவகித்தவர் இவர் என்பர். பாண்டிநாடாண்ட திருமலைநாயக்கர் (கி.பி.1623-59)

1. இவ்வூர் ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்ததென்பர்.

சொக்கநாதநாயக்கர் (கி. பி. 1660 - 82) காலங்களில் இவர் தென்பாண்டிநாட்டிலே அரசப்பிரதிநிதியாயிருந்து ஆண்டு வந்தார். திருமலைநாயக்கர் புண்ணியமாக இவர் அறம்புரிந்துள்ள செய்தி சாஸனத்தால் தெரியவருதலின், அந்நாயக்கரே இவரை முதன்முதல் ஏற்று ஆதரித்தவர் என்றுதோற்றுகின்றார்.

"செய்யதமிழ்க் கச்சித் திருமலைய பூபாலன்
வையமுழு தும்புரக்கு மானபரன்...
புண்ணியமாஞ் செல்வம் புரக்குங் கரியமுகில்
வண்ணன் கருணை வடமலையான்" (குழைக்காதர் திருப்பணிமாலை)

என்ற முன்னோர் பாடலடிகளால், இவ்வடமலையார் திருமலைநாயக்காட்சியிலும் பெரும்பதவி வகித்தவர் என்பது தெரியலாம். இவ்வாறு வாழ்ந்த இத்தலைவர் புலவர்கட்குப் பேருபகாரியாகவும் தாமே பெரும்புலமை வாய்ந்தும் விளங்கினர். இவரைப்பற்றி வழங்கும் தனிப்பாடல்களாலும், திருமேனி ரத்தினகவிராயர் என்பார் பாடிய புலவராற்றுப்படை [1], தென்திருப்பேரைத் திருப்பணி மாலைகளாலும் [2], வடமலைவெண்பா, முக்கூடற்பள்ளு என்பவற்றாலும் இத்தமிழ்ச் செல்வரின் தயைகொடை முதலிய பிறவிப்பெருங்குணங்கள் நன்கு வெளியாகின்றன.

"ஏர்விற்றுப் பள்விற் றுடைமையெல் லாம்விற் றிருந்தமனைச்
சீர்விற் றனமுன்னைக் காணுத முன்தெரி சித்தபின்பு

1. இந்நூல், செந்தமிழ்ப் பத்திரிகையில் மகாவித்வான்: ரா. இராகவையங்காரவர்களால் முதன்முதற் கண்டு வெளியிடப்பட்டுளது.

2. இத் திருப்பணிமாலை, 'சென்னை யூனிவர்ஸிட்டி-தமிழ்-லெக்ஸிகன்'பதிப்பாசிரியர் ஸ்ரீ. S. வையாபுரிப் பிள்ளை B.A.B.L. அவர்களாற் பரிசோதித்து வெளியிடப்பெற்றுள்ளது.

போர்விற் றடக்கை யிரையூர் வடமலைப் பூபதியுன்
பேர்விற்று முன்விற்ற தெல்லா மறுபடி பெற்றனமே"

"பாடுவன் பாடுவ தல்லாமற் பாவலர் பாடலுங்கொண்
டாடுவன் செய்வ னிரையூர் வடமலை யன்றிப்புல்லன்
தேடுவன் தேடிப் புதைப்ப னவனுக்குச் செந்தமிழென்
வேடுவன் சேரியி லெவ்வாறு நானம் விலைச்செல்வதே"

என முற்கூறிய கவிராயர் பாடிய தனிப்பாடல்கள் இங் கறியத்தக்கன. அரசரையும் அவரமைச்சரையும் 'ஐயன்' என்ற சிறப்புப்பெயரால் அக்காலத்தவர் கௌரவித்து வந்த வாறே,[1] இவரையும் வடமலையப்ப பிள்ளையன் என்று வழங்கி வந்தனர். இக்காலத்தும் இவர்வழியினர் பிள்ளையன் என்றே அழைக்கப்பெறுவர். அரசியற்றலைவராக வாழ்ந்த இவ்வட மலைபார் 'பாடுவன் பாடுவதல்லாமற் பாவலர்பாடலுங் கொண் டாடுவன்' என்றபடி, பெருநூல்கள் பாடவல்ல புலமைப் பெரியாராகவும் விளங்கினர். ஐயாயிரஞ் செய்யுட்களுடைய மச்சபுராணம் என்றநூல் இச்செந்தமிழ்ச்செல்வரால் இயற் றப்பெற்றதாகும். அந்நூலிறுதியில்—

"மைப்புயல் வண்ணன் மச்சமா யுரைத்த
மச்சமாம் புராணத்தைத் தமிழால்
இப்புவிக் கெண்ணூற் றெண்பத்தி ரண்டாண்
டிசைந்திடு மவ்விய வருடத்
தைப்பசி மதியி லொப்பிலாத் தினத்தில்
அமுதெனக் கனியென யார்க்குஞ்
செப்பிய விரசை வடமலை மகிபன்
செல்வமோ டினிதுவா ழியவே"

என இவர்காலத்துப் புலவரொருவர் பாடிய பாயிரச்செய் யுளால், கொல்லமாண்டு 882 (கி. பி. 1706-7)ல் இப்புராணம்

1. 'கிருஷ்ணப்பநாயக்கரய்யன்,' (இந்நூல் பக். 190) 'வடமலை யண்ணகளய்யன்'—(ஷை பக். 148) எனக் காண்க.

முடிந்து அரங்கேற்றப்பட்டதென்று தெரிகின்றது. நீரேக்குத் தலபுராணமொன்றும் இவராற் பாடப்பெற்றதெனப் புலவராற்றுப்படையாசிரியர் கூறுவர்.[1] மச்சபுராண அரங்கேற்றக்காலமும் சொக்கநாதநாயக்கரின்பேரர் விஜயரங்க சொக்கநாதநாயக்கர் பட்டம்பெற்றகாலமும் பெரிதும் அடுத்துள்ளமை அறியத்தகும். இதனால் திருமலைநாயக்க ராட்சியின் இடைக்காலந் தொடங்கி—அஃதாவது உத்தேசம் 1640 தொடங்கி—கி. பி. 1706-க்குப் பின்பும் நீண்ட ஆயுளுடன் இவர் நிலவுலகிற் பிரபலராய் வாழ்ந்தமை பெறப்படுகின்றது. இத்தகையோராலும் இவர்கீழ் அதிகாரிகளாலும் அமைக்கப்பட்ட சிலாலிகிதங்கள் தென்பாண்டிநாட்டிலே ஆங்காங்கு அமைந்துள்ளன. திருமலைநாயக்கர் தன்மமாக 1712-ல் இவர் கோயிலொன்று கட்டினரென்பது சிங்கம்பட்டிச் சாஸனத்துக்கண்ட காலக்குறிப்பால் தெரிய வருகின்றது.[2] இதனால் தம்மை முதலில் அபிமானித்த அரசரது ஞாபகமாகத் தம் வாழ்நாளின் பிற்பகுதியில் இப்பிள்ளையன் அவ்வறஞ்செய்தவர் என்பது பெறப்படுவதாம். இவரும், இவர்கீழ் அதிகாரஞ்செலுத்திய திருமலைக்கொழுந்து பிள்ளை[3] என்பாரும் சேர்ந்து சொக்கநாதநாயக்கர் காலத்தே கொல்லம் 843 (கி. பி. 1667)ல் அளித்த சிவராமபேட்டைச் சங்கேதப் பட்டயமும்[4], கொல்லம் 839-ல் (1671)ல் இவர் உத்தரவு பெற்றுத் திருமலைக்கொழுந்து பிள்ளை அளித்த சாஸனமும்[5], இப்பிள்ளையனும் தானப்பமுதலியாரும் சேர்ந்து

1. இப்புராணம், நூலாசிரியர் பெயர் குறியாது அச்சிடப்பட்டுள்ளதாம். 2. M. E. R. 296 of 1916-B.

3. 'திருமலைக்கொழுந்துவெண்பா' என்ற நூலொன்று உண்டென்று தெரியவருகின்றது. அஃது இப்பிள்ளையைப் பற்றியதுபோலும்.

4. Ibid. 652 of 1917. 5. Ibid. 480 of 1916-B.

கொல்லம் 838-ல் சில ஊர்கட்குப் பகுதி(வரி)த் திட்டஞ் செய்து உதவிய விக்கிரமசிங்கபுர சாஸனமும்,[1] கல்மண்டபமொன்று கட்டியதுபற்றி அமைந்த பாபநாசத்துச் சாஸனமும்[2] பிறவும், இவராட்சியும் அறச்செயல்களும் அக்காலத்து அப்பிரதேசத்தே பிரபலமாயிருந்தன என்பது குறிக்கின்றன. இத்தகைய செந்தமிழ்ச் செல்வரின் வமிசம் இன்றுவரை நின்று நிலவுவதுபோலவே என்றும் நிலவுக.

---

## 69 மாதைத் திருவேங்கடநாதர் *

மேற்குறித்த வடமலையப்ப பிள்ளையனை யடுத்துத் தென்பாண்டிநாடாண்ட பார்ப்பனத் தமிழ்ச்செல்வர் இவர். இவரூராகிய மாதை என்பது நடுநாட்டுள்ள திருவாமாத்தூர் என்ற தலமாகும். இவரது வரலாறுகளிற் சிலவற்றைத் தெரிதற்குச் சிறந்த கருவியாகவுள்ள நூல், பெயர்தெரியாப் புலவரொருவரால் இவர்மேற் பாடப்பெற்ற **பணவிடுதூது** என்ற பிரபந்தமாம். இதனினின்று, திருவாமாத்தூரில் ஸ்மார்த்தப் பிராமணர்மரபினராய் விளங்கிய பெருமாளையர் என்ற செல்வருடைய இரண்டாம் புத்திரர் இத்திருவேங்கடநாதர் என்றும், கிருஷ்ணையர் என்ற மூத்த சகோதரரையும், மணிவண்ணப்பெருமாளையர், இராஜகோபாலையர், கனகசபாபதி ஐயர், வேங்கடராம ஐயர் என்ற இளைய சகோதரர்களையும் உடையவரென்றும் தெரியவருகின்றன.

---

1. Ibid. 297 of 1916. 2. I. M. P. Tn. 85-p.

* இவர் வரலாற்றினை, செந்தமிழ்ப் பத்திரிகையினும் (தொகுதி-4, பகுதி-12), "Journal of Oriental Research" என்ற பத்திரிகையினும் பல்லாண்டுகட்கு முன்பே விரித்தெழுதியுள்ளேன்.

இவர் பார்ப்பனருட் காணியாளர் வகுப்பைச் சார்ந்தவரென்பர். இத்திருவேங்கடநாதர், தம் அறிவாற்றல்களால் மதுரை நாயக்கர் ஆஸ்தானத்தில் தலைமையதிகாரிகளுள் ஒருவராயிருந்து, மேற்கூறிய சொக்கநாதநாயக்கர்க்குப்பின் அவர் திருமகனுய் கி. பி. 1682-ல் பட்டமெய்திய ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சியில் அவரது மந்திரிகளுள் ஒருவராக விளங்கினர்.

"சொக்கநா தேந்த்ர துரந்தரிகன்-முக்யமுள்ள...ராஜரிக
முத்ரைபெற்ற ரங்கக்ருஷ்ண முத்துவீ ரேந்த்ரனருள்
வைத்தகொற்ற வாசலுக்கோர் மந்திரியாய்" (61-63)

என்பர் பணவிடுதூதுடையார். தென்பாண்டிநாட்டை ஆள்வதற்கு இவரைத் தம் பிரதிநிதியாக அந்நாயக்கர் பின்பு நியமித்தமையால் திருநெல்வேலியைத் தலைமையிடமாகக் கொண்டு அந்நாயக்கர்காலத்தும், அவர்க்குப்பின், அவர் தாயாரும் சிசுவாயிருந்த தம்பேரர் விஜயரங்கசொக்கநாதர் பொருட்டு அரசியலையேற்று ஆட்சிபுரிந்தவருமான ராணி மங்கம்மை காலத்தும் மிக்கதிறமையுடன் அச்சீமையை ஆண்டுவரலாயினர். இவற்றையெல்லாம் பணவிடுதூதாசிரியர் தம்நூலுள் மிகச் சிறப்பித்துப் பாடுவர். இக்காலத்தே, தமிழ்ப்பெரும்புலவர்களிற் பலர், இவரது அபிமான ஆதரவுகட்கு உரியராயினர். அவருள், திருவாரூர் வைத்தியநாத தேசிகரும், படிக்காசுப்புலவரும், பணவிடு தூதுடையாரும் சிறந்தவர்களாவர். குட்டித் தொல்காப்பியம் என வழங்கப்படும் இலக்கணவிளக்கம் என்ற பஞ்சலக்ஷணநூலை, புலவர் பெருமான் வைத்தியநாததேசிகரைக்கொண்டு தமிழுலகிற்கு உதவிய உபகாரி இத்திருவேங்கடநாதரே யாவர்.

"வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு

கல்விக் கெல்லை கருணைக் காகரம்
பெருமாள் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கும்
மேதகு புகழ்த் திருவேங்கட நாதன், ஓதினனாக"

அவ்விலக்கணவிளக்கம் தேசிகரால் இயற்றப்பெற்றதென்று அதன் சிறப்புப்பாயிரத்தொடர் கூறுதல் இங்கறியத்தகும். தமக்கு வரிசையளித்துச் சிறப்பித்த தமிழ்ப் பெருஞ்செல்வர்களிலே, இம்மாதையரதிபரை ஒருவராகப் புகழ்வர் படிக்காசுப் புலவரும்.[1]

"முத்தமிழ்வா ணர்க்குள் முழுநோக்க மென்னிடத்தில்
வைத்தவெங்க டேச மகிபாலன்"

என்று பாடினர் பணவிடுதூதுடையார். இவ்வாறு சிறந்த புலவர்கள் பலர்க்கும் பரமோபகாரியாய் வாழ்ந்த திருவேங்கடநாதர், தாமே தமிழ்ப்பெரும்புலமை வாய்ந்தும் விளங்கினர். வடமொழியில் கிருஷ்ணமிசிரர் என்ற பெருங்கவிஞர் இயற்றியதும் வேதாந்தசாரமானதுமான பிரபோதசந்திரோதயம் என்ற சிறந்த நாடகசரிதத்தை 2000-க்கு மேற்பட்ட விருத்தப்பாக்களில் "மெய்ஞ்ஞானவிளக்கம்" என்ற பெயரால் பெருங்காப்பியமாகப் பாடியவர் இப்பார்ப்பனச் செல்வர் என்பதை அறியாத தமிழறிஞர் இல்லை. வேதாந்த தத்துவ நுண்பொருள்களையெல்லாம் அங்கைநெல்லிக்கனி போல் விளக்கும் இவ்வரியநூலின் சொன்னயம் பொருணயங்கள் கற்றோரெல்லாம் அறிந்து களித்தவை. இங்ஙனம் இருவகைச் செல்வங்களும் நிரம்பியவராயினும், ஜனகனைப்போல

1. "எல்லப்ப னம்மையப்பன் தருதிருவேங்கடநாதனெழிற்சீராம வல்லக்கொண் டையன்மாதை வேங்கடேசுரன்போல வரிசை செய்தே" (தனிப்பா.)

உயர்ந்த ஞானியாக இவர் வாழ்ந்தவர் என்று இவரைச் சிறப்பிப்பர் முன்னோர்.

"மனையறம் பூண்டுநல் வாழ்வின் வைகியும்
அனையபல் கிளைஞரோ டளவ ளாவியும்
நனியுல களித்துமெய்ஞ் ஞான மெய்திய
சனகனைப் போலிருந் தருளுந் தன்மையான்"

(பிரபோதசந். பாயிரம்)

இத்தகையோரது ஆட்சிபற்றிய சாஸனமாக அப்பிரதேசத்தில் ஒன்றுங் காணப்படவில்லையாயினும், திருநெல்வேலி ஜில்லா வன்னிகூடம்[1] என்றவூரின் தலைவனொருவன், நெல்லைநாதர்கோயிற்குச் சில பூமிகள் உதவியசெய்தி கூறும் செப்புப்பட்டய மொன்றில், அத்தலைவன், ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் புண்ணியமாகவும் திருவேங்கிநாதய்யர் புண்ணியமாகவும் கொல்லமாண்டு 858 (கி. பி. 1683)ல் துர்முகி(ஸ்ரீ) அவ்வறஞ்செய்தனன்[2] —என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. பேரரசர்க்கு உட்பட்ட தலைவர்களும் பிறர்ன்மக்களும் தம்மை அபிமானித்த அரசர்பேராலும் அவர் அமைச்சர் பேராலும் அறங்கள் புரிந்து அன்னோர் ஞாபகம் என்றும் நிலவும்படி செய்துவந்தனர் என்பது சாஸனங்களால் அறியப்படுகின்றது.

விசுவநாத முத்துவீரப்பநாயக்கர், செவ்வந்திநாதபிள்ளை, திருவிருந்த பெருமாள்பிள்ளை இவர்கள் புண்ணியமாக, பழுவூர்ச் சேக்கிழார் அரியநயினர் என்பார் செய்த அறச்செயலும் (M. E. R. 343 of 1929-30)

"ஸ்ரீமத கிருஷ்ணப்பநாயக்கரய்யன் தன்மம் அரியநயினர் முதலி தன்மமாக...தம்மு செட்டியார் செய்த கட்டளையும்" (புதுக்கோட்டைச் சாஸனத்தொகுதி, No. 959)

---

1. இதனை, சங்கரநயினர் கோயில் தாலுகா வன்னிக்கோனேந்தல் என்று கருதுவர். 2. I. M. P. Tn. 304-M.

பிறவும் காண்க. ஆணையிடும்போதும், "கிருஷ்ணமகராச ராணை அரிய வடமலையாராணை" என அரசரையும் அமைச்ச ரையும் சேரக்கூறுவர் (இந்நூல் பக். 146). அம்முறையில், ரங்ககிருஷ்ண முத்து வீரப்பருடன் சேரவைத்து இச்சாஸ னங்கூறும் திருவெங்கிநாதய்யர் என்பார் அவருடைய அமைச்சரே என்பதும், அவர் மாதைத் திருவேங்கடநாத ஐயரே என்பதும் தெரியலாம். திருவேங்கடநாதர் என்பது திருவெங்கிநாதர் என உலகவழக்கில்திரிதல் இயல்பே என்க. எனவே, இப்பார்ப்பனச் செல்வரை அக்காலத்துத் தலை வரும் பிறரும் அரசருடன் ஒப்பக்கொண்டு சிறப்பித்து வந்தமை அறியப்படும்.

---

## 70 திருக்குற்றாலம் இராசப்ப கவிராசர்

இவர், "மேலகரம் திரிகூட ராஜப்பகவிராஜர்" என வழங்கப் பெறுவர். திருக்குற்றாலத் தலபுராணம், குற்றாலக் குறவஞ்சி முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டவை என்பதும், தமிழ்ப்புலமையும் வாக்கினிமையும் நிரம்பப் படைத்தவர் என்பதும் கற்றூர்பலரும் நன்கறிவர். இவர் பெருமை, அக்காலத்துப் பாண்டிநாடாண்ட நாயக்கவரச ராலும் அறிந்து பெரிதும் மதிக்கப்பெற்றது. அவ்வரசர் முத்து விஜயரங்க சொக்கநாதநாயக்கர் (கி. பி. 1706-32) ஆவர். அவர், பாண்டிநாட்டுத் திருக்குற்றாலத்துக்கு விஜயஞ் செய்திருந்தகாலத்து, இராசப்பகவிராயரின் பெரும்புலமை யையும் அருங்கவித்திறத்தையும் அறிந்து, அக்குற்றால மலை வளமும், மலைமக்களின் வழக்கவொழுக்கங்களும், ஆங்குக் கோயில்கொண்ட சிவபிரானது மகிமைகளும் விளங்கக் குற வஞ்சிப் பிரபந்தமொன்று பாடும்படி இப்புலவரிடந் தெரி

விக்க, அவர் விருப்பின்படி குற்றுலக்குறவஞ்சி என்ற நாடக நூலை இவர்பாடி அரசர்முன் அரங்கேற்றினர். அப்போது இப்பிரபந்தத்தைக் கேட்டு உவந்த நாயக்கவேந்தர், அக்குற்றுலப்பக்கத்தே வேண்டியபூமிகளை கி. பி. 1718-ல் தாமிரப் பட்டயமூலம் அளித்தனர். இப்போதுள்ள குறவஞ்சிநூல்களுள், இக்கவிராசர் பாடியதே உயர்வுடையதென்பது யாவரும் அறிவர். இக்கவிராசர்க்கு அளித்த அப்பட்டயம் அவர் வமிசத்தவரால் இன்றுவரை சேமிக்கப்பெற்றுவருகின்றதாம். அத்தாமிரசாஸனம் பின்வருமாறு:—[1]

"சாலிவாகன சகாப்தம் கசுச௦-க்குச் செல்லாநின்ற கொல்லம் அகூகஞூ தைமீ ககஉ ராஜமானிய ராஜஸ்ரீ முத்து விஜயரங்க சொக்கநாத நாயக்கரவர்களோம். திருக்குத்தாலம் ராஜப்பகவிராஜநுக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக்கொடுத்தபடி. ஸ்வாமி திருக்குத்தாலநாத சுவாமிபேரில் குறவஞ்சிநாடகம்பாடி அரங்கேத்தினதற்கு மேலச் செண்பகக்காவில் கருப்புக்கட்டி ஊத்துமேட்டில் கல் உ-ல் சங்கிலி அளவு ஹீ ஙவ-யும் ருஉ-யும் விட்டுக் கொடுத்துக் கையாடிக் கொண்டு சந்நிதிப் பிரபந்தவித்வானக நடந்து வருவாராகவும்; இந்த நிலத்துக்கு; வேறே வரி நாட்டுச்சிலவு காவல்கூலி போர்நெல் குடுக்கத் தேவையில்லை யென்று கட்டளை யிட்டபடியினலே இந்தப்படிக்குக் கையாடிக்கொள்ள. (கையொப்பம் தெலுங்கில் உள்ளது) ஸ்ரீராமஜெயம்."

எனக் கண்டுகொள்க. இங்ஙனம், அரசரால் குறவஞ்சிபாடிப் பரிசாக இராசப்பகவிராசர் பெற்ற நிலம் குறவஞ்சிமேடு என இக்காலத்தும் பெயர்விளங்கி, இக்கவிராசர் வமிசத்தவரால் அநுபவிக்கப் பெற்றுவருவதென்பதும், திருக்குற்றுலசந்நிதிவித்வான்களாக அன்னோர் இன்றும் கோயில்மரியாதைகள் பெற்றுவருகின்றனர் என்பதும் அறியத்தக்கன.

---

1. திருக்குற்றுலத்தலபுராணம், நூலாசிரியர் வரலாறு.

## 71 முத்துக்குமாரசுவாமிப் புலவர்.



திருநெல்வேலி ஜில்லா, நாங்குனேரித் தாலுகாவில், இராதாபுரம் என்று வழங்கும் பூசங்குடியில், ஆலயங்கள் சில உள்ளன. அவற்றுள், பிள்ளையார் கோயிற் கிழக்குவாயிலில் கொல்லமாண்டு 967 (கி. பி. 1791)ல் அமைந்த சாஸனமொன்று [1] தமிழ்ப்பாடல்கள் சில உடையதாம். அதனினின்றும் வேறு கல்லெழுத்துக்களினின்றும், அவ்வூர் வரகுணபாண்டியநகரம், தென்னிராசை என முற்காலத்து வழங்கப் பெற்றதென்பதும், அவ்வூரிற் கோயில்கொண்ட சிவபிரான் வரகுணவீச்சுர முடையார், வரகுணபாண்டிய மகாதேவர் என்ற திருநாமங் கொண்டிருந்தனர் என்பதும் தெரிகின்றன. [2] இவ்வாலயத்தின் முகப்பிலுள்ள "ஜயஸ்"(த்வஜஸ்?) தம்பமானது இராஜேந்திரன் எனப்பெயர்பூண்ட" 'பெரிய திருவடிச் சக்கரவர்த்தி' என்ற வேணாட்டரசரால் நிறுவப்பட்டதென்றும், அவ்வரசர் 'ஜடீபந்தனம்' [3] என்ற விசேடத் திருவிழாவை அக்கோயிற்கு நடத்திவைத்தவர் என்றும், ஷை கோயிலை நிருமித்துமுடித்த சிற்பி நமச்சிவாயம் என்பார் என்றும், இச்சாஸனப்பாடல்களைப் பாடிய புலவர் முத்துக்குமாரசுவாமி என்பார் என்றும் அப்பிள்ளையார் கோயிற்

1. M. E. R. Nos. 350, 359 of 1929—30.

2. இங்கே, முதற்குலோத்துங்க சோழனது 48-ம் ஆட்சியாண்டில் அமைந்த சாஸனமொன்றால், குலோத்துங்கசோழீச்சுரர் என்ற திருநாமமும் இம்மூர்த்திக்கு வழங்கியதென்று தெரிகின்றது (Ibid. No. 350).

3. கோயில்மூர்த்தியைப் பீடத்திற் பதியவைத்தற்குப் புரியும் சடங்குவிழா.

சாஸனங் கூறுதல் குறிப்பிடத்தக்கதாகும். வேணுடாகிய திருவாங்கூர் வேந்தர்கள் தமிழறிவும் அபிமானமும் உடையராய் விளங்கியோர் என மேலே நான் கூறிப்போந்தவற்றை இச்சாஸனப்பாடல்களும், இவ்விராதாபுரம் திருமால்கோயிலிற் கண்ட வேறு செய்யுட்சாஸனமும்[1] வலியுறுத்துவனவாதல் கண்டுகொள்க. இவற்றினின்று 18-ம் நூற்றாண்டிறுதியில், முத்துக்குமாரசுவாமிப் புலவர் என்பாரொருவர் வாழ்ந்தசெய்தி தெரியலாம்.

---

## 72 காலந்தெரியாப் புலவர்கள்.



இதுகாறும், வாழ்ந்தகாலம் இன்னதென்று நேராகவும் பிறவழியாகவும் அறியப்பெற்ற புலவரின் செய்திகள் சாஸனமூலம் தெரியவந்தன. இனி, ஒருவகையாலும் காலம் அறிதற்கு இடமில்லாத புலவர்கள் சிலர் உளர். அன்னோரைப்பற்றிக் கல்லெழுத்துக்களால் விளங்கும் வரலாறுகளை எழுதுவேன்.

### (1) ஆதிநாதர்.

புதுக்கோட்டைச்சீமைக் குடுமியான்மலையிற் குகைவடிவாகவுள்ள சிவாலயத்தமைந்த சாஸனமொன்றில் ஆதிநாதர் என்ற புலவரொருவர் கூறப்படுகின்றார். இப்புலவர் பாடியதாக ஆங்கு எழுதப்பட்டுள்ள வெண்பா அடியில் வருமாறு:—[1]

“எங்கணலக் குன்றரைப்பார்த் தேழுலகு மீன்றவுமை
கங்கைபல காணும் நகைசெயுமே—கங்கையுறை

---

1. M. E. R. 361 of 1929—30.

கொங்கே[ய்] கமழ்சடிலம் போய்க்குடுமி யாய்விட்ட
தெங்கே யினிமறைப்பா ரென்று"

எனக் காண்க. திருநலக்குன்றம் என்பது குடுமியான்மலையின் பழம்பெயரென்பது ஆண்டுள்ள பிற கல்லெழுத்துக்களால் விளங்குவதாம். சிகாநாதர் (=குடுமியார்) என்பது சுவாமி யின் திருநாமமாதலின், இவ்வாறு சிலேடைநயம்பெறப் பாடப்பெற்றதென்க. இவ்வெண்பாவைப் பாடிய புலவரின் வரலாறு வேறு ஒன்றுந் தெரியக்கூடவில்லை.

---

## (2) முத்தமிழாசிரியர் பெருநம்பி.

செங்கற்பட்டு ஜில்லா திருக்கச்சூர்க் கச்சபேசுவரர் ஆலயத்துள்ள கல்லெழுத்தொன்று, பொய்யாமொழிமங்க லம் என்ற ஊர், பெருநம்பி என்ற முத்தமிழாசிரியர்க்கு உரியதென்றும், இவ்வாசிரியர் சாத்தனார்வமிசத்து உதித் தவர் என்றும், கடிகையார் என்ற குடியைச் சார்ந்தவரென் றும் கூறுகின்றது.[1] இப்புலவரின் முன்னோரான சாத்தனார், மணிமேகலை யாசிரியரோ என்று ஐயுறற்கிடமுண்டு என்பது பற்றி முன்னருங் கூறினேன்.[2] ஊராட்சிபுரியும் மகாசபைக் குக் 'கடிகை' என்ற வழக்குச் சாஸனங்களில் உண்மையின், அச்சபையினருள் ஒருவராக இவ்வாசிரியரைச் சாஸனவாரா ய்ச்சியாளர் கருதுவர். ஆயினும், இச்சொல் அரசர்க்கு மங்கலக்கவி பாடுவோர், நாழிகைக்கவி கூறுவோர் என்ற பொருள்களில் முன்னூல்களிலே பயில்கின்றது.

"காவன் மன்னருங் கடிகையுங் கடவது நிறைத்தார்"—(2367) என்ற சிந்தாமணித் தொடர்க்கு "மன்னர் கைக்காணியிட்டு

1. M. E. R. 377 of 1906.
2. Ibid. 328 of 1903.

வணங்கினர்; கடிகையார் மங்கலக்கவி பாடினர்'' என்றெழுதிய நச்சினர்க்கினியர் கூற்றினின்று, அப்பொருள் தெரிய வருதல் காண்க. இதனால், மங்கலக்கவியை அரசர்திருமுன் பாடுவோரது மரபைச் சார்ந்தவரே இம் முத்தமிழாசிரியர் எனல் பொருந்தும். திருவண்ணாமலையார்வண்ணம் திருக்காளத்திநாதருலா முதலியன இயற்றிய சேறை ஆசுகவிராசர் என்ற பெரும்புலவர் "கடிகையார் கோலாகலன்" (தமிழ்நா. 238) என்று கூறப்படுவதும், கடிகைமுத்துப்புலவர் என்று, கவிஞரொருவர் பிற்காலத்துப் பெயர்பெற்றிருத்தலும் இங்கு ஒப்பிடத்தகும். இன்னோரெல்லாம் மங்கலக்கவிஞராயிருந்தவரின் வழியினர் என்றே கொள்ளற்குரியர். இனி,

"நாட்டார்மங்கலத்துக் கடிகையான்...ஜயங்கொண்ட சோழக் கடிகை மாராயன், ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் ஆட்டைப் பெரிய திருவிழாவுக்குத் திருக்கொடியேற்று ஞான்று திருப்பறையறைவு கேட்பிக்கும் கடிகையார் ஐவர்க்கு"[1]

கோயிலில் உரிமையளித்துள்ள செய்தி முதலிராசராச சோழனாட்சிச் சாஸனத்துக் கூறப்படுகின்றது. இதனால், வாச்சியம்வாசிக்குந் தொழிலும் இவர்க்குண்டு என்பது தெரியலாம். மேலே நான்கூறிய திண்டிமகவிகளைப்போல, வாச்சியமுழக்கிக்கொண்டு மங்கலக்கவி பாடுவது இவர்தம் வழக்குப்போலும். திண்டிமகவிகளைப்பற்றி நான் கூறியவற்றுள் (பக். 130)

"பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்து திண்டிம முழக்க"

எனவரும் பகழிக்கூத்தர்வாக்கு ஈண்டும் ஒப்பிட்டறியத்தகும். இம் முத்தமிழாசிரியர்பெருநம்பிக்கு உரிமையாகச்

1. S. I. I. Vol. ii, No. 25, p. 125.

சாஸனங்கூறும் பொய்யாமொழிமங்கலம் என்ற ஊர் பிரபலமான பழையபுலவரொருவரது பெயரைக் கொண்டிருத்தலுங் குறிப்பிடற்பாலது.

---

## (3) புலவன் அகளங்கன்.

தென்னார்க்காடு ஜில்லா கடலூர்ச் சிவாலயத்தமைந்த கல்லொன்றில், ஷை கோயில் அக்கியாண்டார் (அக்னீசுவரர்) நித்தியபூசனைக்கு, புலவன் அகளங்கன் என்பார் 1000-குழி நிலம் அளித்துதவினர் என்று வரையப்பட்டுள்ளது.[1] இச்சாஸனம் செய்யுளில் அமைந்ததாகும். புலவன் என்ற அடையாலும் பாடற்சாஸனமா யிருத்தலாலும் இவ்வறஞ் செய்தவர் திருவும் கல்வியுஞ் சேரப்படைத்திருந்த புலவர் என்று தோற்றுகின்றார். அகளங்கன் என்று இவர் தரித்துள்ள பெயரினின்று, இரண்டாங் குலோத்துங்க சோழன் காலத்தவராக இவரைக் கருத இடமுண்டு.

---

## (4) அருணிதி இராசுதேவன்.

இராமநாதபுரம் ஜில்லா, மானவீரன்மதுரை (மானாமதுரை) சோமநாதசுவாமி கோயிற் கிழக்குத் திருமதிலில் உள்ள சாஸனமொன்றனுள்,[2] அவ்வாலயத்துக் கோயில் கொண்ட சிவபிரானையும் உமாதேவியையும் பற்றி அருள்நிதி இராசுதேவன் என்பார் பாடிய செய்யுளொன்று வரையப்பட்டுளது. இதனால், இவர் தமிழ்ப்புலமைவாய்ந்திருந்தவர் என்று தெரிகின்றார்.

---

1. M. E. R. 463 of 1921.
2. Ibid. 441 of 1924.

## (5) காலகாலன்.

சோணுட்டுத் திருக்கடவூர் வீரட்டானேசுவரர் கோயில் மூன்ருங் கோபுரத்தே பாடலொன்று வரையப்பட்டுள்ளது.[1] அது காலகாலன் என்பவராற் பாடப்பெற்றதென்றும், அவர்க்கு ஈழத்தரையன் அன்றிச் சிங்களத்தரையன் என்ற சிறப்புப்பெய ருண்டென்றும் தெரிகின்றன. அவ்வீரட்டத்துச் சிவபிரான் மார்க்கண்டேயர்பொருட்டு யமனைக் கொன்றருளியவ ராதலின், அவர்க்குக் காலகாலதேவர் என்ற திருநாமமு முண்டு. "திருக்கடவூர் உடையார் ஸ்ரீ காலகாலதேவர்" என்பது சாஸனத்தொடர். இச்சாஸனப்பாட் டியற்றியவர் அத்தலத்து இருவகைச் செல்வமும் வாய்ந்து விளங்கியவர் என்று தோற்றுகின்ருர்.

---

## (6) பங்களராயன்.

புதுக்கோட்டைச்சீமை, திருமெய்யம்தாலுகா காரையூர் மாரியம்மன் கோயிலில் உள்ள[2] சாஸனமொன்றில்:—

"பாரார் தமிழ்ப்புலவன் பங்களரா யன்பைம்பொற்
சீரா ரகத்தின்பேர் செப்புங்கால்—ஏராரும்
காராளர் கானு[ர்வ?]ருங் கற்பக வீரரெனும்
பேராளர் தம்முடைய பேர்"

என்ற பாட்டொன்று வரையப்பட்டுளது. இதனுல், இவ்வெண்பாவிற்கூறப்பட்டவர் பங்களராயன் எனப்பெயரிய தமிழ்ப்புலவ ரென்பது, வேறுபுலவரால் அவ்வாறு பாடப்பெற்றிருத்தலால் தெரிகின்றது. இவரது மனையைப் "பைம்பொற் சீராரகம்" என்று இப்பாட்டுச் சிறப்பித்தலின் இப்புல

1. Ibid. 50 of 1906.
2. புதுக்கோட்டைச்சீமைச் சாஸனத்தொகுதி, No. 998.

வரும் கல்விச்செல்வமும் பொருட்செல்வமும் வாய்ந்தவர் என்பதுடன் 'கற்பகவீரர்' என்ற குடிப்பெயருடையவர் என்பதும் புலனுவன. இத்தகைய பெயர், புதுக்கோட்டைச் சீமைக் காரையூர் வேளாண்தலைவர்க்கு உரியதென்பது, அத் தலைவர் ஒருவரை:—

"வாழ்வுகந்து தாழ்வுசெய்யாதான், கற்பகவீரன், வேற்றரசர் மீகாமன் ஆக இந்த விருதாவலியும் பெற்று" [1]

என்று அவ்வூர்ச் சாஸனங் குறித்தலால் அறியத்தக்கது. இதனால், அக்காரையூரினராகத் தெரியும் இப்பங்களராய ரும் அக்குடி வேளாண்தலைவராகவே கருதற்குரியர்.

---

## (7) குறட்டி வரதையன்.

வட ஆர்க்காடு ஜில்லா, திருவல்லத்துச் சிவாலயத்தின் கர்ப்பக்கிருகத் திருமதிலொன்றிற் கண்ட சிலாலிகிதத்தே, திருத்தீக்காலி [2] வல்லத்துக்கோயில் உண்ணாழிகையதிகாரிகள், குறட்டி வரதையன் என்ற புலவர்க்கு, அவர் அக்கோயிற் சிவபிரான்மேல் திருவல்லையந்தாதி பாடியதன்பொருட்டு, அத்தலத்தே 100-குழி நிலம் இறையிலிசெய்து உதவிய செய்தி கூறப்படுகின்றது. [3] இப்பரிசு, பிரமாதீசஷூ அற்பசிமீ உ அளிக்கப்பட்டதென்று, இச்சாஸனத்தே குறிப்புக் காணப்படுவதாயினும், இதனால் இன்ன ஆண்டென்பது விளங்கக் கூடவில்லை. இவரூராகிய குறட்டி, தென்னார்க்காட்

1. Pd. Insc. No. 715, p. 494.

2. தீக்காலி என்ற அவுணற்கு அருள்புரிந்த தலமாகலின் தீக்காலிவல்லம் எனப்படும் (பெரியபுராணம், திருக்குறிப்புத். 30).

3. M. E. R. 233 of 1921; p. 15.

டுத் திருத்தலூர்ப் பக்கத்துள்ளதாகத் தெரிகின்றது.[1] இவ ரியற்றிய அந்தாதிநூல் இப்போது கிடைத்திலது.

---

## (8) கவி அப்பரசவுடையார்.

தொண்டைமண்டலத்துப் பிள்ளைப்பாளையம் என்ற ஊரிலுள்ள கல்லொன்றில், ஏகாம்பரநாதர் கோயில் திருப் பணியின் பொருட்டு, சந்திரகிரிக் கவியான அப்பரசவுடை யார் தன்மமாகச் சில நிலவரிகள் இறக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.[2] இக்கவிக்கு வழங்கிவந்த தமிழ்ப்பெய ராலும், இது தமிழ்ச்சாஸனமாதலாலும், இவர்பொருட்டுத் தன்மஞ் செய்யப்பட்டிருத்தலாலும் இக்கவி தமிழ்ப்புலவ ராகவும் செல்வராகவும் தோற்றுகின்றார்.

---

## (9) வரகவி - ராமலிங்கையர்.

வட ஆர்க்காடு ஜில்லா வாலாஜாபாத்தை அடுத்துள்ள தென்னேரி(திரையனேரி)ச் சிவாலயமண்டபத் திருமதிலுள் அமைந்த சாஸனமொன்று[3]—இலக்குநாயக்கர் முதலிய அரசனதிகாரிகள் வரகவி - ராமலிங்கையர் என்பார்க்குப் பரி சாக (ஜோடியாக)ப் பொற்காசுகள் அளித்தனரென்றும், அங் ஙனம்பெற்ற அந்நிதிமுழுதையும் ஷை கோயிலில் "ஆபத்துக் காத்த நயினர்" என்ற அத்தலத்துச்சிவபிரானது கைங்கரியங் கட்கு இவ்வரகவி உதவலாயினர் என்றும் கூறுகின்றது. இச் சாஸனம் தமிழ்மொழியில் அமைந்துள்ளதனால், இதனுட் குறிப்பிடப்பெற்றவரைத் தமிழ்ப்புலவராகவே கருதல்தகும்.

---

1. M. E. R. 425 of 1925; p. 87.
2. Ibid. 102 of 1923.
3. Ibid. 236 of 1922 - C

## (10) ஏனைப்புலவர்கள்.

மேற்கூறியவர்களன்றி, "ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதமங்கலத்து...வள்ளஹூர்க் கவி நாராயணபட்டன் என்பாரொருவரும் தமிழ்ப்புலவராகத் தோற்றுகின்றார்.[1] காடவராயனைப் பாடிய சோக்கசீயர் என்ற புலவரையும், அதிவீரராம பாண்டியனால் அபிமானிக்கப்பெற்ற திருவண்ணமலைப் புலவன் சிதம்பரநாதன் என்பாரையும்பற்றி மேலேகூறினேன்.[2] இவரன்றி, வைதிக சமயத்தவருள்ளும் சைனருள்ளுந் தொகுதியாகச் சாஸனங்களிற்காணப்படும் புலவர் பலருளர். விருத்தாசலக்கோபுரவாயிலிற் காடவராயனைப்பற்றியுள்ள சாஸனப் பாடல்கள், அவைபாடிய புலவர்பெயர்களைக் குறிப்பன என்பர்.[3] இவ்வாறே 'ஆற்றுவான்பாடி வித்வான்கள்' என்றொரு கூட்டத்தாரும் இருந்தனர் (இந்நூல். பக். 149). இனி, இராமநாதபுரம்சீமை அறப்புக்கோட்டைப் பக்கத்துக் கோவிலங்குளம் என்ற ஊரில், முதற் குலோத்துங்கனது 48-ம் ஆட்சியாண்டில் அமைந்த கல்லெழுத்து, முக்குடையார் (அருகக்கடவுள்) ஆலயமொன்று இருபத்தைவரால் ஆங்கு நிருமிக்கப்பட்ட செய்தி கூறுவதாம். அதனுள், தமிழ்ப்புலமை சிறக்கப்படைத்தவர் சிலரும் அக்கோயிலை நிருமித்தவர் என்றும், அச்சாஸனம் உயரிய செந்தமிழ் நடை யுடையதென்றும் கூறப்படுகின்றன.[4] பாணரான புலவர் சிலரும் அக்காலத்து அரசராற் பெருஞ்சிறப்புப் பெற்று [காண்க.

1. S. I. I. vol. vii, p. 285.
2. இந்நூல், 100-ம் பக்கத்தும், 169-ம் பக்கத்தும் முறையே
3. M. E. R. 74 of 1919 G.
4. "(It) deserves to be noted on account of contents and literary style not generally found in inscriptions"—(M. E. R. p. 99 of 1915)

வாழ்ந்தனர். பாண்டியனொருவன் தான் வென்றுபெற்ற சோணாட்டைப் பாண்புலவனொருவனுக்களித்து அரசாளச் செய்தான் என்பது—

"பொன்னி வளநாடு பாணன் பெறப்புரிந்தான்
சென்னிதிரு மார்பிற்சேல் தீட்டினான் - முன்னே
புரமெறிவார் மண்சுமக்கப் பூபாரங் காத்தான்
தரமறியான் மீனவர்கோன் றான்"

என்ற சாஸனப்பாட்டால்[1] அறியலாம். இவ்வாறே, பாண்டி நாட்டைப் பாண்புலவனாளும்படி ஆறைவாணவரசன் செய்தானென்பர் இதனை—

"பாணன் மதுரைப் பதியாள வைத்தபிரான்
வாணர் புகழ வருமாறை - வாணன்
கரும்போ தகமேசின் கால்பணிவேன் மீள
வரும்போ தகமே வரின்"

"பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணற் கரசளித்த ஆண்டகை" என்பவற்றால் அறிக.[2] இவற்றால், பாணர்கள் அரசராஸ்தானங்களிற் பெரும்புலமைவாய்ந்து அவரது பேரபிமானத்துக்கு உரிமைபூண்டு வாழ்ந்தவர்கள் என்பது பெறப்படும். இங்ஙனமே சாஸனவாயிலாக அறியப்படும் புலவர் வரலாறுகள் வேறுண்டாயினும் அறிந்துகொள்க.

## 73. பெயர்தெரியாப் புலவர்கள்.

மேலே கூறிப்போந்தவற்றால், நூல்களாலும் கேள்வியாலும் அறிந்த புலவர் சிலரைப்பற்றியும், இதுகாறுங் கேட்டறியாத புலவர்கள் பலரைப்பற்றியும் சாஸனமூலம் தெரியவருஞ் செய்திகள் இவையென்பது விளங்கின. இனி, தம்

1. புதுக்கோட்டைச்சீமைச் சாஸனம், No. 652.
2. பெருந்தொகை, 1191, 1188.

பெயர்கள் இன்னவென்ப தறியப்படாமல், அரியபாடல்கள் பலவற்றைச் சிலையெழுத்தில் நிறுவிய இயற்றமிழ்ப் புலவர் களும் எண்ணிறந்தோராவர். அவருட்பலர், உத்தமகவிக ளாகத் தங்காலத்தே விளங்கினவரென்பது, அவர் செய்யுட் களால் உணரக்கிடக்கின்றது. அத்தகையோரை—(1)மெய்க் கீர்த்தி பாடியோர், (2) வீரம்பாடியோர், (3) அறம்பாடி யோர் எனப் பெரும்பான்மைபற்றி மூவகையினராகக்கொள் ளத்தகும். அவருள்—

---

## (1) மெய்க்கீர்த்தி பாடியோர்

தமிழ்ப் பெருவேந்தர்களைப் பற்றித் தாம் இயற்றிய மெய்க்கீர்த்தி என்ற பாடல்வகையால் அவரது கீர்த்திமெய் யினை (புகழுடம்பை) உலகில் என்றும் நிலைக்கவைத்த பாவ லர் பலர் உளர். மெய்க்கீர்த்தியாவது பேரரசனது புகழ்ச் செய்திகளைக் கூறி அவன் தன்பெருந்தேவியுடன் நீடுவாழ்க என்று வாழ்த்தி, அவ்வேந்த னியற்பெயரோடு அவனது ஆட்சியாண்டினைக் கூறும் செய்யுளாம். 'சீர்மெய்க்கீர்த்தி' எனவும் இதனை வழங்குவர்.

"சீர்நான் காதி யிரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியும்
அந்தத் தவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியு மற்றவ
னியற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி"

(பன்னிருபாட்டியல், 311-12)

இவ்வகைப்பாடல் பெரும்பான்மையும் அகவலோசையும் சிறுபான்மை கலியோசையும் கொண்டு சொற்சீரடியான்[1] அமைவதாம். பேரரசர்களான தமிழ்வேந்தர்க்கன்றி, ஏனைய அரசர்தலைவர்க்கு இப்பாடல்வகை காணப்பட்டில. பதினொராநூற்றாண்டு முதலாகவுள்ள சோழபாண்டிய சாஸனங்கள் பலவும் இம்மெய்க்கீர்த்திப் பாடல்களை முதலிற்கொண்டே அவ்வவர்புரிந்த தானமுதலிய செய்திகளை வசனநடையிற் கூறுவன. முதல் இராஜராஜசோழனது மெய்க்கீர்த்தி "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்" என்ற அடியையும், அவன்மகன் இராஜேந்திரனது—"திருமன்னி வளர விருநில மடந்தையும்"[2] என்ற அடியினையும் அவ்வாறுகொண்டு பல அடிகளான் அமைந்தவை. இங்ஙனமே இவர்வழியினரும் பிற்பட்ட பாண்டியர்களும் மங்கலச்சொற்கொண்டு தொடங்கும் இம் மெய்க்கீர்த்திகளைத் தத்தம் சாஸனங்களில் உடையர். இவை, ஆதியில் தனித்தனிப் புலவராற் பாடப்பட்டனவாயினும், குறித்த வேந்தனது ஆட்சிக்காலத்தின் அளவுக்குத் தக்கவாறு அவனது பிற்செய்திகளையுங் கொண்டு பெருகிவந்தன. அஃதாவது—பத்துவருஷ ஆட்சியில் ஓரரசன் புரிந்த வீரமுதலிய அருஞ்செயல்களைக்குறித்து முதலிற் பாடப்பட்ட அடிகளுடன் அடுத்த பத்தாண்டுச் செய்திகளையும் கூட்டிப்பாடி, இங்ஙனமாக அதனடிகளைப் பெருக்கிவந்தனர் என்க. சிறுபான்மை ஓரரசற்கே வெவ்வேறு மங்கலச்சொற்களைக் கொண்டுதொடங்கும் பல மெய்க்கீர்த்திகளும் உள்

1. "தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீ ரடியால், எழிலரசர் செய்தி யிசைப்பர்" (வச்சணந்திமாலை, செய், 34) என்ப. சொற்சீரடியினிலக்கணம் தொல்காப்பியச் செய்யுளியலில் (123) காண்க.

2. வீரசோழிய வுரையுள் (யாப். 19), இம்மெய்க்கீர்த்தித் தொடர் மேற்கோள்காட்டப்பட்டுள்ளது.

என.[1] இக்கீர்த்திப் பாடல்களைச் சாஸனங்கள்பலவும் முதலிற்கொண்டிருப்பதால் ஒருபெயரேவாய்ந்த அரசர்பலருள் இன்னவரசற்குரியது இச்சாஸனம் என்பது தெளியப்படும். இம்மெய்க்கீர்த்தி முழுமையும் அடிக்கடி கல்லெழுத்தாக அமைப்பதிலுள்ள சிரமம்பற்றி இதன் முதற்சீரையேனும் அடியையேனும் அவ்வாறு தலைப்பிற்கொண்டு, தங்காலத்தரசன் இன்னான் என்று சாஸனங்கள் சிறுபான்மை குறிப்பிடுவதும் உண்டு.[2]

இனி, பிரசஸ்தி என வடநூலார் வழங்கும் சாஸனப் பாட்டோடு ஒத்த செய்யுள்வகையை, 11-ம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பாண்டியசாஸனங்களிற் காணலாம். அது, மேற்கூறிய மெய்க்கீர்த்திபோல, மங்கலச் சீர் அன்றி அடியொன்றைக்கொண்டு தொடங்கி ஓரரசனது எல்லாச் சாஸனங்களின் தொடக்கத்தும் எடுத்தாளப்படுவதன்று. குறித்தவேந்தனது தானமுதலிய அறச்செயல்களைப் பாடுமிடத்து, அவற்கு முன்னோரது வரலாறுகளையும் அவனது வீரம் நியாய

1. முதற்குலோத்துங்கசோழனுக்கு— "திருமன்னிவிளங்கும்" "புகழ்சூழ்ந்த புணரி" "புகழ்மாதுவிளங்க" என மூன்றும், இரண்டாங் குலோத்துங்கற்கு—'பூமருவியபுவியேழும்' 'பூமன்னுபதுமம்' 'பூமன்னுபாவை' 'பூமேவிவளர' 'பூமேவுதிருமகள்' என ஐந்தும் பயிறல் காண்க. இங்ஙனந் தொடங்கும் மங்கலச் சொற்கள் வேறுபடினும், எழுத்துப்பொருத்தம் ஒத்தமைந்திருத்தல் நோக்கத்தக்கது.

2. 'ஸ்ரீமைக்கித்திக்குமேல்' (S. I. I. iv, p. 154), 'ஸ்ரீமற்கித்திக்குமேல்' (Ibid. p. 107) என்றிவ்வாறு, 'ஸ்ரீமெய்க்கீர்த்திக்குமேல்' என்பதன் சிதைவான தொடரைப் பிற்காலத்துப் பாண்டிய சாஸனங்கள் வழங்குதல் அறியத்தகும். ஸ்ரீமெய்க்கீர்த்தி என்பது 'சீர்மெய்க்கீர்த்தி' எனப் பன்னிருபாட்டியல்கூறுவதுடன் ஒப்பிடற்பாலது.

முதலியவற்றையுங் குறித்து, பின்னர் அவன் இன்னவறம் புரிந்தானென்று செய்யுணடையிற் கூறுவன. இவைபெரும்பாலும் வடமொழியிலமைந்த பிரசஸ்திசுலோகங்களை முதலில் கொண்டவை. 8-ம் நூற்றாண்டினனான ஜடிலவர்மன் பராந்தகனது சீவரமங்கலம் வேள்விகுடிச் செப்பிதழ்களும், சின்னமனூர்ப் பட்டயமும் இவ்வாறமைந்துள்ளமை காண்க. எனவே, பிரசஸ்தியும் மெய்க்கீர்த்தியும் தம்முள் வேறுபட்ட போக்குடையன என்பது தெரியலாகும். வேள்விகுடிச்செப்பேடு முதலியவற்றிற் காணப்படும் தமிழ்ப் பிரசஸ்திகள் பெரும்பாலும் கலிமுதலியவற்றின் ஓசையும் வடசொற்கலப்புமிகுதியும் சொற்சீரடிகளும் உடையனவாகவும், பிற்பட்ட சோழபாண்டியரின் மெய்க்கீர்த்திகள் பெரும்பான்மை அகவலோசையும் தமிழ்வளமும் உடையனவாகவும் அமைந்தவை. இவ்விருவகைச் செய்யுட்களாலும், அரிய பல சரித்திரச்செய்திகளோடு அக்காலத்துச் சொற்பொருள்வழக்குகள் பலவும் அறிய இடமுண்டு. இங்ஙனமாயினும், அவற்றுள் மெய்க்கீர்த்திகளைப் பாடியவர் இன்னார் என்பது அறிய இடமில்லை. காலந்தோறும் பெருகிவந்தமையால் பாடியோர் பெயர் அவற்றுட் குறிக்கப்பட்டில போலும். ஆனால், முற்கூறியபடி, முதற்கணமைந்த வடமொழிப் பிரசஸ்திகளின் இறுதியில் அவற்றைப் பாடியவர்பெயர்கள் தவறாது கொடுக்கப்பட்டுள்ளன.[1] அவைபோலத் தமிழ்ப் பிரசஸ்தி பாடிய புலவர் பெயரைத் தந்துள்ள சாஸனம் வேள்விகுடிச் செப்பேடு ஒன்றேயாம். ஏனைய அவ்வாறு குறித்திலவாயினும், இத்தகைய புகழ்ச்சிப்பாடல்களால் தம்மரசர்க்குக் கீர்த்தி

1. வேள்விகுடிச் சாஸனப்பிரசஸ்தி, ஸர்வஜ்ஞருது யாஜியாகிய வரோதயபட்டராலும், சின்னமனூர்ச் சாஸனப்பிரசஸ்தி வாகதேவராலும் பாடப்பட்டவை.

மெய்யை நிறுவியவர்கள், அவரபிமானங்கட்குப் பெரிதும் உரிமைபெற்றவர்களும், அவர்தம் பேரத்தாணியை நாளும் அலங்கரித்து வந்தவர்களும், சயங்கொண்டார் கூத்தர் போன்றவர்களுமான பெரும்புலவர்களே எனலாம்.

---

## (2) வீரம்பாடியோர்

இனி, பேரரசர்களும் பிறதலைவர்களும் புரிந்த அரிய வீரத்திறங்களைப் பாடிய பெயர்தெரியாப் புலவர்களும் பலர். மேற்கூறிய மெய்க்கீர்த்திகளில் அரசரின் வீர நியாய தியாகச் செயல்களும் அடங்கியுள்ளனவாயினும் அவருடையவும் பிற தலைவர்க ளுடையவுமான அவ் வீரமுதலியவற்றை அழகாகச் சிறப்பிக்குந் தனிப்பாடல்கள் சிலசாஸனங்களிற் பலவாகக் காணப்படுகின்றன. உதாரணமாக—“பொன்பரப்பினான் மகதைப்பெருமாள்கவி” என்ற தலைக்குறிப்புடன் திருவண்ணாமலைக் கோயிலுள் அமைந்த கல்லெழுத்துக்கள் 22-பாடல்களுடையன.[1] இவை, நடுநாடான மகதமண்டலத்தை ஆறகளூர் (ஆறகழூர், ஆறை) என்ற நகரிலிருந்தாண்ட “பொன்பரப்பினான் வாணகோவரையன் ராஜராஜதேவன்” என்ற பாணவமிசத்து அரசனது[2] வீரத்திறத்தைப் பற்றி அமைந்தவை.

“தாரு முடியு முரசுந் தமக்குரிய
பாரு முடன்பெறுவர் பார்வேந்தர்—வீரப்
பெருமாள் மகதேசன் பேரெழுதித் தத்தந்
திருமார்பி னாலோலை [2] செய்து”

---

1. செந்தமிழ், தொகுதி, 3, பக். 427—32.

2. ஆளோலை - அடிமையோலை; “எழுது மாளோலை வாங்கி” என்பது பெரியபுராணம் (தடுத்தாட். 45). திருமார்பில் ஆளோலை

"வன்மதுரை விட்டு வடகடலான் மால்வழுதி
தென்மதுரை விட்டின்று தென்கடலான்—நன்னுதலாய்
மல்லார்தோண் மாகதர்கோ மான்முனிந்தால் மன்னவருக்
கெல்லாங் கடலோ விடம்"[1]

"தீய்ந்து பொழிலாகா பேர்ந்து நகராகா
தூர்ந்து மணிநீர்த் துறையாகா—ஏந்துமுலை
பூணகா[2] மாரி விழலாகா பொன்னெடுந்தேர்
வாணகா[3] வென்னுதார் மண்"

என்பன முதலாகச் சொன்னயமும் பொருணயமுமுள்ள செய்யுட்களை அச்சாஸனத்துக் காணலாகும். இவ்வாணன் வழியினரும் தமிழ்ப்புலவர்களைப் பெரிதும் ஆதரித்துவந்தவர்கள் என்பது அன்னுரைப்பற்றிய தனிப்பாக்கள்[4] பலவற்ருல் அறியக்கிடக்கின்றது. இவ்வாறே, விக்கிரமபாண்டியன்[5] முதலிய வேந்தரையும், கோப்பெருஞ்சிங்கன் என்ற பல்லவகுலத்தலைவனையும், பிறரையும் பற்றியமைந்த வீரப்

---

செய்தலாவது பணிந்த பகைவர்க்கு அவரதுமார்பில் 'இன்னுர்க் கடிமை' என்று பச்சைகுத்திவிடுதல். இதனை 'மார்பெழுத்தாக்கல்' என்ப (ஈடு. 5, 10, ப்ரவேசம்).

1. "மால் (கண்ணபிரான்) வடமதுரையைவிட்டு அன்று வடகடலையும், வழுதி(பாண்டியன்) தென்மதுரையைவிட்டு இன்று தென்கடலையும் அடைந்தனர் எ - று. மாகதர்கோமான் என்பது வடநாட்டு மகததேசாதிபனை ஜராஸந்தனையும், தென்னுட்டு மகத வேந்தனை வாணகோவரையனையும் குறிக்கும். மால் அடைந்தது மேல்கடலாயினும், வடகடல் என்றது தென்கடலைநோக்கி என்க.

2. பூண் ஆகா - பூணணிதற்கு உரியவாகா.

3. கா என்னுதார் - காப்பாயாக என்று பணியாதார்.

4. பெருந்தொகை, 1180—1192; 5. ௸. 917 - 24

பாடல்களைச் சாஸனங்களில் மிகுதியுங் காணலாம். இன்னோரது வெற்றிச்செயல்கள் தமிழகத்துமட்டுமன்றி, வேற்றுநாடுகளினும் நிகழ்ந்தனவாதலின், ஆங்கும் இத்தகைய பாடல்கள் கல்லெழுத்திற் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அனந்தபுரம் ஜில்லா கொத்தசிவரம் பாதசிவரங்களில், முதலிராஜேந்திரன்சேனாபதியின் வெற்றித்திறங்களைப்பற்றியுள்ள வெண்பாக்களை முன்னரே (பக். 56) குறிப்பிட்டுள்ளேன். இவற்றால், போர்க்களம்பாடிய தமிழ்ப்புலவர்கள் இந்நாட்டினும் பிறநாட்டினும் பலர்விளங்கினர் என்பது உணரப்படும். இவ்வாறே, இலங்கைத்தலைநகரமான கொழும்புமாநகர் மியூஸியத்தில் உள்ள சாஸனமொன்றில்:—[1]

"கங்கணம்வேற் கண்ணிணையாற் க[ா]ட்டினார் காமர்வளைப்
பங்கயக்கை மேற்றிலதம் பாரித்தார்—பொங்கொலிநீர்ச்
சிங்கைநக ராரியனைச் சேரா வனுரேசர்
தங்கண் மடமாதர் தாம்"

என்ற அழகிய வெண்பா வொன்று காணப்படுகின்றது. சிங்கையாரியர் என்பார் யாழ்ப்பாணத்தை ஆட்சிபுரிந்த தமிழரசர்களாவர். இவரைப்பற்றிய தனிப்பாடல்கள் பலவாம்.[2] இரகுவமிசம்பாடிய அரசகேசரியும், தட்சிணகைலாசபுராணம், செகராசசேகரம் என்ற நூல்கள்பாடிய செகராசசேகனும், அந்தகக்கவி வீரராகவமுதலியாரால் சிறப்பிக்கப்பட்ட பரராசசேகரனும் இவ்வமிசத்தவர்களே யாவர். இப்பாடல் கூறும் ஆரியசக்கரவர்த்தி 13-ம் நூற்றாண்டினன் என்பர். இவற்கும், அனுரை என்ற அனுராதாபுரத்தையாண்ட சிங்

1. S. I. I. Vol. iv. No. 1413.
2. பெருந்தொகை, 1205 - 13, 1526.

களவேந்தான பராக்கிரமபாகுவுக்கும் நடந்த போரில் முன்னவன் அடைந்த வெற்றியைக் கூறுவது இவ்வெண்பா என உணர்க.[1]

## அறம்பாடியோர்

தமிழகத்தில் முன்னோர் புரிந்துவந்த போறங்களிலே, தெய்வவழிபாடு பெருகற்பொருட்டுச் செய்துபோந்த தருமச்செயல்களே சாஸனங்களிற் பெரிதும் கூறப்படுவன என்பது பலரும் அறிவர். பன்னூறாண்டுகள்வரை அழியாமல் நிலைத்திருக்கும்படி கோயில் முதலியவற்றைச் சிற்பத்திறம் விளங்கக்கட்டித் தெய்வங்களின் நித்தநைமித்திக வழிபாடு கட்கு அறப்புறங்கள் அமைத்தும் திருப்பணிகள் புரிந்தும் போந்த தருமசீலர்கள் அளித்த சாஸனங்களிலே பாடல்களாகக் காணப்படுவன பல. ஒருசாரிடங்களில் அவ்வறச் செயல்முழுதையும் செய்யுளுருவில் அமைத்த சிலாலிகிதங்களும் உண்டு. முதல் இராஜராஜசோழனது அதிகாரிகளுள் ஒருவனாகவிளங்கிய வீதிவிடங்கன் கம்பன் என்பான் திருக்கோவலூர் வீரட்டானேசுரர் கோயிலினும், கோப்பெருஞ்சிங்கன் என்பான் திருவண்ணாமலையினும், முதற் குலோத்துங்கன் சேனாபதியான மணவிற் பொன்னம்பலக் கூத்தன் என்பான் சிதம்பரம் திருவதிகைகளினும் அமைத்த சிலையெழுத்துக்கள் இத்தகையனவே.[2] இவை பெரும்பாலும் ஆசிரியம் வெண்பாக்களில் அமைந்து சொற்பொருள் வளங்களாற் பொலிவனவாகும். வைதிகசமயக் கடவுளர்க்கன்றிச் சைன பௌத்தசமயப் பெரியோர்க்கும் இன்னோர் அமைத்த சாஸ

1. Sketches of Ceylon History, p. 47.

2. பெருந்தொகை, 1047; 1059—1119; S. I. I. Vol. viii, pp. 39, 41.

ணப்பாடல்கள் சிலவுள. அவற்றுள்—வட ஆர்க்காடு ஜில்லா பூண்டி ஜினாலயத்தே, சம்புகுலத்து அரசனொருவன் செய்த அறச்செயல்கள்பற்றிய [அழகிய செய்யுள் மாதிரிகைக்காக ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. [2] அது வருமாறு:—

* * * சிறப்பருளிக்
கொற்றவன் மகிழ்ந்த கொள்கைய னாகி
மெய்த்தவத் தீர்க்கு வேண்டுவ தியாதென
அத்தவ னுரைப்போனின்; னகன்றலை ஞாலத்துச்
சயங்கொண்ட சோழ மண்டலந் தன்னிற்
பயன்படு சோலைப் பல்குன்றக் கோட்டத்து
வேண்டியது சுரக்கு மேயூர் நாட்டுப்
பூண்டி யென்பது காண்டகு திருநகர்
சீயன் சம்புமன் திரு[வறப்· பு]றமாப்
போய காலத்துப் புரந்துடன் வந்தது
அறநெறி வளர வருள்நமக் கென்ன
மறமலி தானை மன்னர் மன்னன்
சினவரன் றனக்குச் செம்பொற் கோயில்
இன்றக வருளி நின்றுநீடு விளங்க
தீர வீர சினாலய மென்றுதன்
பேர்பொறித் தமைத்துப் பெருஞ்சிறப் பியற்றி
முனிகள் பூண்டியென் றினிதினி னடப்ப
எல்லை தழுவிய விரும்பே டுட்பட
நல்லறந் தழைப்ப [நன்]கமைத் தனனே
அஃதான்று

2. S. I. I. vii, pp. 26—7.

அணிநக ரதன்பெய ரெல்லை யாவதும்
கணியி லுப்பைக்குக் காண்டகு மேற்கும்
நெருநற் பாக்கத் தெல்லைவட மேற்கும்
பொருநற் குன்றிப் புனல்யாற்று வடக்கும்
குலாமலி குண்டிகைத் துறைக்குவட கிழக்கு
மிலாறை யாதித்தமங்கலத் தெல்லைக்கே கிழக்கும்
இரும்புனற் பொய்கை மேயூ ரெல்லை [...ந்ததென்கிழக்கு]
மல்லற் றொல்சீர் மறையோ ராதை
யெல்லை நிலத்துக் கிசைந்த தெற்குமிவ்
வாத னூரி லகன்பே ரெல்லையிற்
பீலி மடுவிற்குப் பிறங்குதென் மேற்கும்
எண்டிசை மருங்கினு மியன்ற வெல்லையிற்
குண்டிகைக் கல்லு நாட்டிக் கண்கவர்
கொல்லை நன்னிலங் குறைவின்றி விரிந் [ததன்]
னெல்லை முற்று மிறையும் வரியும்
அந்த ராயமு மாயமு மமஞ்சியும்
வந்தன பிறவு மாற்றி வளமலி
மாளிகை யெடுக்கவு மணிக்குலைக் கமுகு
நாளி கேரமு நன்குட னாக்கவும்
கரும்புஞ் செந்நெலு மொருங்குட னடவும்
சண்பகந் தமனகஞ் சாதி கேதகை
வண்கழு நீருடன் மலர்பல வியற்றவும்
[ஆலையு]ஞ் செக்கு மமைக்கவு மருளிச்
சாலையுந் தவமுந் தருமமுந் தழைப்பச்
செம்பிலுங் கல்லிலுஞ் செய்து தன்புகழ்
அலர்கதி ரளவுஞ் செல்ல
மலர்தலை யுலகின் வாழ்வமைத் தனனே"

இத்தகைய கல்லெழுத்துப் பாடல்களைத் தமிழகத்துமட்டு மன்றித் தெலுங்கு கன்னட ஈழநாடுகளினும் காணலாகும். தெலுங்கு தேசத்துள்ள திராக்ஷாராமம்[1] என்ற ஊர் முற்காலத்தே இடர்க்கரம்பை என்னுந் தமிழ்ப்பெயர் பெற்றிருந்தது. இங்குள்ள பீமேசுவர ராலயத்துக் கண்ட தமிழ்ச் சாஸனங்களில், முடிகொண்டான் என்ற தலைவனை—

"இயன்மேவு தோளபயற் கிருபத்தை
யாண்டதனி லிடர்க்க ரம்பைச்
செயன்மேவு பீமீச்சுரர்க்குத் திருநந்தா
விளக்கொன்று திருத்தி னனே" (இந்நூல், பக். 57)

என்றும், நின்றாடுவான் என்ற தலைவனை—

"இம்பர் நிகழவிளக் கிட்டா னிடர்க்கரம்பைச்
செம்பொனணி வீமீச் சுரந்தன்னில்—உம்பர்தொழ
விண்ணுய்ய நின்றாடு வானுக்கு வேலைசூழ்
மண்ணுய்ய நின்றாடு வான்"

என்றும்—அவர்கள் திருநந்தாவிளக்குவைத்த அறச்செயல்களைப் பாடல்கள்[2] புகழ்தல் காண்க. இங்ஙனமே, கன்னடநாட்டினும் சாஸனப்பாடல்களைக் காணலாம். நுளம்பபாடியி லுள்ள கைவாரநாட்டுச் சோமீச்சுரத்தும், விதிர்ச்செட்டி யும் உதயமார்த்தாண்டப் பிரமராயன் என்ற பார்ப்பனத் தலைவர் செய்த அறச்செயல்களைப் புகழ்ந்து அகவற்பாவினும் கலிவெண்பாவினும் முன்னோர்பாடிய நீண்ட செய்யுட்கள் அறியத்தக்கவை.[3] அங்ஙனமே—

1. இவ்வூர், கோதாவரி ஜில்லா, ராமசந்திரபுரந் தாலுகாவில் உள்ளது.

2. S. I. I. iv, pp. 470, 337

3. பெருந்தொகை, 1122—3; Ep. Carn. Vol. x, pp. 111,138.

"மயிலைப் பதித்துற வன்னமம்மை நாத னறம்வளர்த்துக்
கயிலைப் பதித்திரு வேகம்ப நாதர் கழலடைந்தான்
செயலிற் புகுந்தினி யிவ்வறங் காக்கிற் சிவலோகமாம்
மயலிற் புகுந்திது மாற்றிடிற் கூற்றுவன் வாய்க்கிரையே"

"கொடுத்தா னறம்பெற்றான் கொற்றவனைப் பின்னை
யடுத்தா னறங்காத்தல் வேண்டும்—கடுத்ததனை
மாற்றினா னுற்ற நரகாளு மற்றதனைப்
போற்றினான் [வீடு புகும்.?]

என, முன்னோரது அறங்களைக் காப்பதுபற்றி அக்கன்னட நாட்டுக் கல்லெழுத்துப்பாடல்கள் கூறுவதும் காண்க.[1] இனி, இலங்கையிலுள்ள அநுராதாபுரத்துச் சாஸனமொன் றன்முடிவில்,[2]

"போதி நிழலமர்ந்த புண்ணியன்போ லெவ்வுயிர்க்குந்
தீதி லருள்சுரக்குஞ் சிந்தையான்—ஆதி
வருதன்மங் குன்றாத மாதவன்மாக் கோதை
ஒருதன்ம பால னுளன்"

என்ற பாடல் காணப்படுகின்றது. இதனால், மாக்கோதை தன்மபாலன் என்ற பௌத்தப்பெரியாரது அறத்திறம் புகழப்படுதல் அறியலாகும். இவ்வாறே, முதல் இராஜராஜ சோழனாட்சியில் குணவீரமாமுனிவர் என்ற சைனப்பெரியா ரொருவரது அறச்செயல்—

"அலைபுரியும் புனற்பொன்னி யாறுடைய சோழன்
அருமொழிக்கி யாண்டிருபத் தொன்றாவ தென்றுங்
கலைபுரியு மதிநிபுணன் வெண்கிழான் கணிச்[சைக்]
காமருபொற் சூரியன்ற னமத்தால் வாம

1. Ep. Car. ix, 48; Ibid. x, 31.
2. S. I. I. iv, No. 1405.

நிலைபெற்றுங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடுழி யிருமருங்கு நெல்விளையக் கண்டோன்
கொலைபுரியும் படையரசர் கொண்டாடும் பாதன்
குணவீர மாமுனிவன் குளிர்வைகைக் கோவே"

(S. I. I. i, 95)

என இந்நாட்டிற் புகழப்பட்டுள்ளமையும் அறிபற்பாலது. இம்முனிவர் நேமிநாதவாசிரியரான குணவீரபண்டிதர்க்குக் காலத்தால் முற்பட்டவராவர். இவ்வாறு பிறநாடுகளில் அமைந்த சாஸனங்கள்யாவும், அந்நாடுகளிலும் தமிழ்மணங் கமழவிரும்பி முற்காலத்தே பெரும்புலவர்கள் பாடியவை என்றே சொல்லத்தகும். இங்ஙனமாக மெய்க்கீர்த்தி, வீரம், அறம் முதலிய வகைபற்றியமைந்த செய்யுட்களையெல்லாந் தொகுக்கக் கூடுமாயின், அவை இரண்டாயிரத்துக்குமேற் படுவனவாம். சொற்செறிவும் பொருட்பொலிவும் வாய்ந்த இத்தகைய செய்யுட்களைப் பாடியோர் இன்னார் என்பது தெரிய இடமில்லையேனும், அவரனைவரும் அவ்வவ்வரசர், தலைவர்களின் பேரபிமானத்துக்கும் ஆதரிப்புக்கும் உரியவர்களாய்த் தமிழ்வளர்ச்சி புரிந்த பெருங்கவிஞர்களே என்பது திண்ணம்.

முற்றும்.

---

## சாஸனமுதலிய
## மேற்கோட்பாடலின் முதற்குறிப்பு.

---

# பொருட்குறிப்பகராதி.



# அநுபந்தக் குறிப்பு

பக். வரி.

18—10:—பாச்சிற்கூற்றம் என்பது சோணாட்டுப்பகுதியாகும் (I. M. P. Tp. 195).

,, 18:—அமுர்தியூர் என்பது புதுக்கோட்டைச் சீமையைச் சார்ந்தது (Insc. of the Pudukkottai State, p. 476).

50 27:—......பெருமானடிகள் என்பதன்பின்—(M. E. R. 1931—2, p. 51.) என்று சேர்க்க.

84 5:—தியாகசமுத்திரம் என்பது அபயன் மகன் விக்கிரம சோழன் பெயர் (விக்கிரம. உலா. கண்ணி-216, 331; M. E. R. 1928-9, p. 75.) தியாகாபரணன் என்பது முதல் ராஜாதிராஜ சோழன் சாஸனத்துப் பயில்வதால், அவனுக்கோ அவன்முன்னோனுக்கோ உரிய பெயராகும் (Ibid. 321 of 1912).

111 13:—படைப்பற்று (Insc. of the Pd. State. No. 969.)

114 7-8:—நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், அடியார்க்கு நல்லார் முதலிய உரையாளர்களைப்பற்றிய சாஸனங்கள் கிடையாவேனும், அவர்கட்குரிய பெயர்கள் தெய்வங்கட்கும் மக்கட்கும் பண்டு வழங்கியன வென்பது அடியில்வரும் சாஸனப்பகுதிகளால் தெரியலாம்:—
**நச்சினார்க்கினியர்**— (1) மதுரைஜில்லா, பழனிப் பிரதேசத்துப் பெரியகோட்டைச் சிவபிரான் திருநாமம் (498 of 1907.), (2) கொங்குச் சோரான வீரராஜேந்திரதேவன் (A. D. 1207—52) மகற்குக் கண்டியதேவரான நச்சினார்க்கினியர் என்பது பெயர்(192 of 1909), (3) "நறையூர்கிழவன் அரையன் நச்சினார்

க்கினியன் (S. I. I. vi, 17.), (4), மற்றும் M.E.R. 1931—2, p. 51—முதலியன கண்டுகொள்க.

தெய்வச்சிலையார்—(1) அரையன் தெய்வச்சிலையான் எடுத்தகை யழகியான் (31 of 1920.), (2) விக்கிரம பாண்டியக்காலிங்கராயரான தேவச்சிலைப் பெருமாள் (391 of 1916).

அடியார்க்கு நல்லார்:—புதுக்கோட்டைச்சீமைச் சாஸனத் தொகுதி (Insc. of the Pudukkottai State) யில் "அடியார்க்கு நல்லான். சயபாலர் (No. 809), வேதர் அடியார்க்கு நல்லார் (No. 1072) முதலியன (பக். 438, 536, 602) காண்க.

இவ்வாறே புலவரடியான் என்று தலைவர் பெயர் பெறுதலும் (S. I. I. vii, p. 447), மனவாசகங்கடந்தார் (ஷை. p. 254), மண்டல புருஷன் (M. E. R. 206 of 1930—1), துணைவீரதேவர் (441, 227 of 1901) முதலிய ஆசிரியர்பெயர்கள் பண்டைமக்கட்கு வழங்கியிருத்தலுங் கண்டு கொள்க.

157 22:—அனந்தவீரிய வாமனர் என்ற சைனமுனிவரொருவர் மூன்றாங்குலோத்துங்க சோழன் காலத்தும் இருந்தவர் என்பர் (Tirupparuttikunram and its Temples, pp. 42—3).

201 16:—இலக்கு நாயக்கர் 16-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்ட நரசிங்கதேவ மகாராயரின் அதிகாரியாதலின், வரகவி ராமலிங்கையரும் அக்காலத்தவர் ஆவர் (M. E. R. 1922, P. 76).

203 20:—புதுக்கோட்டைச்சீமை ஆலங்குடிச் சிவாலயத்துள்ள சாஸனமொன்றில் (No. 1025) வாணன் எனப்பெயரிய வீரனை தலைவனொருவன்—

"வைத்து வணங்குவன் வன்னெஞ்சன் வாணனேன்
[சுத்த]மலர் தூவித் தொழுதிடுவன்—முத்தெறிநீர்
பேரூரான் பாத[மலர் பே]ணு[வார்] பெய்கழற்கால்
தாரூருஞ் சென்னியிலே தான்"

என்றுபாடிய வெண்பாவொன்று வரையப்பட்டுளது. பேரூரான் - பேரூராண்டார் என்ற வையூர்ச் சிவபிரான். இவ்வாணன், வாணராயர் எனப்படுவர் (No. 1030). இதனால், இவரும் காலந்தெரியாப்புலவருள் ஒருவராகக் கொள்ளற்குரியர்.

208 ,, குலசேகரபாண்டியன்மேல் வீரவெண்பாமாலை பாடிய புலவரும் வீரம்பாடியோருள் ஒருவரென்பது குறிப்பிடத்தகும். இம்மாலையைப்பற்றி, இந்நூல் 153, 168-9 ஆம் பக்கங்களிற் காண்க.



## பிழையுந் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 57 | 6 | இவனது | இவருள்வாணனது |
| ஷை | 11 | இவ்வாணனை | முடிகொண்டசோழனை |
| 74 | 1 | 47 | 74 |
| 80 | 28 | 8 | 91 |
| 84 | 5 | தியாிகாசமுத்திரம் | தியாகசமுத்திரம் |
| 104 | 10 | தென்னுற்றுப் | தேனுற்றுப் |
| 115 | 6 | ரஸநாமநாம | ரஸமாமநாமஃ |
| 121 | 18 | முதுசூரியா | முதுசூரியர் |
| 156 | 23 | மேருமந்தரப் | மேருமந்தரபுராணப் |
| 160 | 9 | கட்சி | ட்சி |
| 199 | 17 | தமிப்புலவன் | தமிட்புலவன் |

Printed at the R. G. Press, G. T., Madras.